# சங்க இலக்கியங்களில் பாடாண் திணை புலப்படுத்தும் ஆளுமை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர்(பி.எச்.டி) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**ச. சதானந்தவேல்**

பதிவு எண்-1355/2016

நெறியாளர்

**முனைவர். கரு.முருகன்,**

தமிழ் உயராய்வு மையம், தமிழ்த்துறை,

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி.

தேவகோட்டை.




## அழகப்பா பல்கலைக்கழகம்

தேசிய தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA:3.64) தகுதி பெற்றது.

காரைக்குடி - 630 003

பிப்ரவரி - 2019

முனைவர். கரு. முருகன்,

தமிழ் உயராய்வு மையம்,

தமிழ்த்துறை,

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,

தேவகோட்டை – 630 303.

நாள் : 11.02.2019

# நெறியாளர் சான்றிதழ்

"**சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை**" என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ்த் துறையில் முழு நேர முனைவர் பட்டத்தின் ஒரு பகுதியாக ச. சதானந்தவேல் தன் ஆய்வுக் காலத்தில் ஆய்வு நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் சமர்ப்பிக்கப்படவில்லை எனவும் இவ்வாய்வேடு அவர் தம் சொந்த முயற்சியில் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம்: (முனைவர். கரு. முருகன்)

நாள்: நெறியாளர்.

துறைத்தலைவர் முதல்வர்

ச. சதானந்தவேல்,

முனைவர் பட்ட ஆய்வாளர்,

தமிழ்த்துறை,

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,

தேவகோட்டை – 630 303.

நாள் : 11.02.2019

**ஆய்வாளர் உறுதிமொழி**

***"சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை"*** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ்த் துறையில் முனைவர்ப் பட்டத் தேர்வின் ஒரு பகுதியாக அளிக்கப் பெறும் இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் எந்தப் பட்டத்திற்கும் சமர்ப்பிக்கப்படவில்லை என உறுதியளிக்கிறேன்.

(ச. சதானந்தவேல்)

ஆய்வாளர்.

உறுதிக் கையொப்பம்

முனைவர். கரு. முருகன்,

தமிழ் உயராய்வு மையம்,

தமிழ்த்துறை,

ஸ்ரீ சேவுகன் அண்ணாலை கல்லூரி,

தேவகோட்டை – 630 303.

## நன்றியுரை

அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்த வாய்ப்பளித்த, முனைவர். ஜி. சேவியர், முதல்வர் அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர்.அ.மாரிமுத்து அவர்களுக்கும் முதற்கண் என் நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

என்னை ஆய்வு மாணவராக ஏற்று தலைப்பு தெரிவு செய்து, தெளிவான விளக்கம் கொடுத்து, ஆய்வு ரீதியிலும், ஆசிரியர் என்கிற முறையிலும் ஆய்வுப் பணியில் ஊக்கம் தந்து நெறிப்படுத்திய பேராசிரியர் முனைவர். கரு. முருகன் அவர்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர்ப் பட்ட ஆய்வில் உதவிய தமிழ்த் துறைப் பேராசிரியர்கள் பேரா.இரா.கண்ணதாசன், முனைவர். மு.சு.கண்மணி, பேரா.வி.முத்தழகு கணேசன், முனைவர். மு.ரெத்தினேஸ்வரி, பேரா.ச.இளங்கோ, பேரா.சு.காளிமுத்து, அனைவருக்கும் என் நன்றியினை சமர்பிக்கின்றேன். எனது ஆய்வேடு சீரும் சிறப்புமாய் அமைய உதவி புரிந்த நூலகத்தாருக்கும் மற்றும் பேராசிரியர் மு.பழனியப்பன் அவர்களுக்கும் நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

வளர்த்து ஆளாக்கி கல்வியால் மட்டுமே தன்னை உயர்த்திக் கொள்ளமுடியும் என என்னை மேம்படுத்திய தந்தை ம.சரவணன் அவர்களுக்கும், தாயார், ச.முருகேஸ்வரி அவர்களுக்கும், என்னோடு பிறந்து நல்வழிப்படுத்திய என் சகோதரர் ச.குமார், என் அன்புத் தங்கை திருமதி சரண்யாஇராஜேந்திரன், என் வாழ்க்கையின் இணையர் என் செயல்களின் முதல் பாராட்டுரையாளர் ச.விற்கோ அவர்களுக்கும், என் ஆய்வு தொடர்பான தரவுகள் திரட்ட உதவி புரிந்த முதுகலை

வணிகவியல் மாணவர்கள் சங்கர், பிரசாத், எட்வின், தினேஷ் ஆகியோருக்கும், ஆய்வேட்டினை உருவாக்கித்தந்த “மாணவர் உலகம்” கணிணி தட்டச்சகத்திற்கும், தட்டச்சாளர் செல்வி கோ. வினிதா அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றிகள்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| நற். | - | நற்றிணை |
| தொல். பொருள் | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டி. | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பதி.பதி. | - | பதிற்றுப்பத்து பதிகம் |
| புறம். | - | புறநானூறு |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மேலது. | - | மேலே கூறிய நூல் |

## பொருளடக்கம்

# <u>முன்னுரை</u>

உலகத் தமிழ்ச்சான்றோர் தொகுத்துப் பேணிய தமிழ்ச் செல்வங்களுள் சங்க இலக்கிய நூல்கள் ஓர் ஒப்பற்ற ஒளிர்மணிக் கோவையாக திகழ்கின்றன. அருளும் ஆண்மையும், பண்பும் பாசமும், பாவும் பாவலரும், இசையும் இசைப்போரும், அரசும் நாடும், மக்களும் மன்னரும், அன்பும் பண்பும், உயிர்ப்புடன் விளங்குகின்ற நிலைகளைச் சங்க இலக்கியங்களில் கண்டுகளிக்கலாம். தென்னகத்தின் பண்டைய வீரவரலாற்றைக் காட்டி, நம்மையும் வீரம் செறிந்த தமிழராக்கக்கூடிய தூண்டுகோல் சங்க இலக்கியங்கள் எனில் அதுசாலவே பொருந்தும். சங்க இலக்கியங்கள் தமிழகமெங்கும் இருந்த பெருவேந்தர், குறுநிலமன்னர், ஈகைச்செல்வர், சால்பமைந்த பெரியோர், புலவர் எனப் பலரையும் குறிப்பதாக அமைந்துள்ளது.

**ஆய்வுத் தலைப்பு அறிமுகம்**

சங்க இலக்கியம் என்பது எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இணைந்தது. அவற்றுள் புறநூல்களில் அமைந்துள்ள பாடாண்திணைப் பாடல்கள் புலப்படுத்தும் ஆளுமைப் பண்புகளை அறிதலின் பொருட்டு செய்யப்படும் இவ்வாய்வின் தலைப்பு **'சங்க இலக்கியங்களில் பாடாண் திணை புலப்படுத்தும் ஆளுமை'** என்பது ஆகும்.

**ஆய்வுநோக்கம்**

சங்க இலக்கியங்களில் புறநூல்களில் இடம்பெற்றுள்ள பாடாண்திணைப் பாடல்களைக் களமாகக்கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. பாடாண்திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள மூவேந்தர்கள், வள்ளல்கள், குறுநிலமன்னர்களின் ஆளுமைப் பண்புகளைக் கண்டறிவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுஎல்லை

சங்க இலக்கியத்தில் புறநூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி முதலான நூல்களில் இடம்பெற்றுள்ள பாடாண்திணைப் பாடல்கள் மட்டும் ஆய்வின் எல்லையாக அமைந்துள்ளன.

## ஆய்வுக் கருதுகோள்

சங்க இலக்கியத்தின் அடிப்படையில் பழந்தமிழரின் வாழ்வியல், நாகரிகம், பண்பாடு முதலானவைகளை ஆய்வாளர்கள் பல்வேறு ஆய்வுகளின் வழியாக எடுத்துக்காட்டியுள்ளனர். சங்க இலக்கிய புறநூல்களில் அமைந்துள்ள பாடாண் திணைப் பாடல்களின் வாயிலாக அக்கால மன்னர்களின் கொடையளிக்கும் பண்பு, ஆட்சிச் சிறப்பு, அறிவுரை கேட்கும் பண்பு, நட்புணர்வு, கவித்திறம், பிறரை மகிழ்வித்து மகிழும் பண்பு, போரிலும் அறப்பண்பு, பக்தி, பொய்கூறாப் பண்பு, குடியோம்பல், போர்த்திறன், விருந்தோம்பல், தலைமைத்துவம் பேணுதல் ஆகிய ஆளுமைக் கூறுகளை வெளிக்கொணர்வதை கருதுகோளாக முன்வைத்து **“சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை”** என்னும் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

## ஆய்வுச் சான்றாதாரங்கள்

இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக சங்க இலக்கியப் புறநூல்களில் எட்டுத்தொகையில் புறநானூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி முதலான நூல்களில் அமைந்துள்ள பாடாண்திணைப் பாடல்கள் அமைகின்றன. உ.வே.சா., ச.வே.சுப்பிரமணியன், பொ.வே.சோமசுந்தரனார், ஔவை.சு.துரைசாமிபிள்ளை போன்ற உரையாசிரியர்களின் உரைகள், ஆய்வுச் செய்திகள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், புறச்செய்திகள் பற்றி வெளிவந்துள்ள சேரர் வரலாறு, சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு, வேளிர்

வரலாறு போன்ற பிற நூல்கள் துணைமைச் சான்றாதாரங்களாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

இவ்வாய்வின் முன்னோடி ஆய்வுகளாகப் பின்வருவன அமைகின்றன.

1. கி.பாண்டுரங்கன், "பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்கால போர் நடவடிக்கையும்'', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
2. கரு.நாகராசன், "தமிழரின் மனம் பற்றிய கோட்பாடு'', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
3. பத்மஜா ரமேஸ், வி.பி.புருசோத்தமன் "சங்க காலமன்னர்களின் காலநிலை'', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
4. கு.வெ.பாலசுப்பிரமணியன், "சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புக்கள்'', தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

என்ற நூலும் முன்னோடி ஆய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வில் சங்க இலக்கியங்களில் புறநூல்களில் இடம்பெற்றுள்ள பாடாண்திணைப் பாடல்கள் ஒவ்வொன்றையும் விளக்க விளக்கமுறை அணுகுமுறையும், உரிய இடங்களில் ஒப்பீடு செய்ய ஒப்பீட்டுமுறை அணுகுமுறையும், மூவேந்தர்கள், வள்ளல்கள், குறுநிலமன்னர்களின் ஆளுமைப் பண்புகளைக்கூற உளவியல் அணுகுமுறையும் கொண்டு இவ்வாய்வானது ஆராயப்பட்டுள்ளது.

**ஆய்வுப்பகுப்பு**

சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை என்னும் இவ்வாய்வுப் பொருள் முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

முன்னுரை

*1. ஆளுமை பற்றிய விளக்கம்*

*2. பாடாண்திணையில் மூவேந்தர் ஆளுமை*

*3. வள்ளல்களின் ஆளுமை*

*4. குறுநிலமன்னர்களின் ஆளுமை*

முடிவுரை என்பன.

முன்னுரைப் பகுதி ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வுச் சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப் பகுப்பு போன்றவற்றை உள்ளடக்கியதாக அமைகின்றது.

**“ஆளுமை பற்றிய விளக்கம்”** என்ற முதல் இயலில் ஆளுமை என்ற சொல் பெர்சோனா (persona) என்ற இலத்தீன் மொழிச்சொல்லில் இருந்து வந்தது ஆகும். இதன் உண்மையான பொருள் முகமூடி என்பதாகும்.

ஆளுமையை ஆள்+தன்மை எனப்பிரித்தால் ஆளும்தன்மை எனப் பொருள் தரும். மீண்டும் ஆளுமையை ஆள்+உண்மை எனப் பிரித்துப் பார்க்கும் போது ஆளின் உண்மைத் தன்மை என்பது தெளிவாகும்.

தனிமனிதன் ஒருவன் தன் சூழ்நிலையில் எவ்வாறு செயல்படுகிறான் என்பது இவ்ஆளுமை ஒருங்கமைப்பின் தன்மையைப் பொறுத்து அமையும். இத்தகைய உடல் மனப்பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பு ஒருவனது ஆளுமைப் பண்பு ஆகும்.

ஒரு தனி மனிதனுடைய எண்ணங்கள், செயல்படும் முறை, நடத்தைகள், அவன் பிறருடன் பழகும் முறை, மனப்பான்மைகள், அவனுடைய வாழ்க்கைத் தத்துவம் அறிவாற்றல் உணர்ச்சிகள் ஆகியயாவும் சேர்ந்த தொகுப்பிலிருந்து அவனுக்கு ஏற்படும் தனித்தன்மை ஆளுமை என ஆளுமைப்பண்பு குறித்த விளக்கங்களும், ஆளுமையைக் கண்டறியும் கூறுகள், ஆளுமை பற்றி

உளப்பகுப்பாய்வு அறிஞர்களின் கருத்துக்கள், ஆளுமைக் கோட்பாடுகள், ஆளுமைப் பண்பை மேம்படுத்தும் வழிமுறைகள், ஆளுமையை அளவிடும் முறைகள் பற்றி விளக்கியுரைக்கப்படுகின்றன.

**“பாடாண் திணையில் மூவேந்தர் ஆளுமை”** என்ற இரண்டாவது இயலில் முதலில் மன்னனின் வீரம், கொடை, வெற்றி இயல்பு ஆகியவற்றைப் போற்றிப்பாடுவது பாடாண்திணை ஆகும். பாடாண்திணை கைக்கிளைக்குப் புறனாகும். கைக்கிளை ஒரு நிலத்திற்கு உரியதாக இல்லாமல் ஒருதலைக் காமமாகக் கருதுவது போல் பாடாண்திணையும் ஒருபாற் உரித்தன்றி ஒருவனை ஒருவன் ஏதேனும் ஒருகாரணத்தால் போற்றி நிற்பதாகுதம் என பாடாண்திணை விளக்கம் பற்றியும், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே மூவேந்தர் அமைப்பு நிலைபெற்றுவிட்டதை,

**“வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு” (தொல். பொருள்)**

என்னும் கூற்றால் அறியலாம்.

மூவேந்தரைக் குறிப்பிடும் தொல்காப்பியர் சேர, சோழ, பாண்டியர் எனக் குறிப்பிடாமல் அவர் தம் மாலையினைப்,

**“போந்தே வேம்பே ஆரென வரூஉம்**
**மாபெருந்தானையார் மலைந்தபூவும்”. (தொல். பொருள்)**

எனக் கூறுகின்றர்.

சங்க இலக்கியப் புறநூல்களிலுள்ள பாடாண்திணைப் பாடல்களில் சேரமன்னர்களான உதயஞ்சேரலாதன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட் பாட்டுச் சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பாறை, இளஞ்சேரல் இரும்பொறை, ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, கோக்கோதை மார்பன், குடக்கோச் சேரல் இரும்பொறை, திருக்குட்டுவன், வஞ்சன். சோழ மன்னர்களான சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, முடித்தலைக்

கோப்பெரு நற்கிள்ளி, நலங்கிள்ளி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், கோப்பெருஞ்சோழன், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி, கரிகால் பெருவளத்தான். பாண்டிய மன்னர்களான கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி, பல்யாக சால முதுகுடுமிப் பெருவழுதி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், அறிவுடை நம்பி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆகிய மூவேந்தர்களின் ஆளுமைப்பண்புகள் வெளிப்படும் விதம் ஆராயப்பட்டுள்ளன.

**“வள்ளல்களின் ஆளுமை”** என்ற மூன்றாம் இயலில் வள்ளன்மை செய்பவர்களை வள்ளல்கள் என்பர். இரவலனைப் புரக்கும் வள்ளல்கள் புலவர்களால் போற்றப்பட்டுள்ளனர். புலவர் பாடும் புகழுடையவர்களாய் இருப்பதையே வள்ளல்கள் விரும்பினர். வள்ளல்கள் பலராக இருப்பினும் அவர்களை மூன்று வகையாக பாகுபடுத்திக் கூறுவது மரபு ஆகும். அவையாவன,

- தலையெழு வள்ளல்கள்
- இடையெழு வள்ளல்கள்
- கடையெழு வள்ளல்கள்

“சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, விரான் முதலானோர் முதல் ஏழு வள்ளல்கள்.

அக்குரூரன், அந்திமான், கண்ணன், சந்தன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் இவர்கள் எழுவரும் இடையெழு வள்ளல்கள்.

எழினி, காரி, ஓரி, நள்ளி, பாரி, பேகன், ஆய் இவர்கள் எழுவரும் கடையெழுவள்ளல்கள்" ஆவர் மற்றும் குமண வள்ளல் உள்ளிட்ட வள்ளல்களின் சிறப்பு பற்றியும், அவர்களின் கொடை, வீரம், புகழ் முதலிய ஆளுமைப்பண்புகள் பற்றியும், சங்கஇலக்கியங்களில் புறநூல்களிலுள்ள

பாடாண்திணையில் வள்ளல்கள் இடம்பெற்றுள்ள விதம் பற்றியும் ஆராய்ந்து உரைக்கப்படுகின்றன.

**“குறுநில மன்னர்களின் ஆளுமை”** என்ற நான்காம் இயலில் குறிப்பிட்ட சில சிறு நிலப்பகுதிகளைத் தன் ஆளுமைக்கு உட்படுத்தி, பரிசிலர்க்குப் பொன்னும், பொருளும் கொடுத்து உதவி தன் பகுதிகுட்பட்ட மக்களைக் கண்ணும் கருத்துமாகக் காத்துதவியர்கள் குறுநில மன்னர்கள் ஆவர்.

சீறூர் மன்னர்கள், முதுகுடி மன்னர்களைவிட மேம்பட்டு விளங்கிய குறுநில மன்னர்களாவார்கள். அவர்களின் அடையாளப் பெயரே, அவர்கள் முல்லைப் பகுதிகளைச் சார்ந்த சிறியஊரின் தலைவனான சீறூர் மன்னரைப் போலவோ அல்லது மருதநிலத்துப் பழமையான மூதூரை ஆண்ட முதுகுடி மன்னனையோ போலல்லாமல் பல ஊர்களைக் கொண்ட ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியை ஆட்சி புரிந்தவர்கள் என்பதை விளக்குகின்றது. அவ்வாறு சிறு பகுதிகளை ஆண்ட சில குறுநில மன்னர்களும் ஒருவகை முடியணிந்தனர். அது குறுமுடியாகும். முடியணிந்திருந்தாலும் குறுகிய நிலத்தை ஆட்சி செய்தவர்களை வேந்தர் என்று புலவர் பெருமக்கள் குறிக்கவில்லை. மேலும் இலக்கிய அமைப்பில் குறுநில மன்னர்கள் இடம்பெறும் பாங்கும் அறியப்படுகின்றது. சங்க இலக்கிய புறநூல்களிலுள்ள பாடாண்திணையில் இடம்பெற்றுள்ள குறுநில மன்னர்களான அவியன், அதியமான் மகன் பொகுட்டெழினி, அம்பர் கிழான் அருவந்தையன், ஆதனுங்கன், இருங்கோவேள், இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோன், ஏறைக்கோன், ஒய்மான் நல்லியங் கோடன், ஒய்மான் நல்லியாதன், ஒய்மான் வில்லியாதன், கடிய நெடுவேட்டுவன், கரும்பனூர் கிழான், கொண்கானங்கிழான், சிறுகுடி கிழான் பண்ணன், சோனாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன், தாமான் தோன்றிக்கோன், நாஞ்சில் வள்ளுவன், நன்னன், பிட்டங்கொற்றன், பொறையாற்றுகிழான், மல்லிகிழான் காரியாதி, மூவன், வாட்டடாற்றெழினியாதன் முதலான மன்னர்கள் பற்றிக்காணும்போது அவர்களின் கொடை, புகழ், வீரம், தலைமைப்பண்பு போன்ற ஆளுமை குறித்த செயற்பாடுகள் பற்றி ஆராயப்பெற்றுள்ளன.

**ஆய்வு முடிவுரையில் சங்கஇலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை குறித்த இவ்வாய்வில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுச் செய்திகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.**

இவ்வாய்வேட்டின் பக்க மிகுதியைக் கருத்தில் கொண்டு, குறைக்கும் நோக்கில், கருத்துகள் சில இடங்களில் சுருக்கிக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வு முடிவுரையில் நான்கு இயல்கள் வழியாகப் பெறப்பட்ட முடிவுகள் தொகுத்து உரைக்கப்பெற்றுள்ளன. ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முதன்மை ஆதாரங்களும் துணை ஆதாரங்களும் துணைநூற்பட்டியலில் இடம் பெற்றுள்ளன.

# இயல் -1

## ஆளுமை பற்றிய விளக்கம்

ஒரு தனி மனிதனின் அகம், புறம் ஆகிய நிலைகளின் வெளிப்பாடே ஆளுமை ஆகும். அகத்தின் வெளிப்பாடாகக் காணப்படும் ஆளுமை என்பது உள்ளத்து அகஉணர்வு, எண்ணங்கள், ஆசை, மனவெழுச்சி, சிந்தனை, கற்பனைத்திறன், அன்பு, கோபம், மகிழ்ச்சி, சோகம், கனவு, இரக்கம், பொறாமை போன்ற இன்னும் பிறவாகும். புறத்தின் வெளிப்பாடாக உணரப்படும் ஆளுமையானது பிறருடன் பழகும்முறை, அன்புசெலுத்துதல், உண்ணுதல், ஆடை அணிதல், விளையாட்டு, உதவும் மனப்பான்மை போல்வன ஆகும். ஒருவரது ஆளுமைப் பண்பு ஒருவரை மற்றவர்களிடமிருந்து தனியே பிரித்துக் காட்டுகின்றது. ஒரே இனம், பண்பாடு கொண்ட மனிதர்களிடம் சில பண்புகள் பொதுவாக இருந்தாலும், தனிமனிதனை ஒட்டிய பல பண்புகள் வேறுபட்டுக் காணப்படுகின்றன. பிற மனிதர்களுடன் உறவு கொள்வதன் அடிப்படையில் ஒரு மனிதனின் தனித்துவப் பண்புகள் தெற்றென வெளிப்படும். அவ்வாறு வெளிப்படும் பண்புகள் நேர்மறைப் பண்புகளாகவோ அல்லது எதிர்மறைப் பண்புகளாகவோ பிரித்துப் பார்க்கப்படுகின்றன. ஒருவர் பிறருடன் நட்போடு உறவாடுவது ஆக்கவழிச் செயலாகப் பாராட்டப்படுகிறது. மாறாகச் சமூக உறவுகளைக் கண்டு விலகிச் செல்வது என்பது அச்சம், கவலை, தோல்வி மனப்பான்மை ஆகியவற்றின் விளைவாகக் கருதப்படுகிறது.

இவ்வாளுமைப் பண்புகளே ஒரு மனிதனின் தனித்தன்மையை வெளிப்படுத்துவன ஆகும். ஆளுமை என்பது ஒருவனுடைய சிறப்பு, மேன்மை, மதிப்பு, புகழ், வெற்றி ஆகியவற்றை உள்ளடக்கிய தொகுப்பு ஆகும். சிறப்பு என்பது ஒருவருடைய நற்பண்பாகும். மேன்மை என்பது இந்நற்பண்புகளால் கிடைக்கும் உயர்வாகும். மதிப்பு என்பது இவ்வுயர்வால் சமூகத்தில் கிடைக்கப்பெறும் மதிப்பாகும். இத்தகைய கூறுகள் அனைத்தும் ஆளுமையின் வெளிப்பாட்டுக் கூறுகள் ஆகும்.

மனிதன் ஒருவனின் தோற்றப் பொலிவினை மட்டுமே வைத்துக் கொண்டு அவனின் ஆளுமையைக் கணக்கிட முடியாது. பல்வேறு ஆளுமைப் பண்பின் கூறுகளில் சில கூறுகள் ஒரு மனிதனிடம் இருக்கலாம் அல்லது சில கூறுகள் இல்லாமலும் இருக்கலாம். ஒருவனிடம் உள்ள பல்வேறு பண்புநலன்களின் மொத்த அமைப்பே அவனது ஆளுமைப் பண்பாகக் குறிப்பிடப்படும். இத்தலைப்பில் ஆளுமை என்ற சொல்லின் சொற்பொருள் விளக்கம், ஆளுமைப் பண்பு விளக்கம், ஆளுமைத் திறனைக் கண்டறியும் கூறுகள், ஆளுமை பற்றி உளப்பகுப்பாய்வாளர்களில் சிலரது கருத்துக்கள், ஆளுமை குறித்த கோட்பாடுகள், ஆளுமைப் பண்பை மேம்படுத்தும் வழிமுறைகள் என பல்வேறு நிலைகளை ஆராயும் வகையில் இவ்வியல் அமைந்துள்ளது.

## ஆளுமை சொற்பொருள் விளக்கம்

ஆளுமை, என்பதை ஆங்கிலத்தில் "பெர்சனாலிடி" (Personality) என்று அழைப்பர். "பெர்னசாலிடி" எனும் சொல் "பெர்சனொ" (Persona) என்னும் இலத்தீன் மொழிச் சொல்லில் இருந்து பிறந்தது ஆகும். இதன் உண்மையான பொருள் 'முகமூடி' (Mask) என்பதாகும்.

"பெர்னசாலிடி" என்ற ஆங்கிலச் சொல்லில் உள்ள ஒவ்வொரு ஆங்கில எழுத்தும் ஆளுமையை எடுத்துரைக்கின்றது.

P – என்பது புலன்காட்சியை அறியும் ஆற்றலையும்

E – என்பது மனவெழுச்சியின் முதிர்ச்சியையும்

R – என்பது சூழ்நிலைக்கேற்ற இணக்கத்தையும்

S – என்பது சமூக உறவு பற்றியும்

O – என்பது உண்மையையும்

N – என்பது நடுநிலையையும்

A – என்பது வெளித் தோற்றத்தையும்

L – என்பது தலைமைப் பண்பையும்

I – என்பது ஒருங்கிணைந்த பண்புகளையும்

T – என்பது மனோபாவத்தையும்

Y – என்பது இளமையையும் குறிக்கும். "[1] என்கிறார்.

"ஆளுமையை ஆள்+தன்மை எனப் பிரித்தால் ஆளும்தன்மை எனப் பொருள்தரும். மீண்டும் ஆளுமையை ஆள்+உண்மை எனப் பிரித்துப் பார்க்கும் போது ஆளின் உண்மைத்தன்மை"[2] என்றும் அறிஞர்கள் பொருள் விளக்கம் தருகின்றனர். "ஒரு தனி மனிதனின் எண்ணம், நடத்தை, வாழ்க்கை, தத்துவம், அறிவாற்றல், உணர்ச்சி ஆகிய யாவும் சேர்ந்த தொகுப்பில் இருந்து அவனுக்கு ஏற்படும் தனித்தன்மை ஆளுமை"[3] என பெருஞ்சொல் அகராதி பொருள் விளக்கம் செய்கிறது.

ஆளுமை என்பது ''மனிதன் ஒருவனின் தனிப்பட்ட குணத் தொகுப்பு என்றும், முரட்டுத்தனமும் அவனது ஆளுமையின் வெளிப்பாடே என்றும்"[4] க்ரியாவின் தமிழ் அகராதி கூறுகின்றது.

மனிதன் ஒருவன் "தன் பாரம்பரியத்தினாலும் சூழ்நிலையினாலும் பெற்றுள்ள உள்ளார்ந்த மனப்போக்குகள், உள்ளத்துடிப்புகள், செயல்முறைகள், உடல் வேட்கைகள் மற்றும் இயல்பூக்கங்கள் ஆகியவற்றின் தொகுப்பே அவனது ஆளுமை ஆகும்''[5] என்பர். ஒருவனுடைய உடல்தோற்றமும், உடைபாணியும், நடையும், அவனிடம் காணப்படும் அன்பு, ஊக்கம், அச்சம், கொடை, இரக்கம், வீரம், நன்றிஉணர்வு, தந்திரம் போன்ற பலவிதமான பண்புகளும் அவனுடைய ஆளுமையில் அடங்கும்.

ஆளுமை என்பது தனி ஒருவர் தம் தோற்றப் பொலிவினால் மற்றவர்கள் மீது ஏற்படுத்தும் எண்ணப் பதிவினை அல்லது உணர்ச்சி விளைவினைக் குறிக்கிறது. இவ்விளைவின் உட்பொருள் சமூகத்தூண்டுதல் மதிப்பனை (Stimulus Value) உணர்த்துவதே ஆகும்.

---

[1] . அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல்,

[2] . மேலது.

[3] . பெருஞ்சொல் அகராதி, தொகுதி இரண்டு

[4] . க்ரியாவின் தமிழ் அகராதி

[5] . கி. நாகராஜன், கல்வி உளவியல்

இக்கருத்துகளைத் தொகுத்துக் காண்கையில், உலகில் வாழும் ஒவ்வொரு மனிதனது நடத்தையை ஊன்றிக் கவனித்தால் அவனது நடத்தையில் சில அடிப்படைப் போக்குகளை கண்டறிய முடியும். இப்போக்குகளே ஒருவனது ஆளுமையை வெளிக்காட்டுகின்றன. எனவே ஆளுமை என்பதை மனிதனின் உடலியக்கம், அறிவு, சிந்தனை, மனவெழுச்சி, சமூகநீதி ஆகிய பண்புகளின் கூட்டமைப்பு என்று முடியலாம்.

**<u>ஆளுமைப் பண்பு விளக்கம்</u>**

தனிமனிதன் ஒவ்வொருவரிடமும் குறிப்பிட்ட ஒரு வகையில் அவனது மனப்பண்புகள் சேர்ந்து ஒருங்கமைந்து இருக்கும். இவ்வொருங்கமைப்பின் இயல்பு மனிதனுக்கு மனிதன் சிறிதேனும் மாறுபட்டுக் காணப்படும். தனிமனிதன் ஒருவன் தன் சூழ்நிலையில் எவ்வாறு செயல்படுகிறான் என்பது இவ்வொருங்கமைப்பின் தன்மையைப் பொறுத்து அமையும். இத்தகையை உடல் மனப்பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பு ஒருவனது ஆளுமைப் பண்பு ஆகும்.

“ஒரு தனிமனிதனுடைய எண்ணங்கள், செயல்படும்முறை, நடத்தைகள், அவன் பிறருடன் பழகும்முறை, மனப்பான்மைகள், அவனுடைய வாழ்க்கைத் தத்துவம் அறிவாற்றல் உணர்ச்சிகள் ஆகிய அனைத்தும் சேர்ந்த தொகுப்பிலிருந்து அவனுக்கு ஏற்படும் தனித்தன்மை ஆளுமை”[6] என்று ‘வாழ்வியற் களஞ்சியம்’ ஆளுமைப் பண்பை விளக்குகின்றது.

ஆளுமை பற்றி விளக்கிய அறிஞர்களில் குறிப்பிடத்தக்கவரான ‘இ.டபிள்யூ ஆல்போர்ட்’ என்பவரது கருத்துப்படி ஆளுமைக்கு அடிப்படை உளநிலையும், உடல்சார்ந்த அமைப்புநிலையும் ஆகும். எனவே உடல், உள்ளப் பண்புகளின் தனிப்பட்ட ஒழுங்கமைப்பும் வளர்கின்றது. இவ்வாளுமை ஒரு மனிதனின் அனைத்து நடத்தைகளிலும் வெளிப்படுகின்றது.

---

[6] . வாழ்வியற் களஞ்சியம், தொகுதி -2.

ஒவ்வொரு மனிதனும் அவனது தனித்தன்மையின் அடிப்படையில் செயல்படுகிறான். இச்செயல்முறைகள் அவனது ஆளுமையின் தனித்தன்மைகளை வெளிப்படுத்தும். எனவே ஆளுமை என்பது ஒருவனைப் பிறரிடமிருந்து பிரித்து வேறுபடுத்திக் காட்டும் பண்பமைதிகளின் ஒட்டுமொத்த தொகுதி என்றும், குடும்பச் சூழல், சமூகச் சூழல், அச்சூழல்களில் எழும் சமூகத் தூண்டல்கள் முதலியவற்றின் ஒருங்கிணைந்த அமைப்பினால் ஒரு மனிதனிடம் எழும் சிறப்புக் கூறுகளே ஆளுமை எனப்படும் என ஆளுமைப் பண்பினைப் பற்றி அறியமுடிகிறது.

“ஆளுமைப் பண்பு ஒவ்வொருவருக்கும் தனி! எனவே வேறுபட்டது! அது அவரது சிந்தனை, உணர்வுகள், நடத்தை அனைத்தையும் உள்ளடக்கியது. குறிப்பிட்ட பாணியில் அவை அடங்கும். அப்பண்பு உடனுக்குடன் மாறுபடக் கூடியது அன்று. நெடுங்காலமாக ஒருவரிடம் இடம் பெறக் கூடியது”[7] ஆகும்.

அக உணர்வு (Self–Consciousness) ஆளுமையின் முக்கிய பண்புகளில் ஒன்றாக வெளிப்படுவதால் தனிநபரின் நனவு நிலையில் (Consciousness) தான் எனும் எண்ணம் தோன்றும் பொழுது அவனுடைய ஆளுமைப் பண்பு தோன்றுவதாகக் கருதலாம்.

உள்ளத்திறன் பெற்றுள்ள மனிதனுக்கும் அவன் வாழ்ந்து வளரும் சூழ்நிலைக்கும் இடையே நிகழும் இடைவினையின் விளைவாக எழும் தனித்தன்மையினை ஒருவனது ஆளுமைப் பண்பு என்று கொள்ளலாம். ஒருவரின் எல்லா நடத்தைக் கோலங்களையும் உள்ளடக்கியது ஆளுமை ஆகும். செயல்சார்ந்த, அறிவுசார்ந்த, உணர்ச்சிசார்ந்த அனைத்து நடத்தைக் கோலங்கள் மட்டுமின்றி, நனவு நிலை மற்றும் உள்ளுணர்வு நிலைகளையும் உள்ளடக்கிக் காணப்படுவது ஆளுமை ஆகும்.

சிக்மண்ட் பிராய்ட் என்னும் உளவியல் அறிஞரின் கொள்கையின்படி, “ஒவ்வொரு மனிதரிலும் அவனது உண்மையான ஆளுமை மிகக் குறைந்த அளவே வெளிப்படுகிறது. மிகப் பெரும்பான்மையான அளவு அவரது

---

[7]. எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு.

அடிமனத்துள் புதைந்துள்ளது என்கிறார். தண்ணீரில் மிதக்கும் பனிக்கட்டியின் ஒரு சிறுபகுதி மட்டுமே வெளியே நம் கண்களுக்குப் புலப்படுகிறது. அதன் பெரும்பகுதி நீருக்குள் மூழ்கிக் காணப்படும். இதைப் போன்றே மனித ஆளுமையும் அடிமனத்துள் மூழ்கிக் காணப்படும்"[8] என்கிறார்.

குணங்கள் அல்லது பண்புகளின் தொகுப்பு மட்டுமே ஆளுமை ஆகாது. அது பண்புகளின் கூட்டுத் தொகையை விட அதிகமானது. கூட்டாகவும், முழுமையாகவும் செயல்படக் கூடிய உள-உடலியல் சார்ந்த அமைப்புகள் அல்லது நடத்தைக் கூறுகளின் ஒருங்கிணைந்தே செயல்நிலையே ஆளுமை ஆகும். ஆகவே, ஆளுமை என்பது குடும்பப் பாரம்பரிய பண்புகள், உடலமைப்பு, வளர்ச்சி, உள்ளம், உணர்வு, சமூகச் சூழலில் அவன் பங்கு, அதன் அவனது தனித்தன்மை. அத்தனித்தன்மைகளின் வழி உருவாகும் இலக்குகள் ஆகிய அனைத்துக் கூறுகளும் அடங்கிய பண்பு என்பது வெளிப்படை ஆகின்றது.

**<u>ஆளுமையைக் கண்டறியும் கூறுகள்</u>**

ஆளுமையைக் கண்டறிய உதவுவதாக அறிஞர்கள் பல கூறுகளை எடுத்துக் காட்டுகின்றனர். ஆளுமையைக் கண்டறிவதில் மனிதனின் நடத்தைக் கூறுகளே முக்கியப் பங்கு வகிக்கின்றன. ஆளுமையின் அடிப்படைக் கூறுகளாகத் தனிப்பட்டதோற்றம், அறிவுக்கூர்மை, உணர்வாற்றல், சமூகமயமாதல், நேர்மையான ஒழுக்கமதிப்புகள், மேம்பாடடைதல், பணிவமைதி முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

ஒருவரிடம் உள்ள ஆளுமைப் பிரச்சினைகள் தொடர்பான குறைபாடுகளை அறிய அவர்கள் சமூகத்துடன் கொண்டுள்ள உறவு மற்றும் சகமாணவர்களுடனும், ஆசியர்களுடனும் கொண்டுள்ள உறவு ஆகியவற்றை வைத்து எந்த அளவிற்கு அவரிடம் ஆளுமைக் குறைபாடுகள் உள்ளன என்பதைக் கணிக்க முடியும். தனிநபர் ஒருவர் அடாதுடியான குணாதிசயங்கள் உள்ளவரா? அல்லது தாழ்ந்து போகக் கூடிய குணாதிசயங்கள் உள்ளவரா?

---

[8]. சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள்.

அல்லது பயந்த சுபாவம் உள்ளவரா? என்பதை அளவுகோலாக எடுத்துக் கொண்டு அவரது ஆளுமைப் பண்பினை நிர்ணயிக்க முடியும்.

“ஆளுமைப் பண்பு நலன்களில் பின்வரும் பன்னிரண்டு கூறுகளே முக்கியமானவை என்றும் அவை ஆளுமைப் பண்பினை மதிப்பிடப்படுகின்றன. என்று உளவியல் நிபுணர் ‘காட்டல்’ என்பவர் பரிந்துரைக்கிறார். அவை :

1. **அ. வெளிப்படையானவர்**

உணர்வுகளை வெளிப்படுத்துபவர், தெளிவாகவும், நேரடியாகவும் பேசக் கூடியவர்.

**ஆ. உள்ளடங்கியவர்**

கவலைப்படுபவர், வாய்திறவாதவர், அமைதியானவர்.

2. **அ. மனத்திறனுடையவர்**

நுண்ணறிவு உள்ளவர், கூர்மையானவர், வேண்டியதைச் சாதிப்பவர்.

**ஆ. மனத்திறன் குறைபாடுள்ளவர்**

நுண்ணறிவற்றவர், மந்தமானவர், பணிந்து செல்லக் கூடியவர்.

3. **அ. உறுதியான உணர்வாற்றல்**

பதற்றமற்றவர், வாழ்க்கை பற்றி சரியான அறிவுள்ளவர்.

**ஆ. உறுதியற்ற உணர்வு**

பதற்றம் உடையவர், நரம்புத்தளர்ச்சி, நழுவல், முதிர்ச்சியின்மை உடையவர்.

4. **அ. அதிகாரம்**

தன்னிலையில் உறுதியானவர், நம்பிக்கையானவர், போராடக் கூடியவர்.

**ஆ. அடங்கிப் போதல்**

அடங்கிச் செல்பவர், உறுதியற்றவர், சொன்னதைச் செய்பவர்.

5. **அ. மகிழ்ச்சி**

வேடிக்கை, விளையாட்டு, மகிழ்ச்சியுடன் காணப்படுபவர்.

**ஆ. வருத்தம்**

மனச்சோர்வு, எதிர்மறை எண்ணம், மந்தம் கொண்டவர்.

6. **அ. நேரியல் பண்பு**

பிறரை நன்கு கவனிப்பவர், பொறுமையுடன் தொடர்ந்து செயலாற்றுபவர்.

**ஆ. எதிர்மறைப் பண்பு**

சமுதாயக் கடமைகளில் அக்கறை இல்லாதவர், தொடங்கியதைத் தொடராதவர்.

7. **அ. துணிவாளர்**

அந்நியர் ஆனாலும் துணிந்து பழகுவார். மறுபாலரிடமும் நாணமின்றி பேசுவார்.

**ஆ. துணிவற்றவர்**

தெரிந்தவர்களிடமும் பழகத் தயங்குவார். மறுபாலரிடமும் நாணி ஒதுங்குவார்.

8. **அ. மன முதிர்ச்சியாளர்**

சுதந்திரப் பறவை போன்றவர், தனக்குத் தானே கவனித்துக் கொள்ளக் கூடியவர்.

**ஆ. சிறுபிள்ளைத் தனமுடையோர்**

பிறரைச் சார்ந்து வாழ்பவர், மனமுதிர்ச்சியற்றவர், பிறர் கவனத்தை நாடுபவர்.

9. **அ. பண்பட்ட மனம் சமூக உணர்வு**

பண்பாளர், நிதான அறிவுடையவர், தன்னை உணரக் கூடியவர், உணர்வுடையவர்.

**ஆ. பண்படாமை**

சமூக நெறி அறியாதவர், பண்பற்று நடந்து கொள்பவர்.

10. **அ. நம்பகத் தன்மை**

நம்பத் தக்கவர், நன்கு புரிந்து கொள்பவர்.

**ஆ. நம்பிக்கையின்மை**

பொறாமையும், ஐயப்பாடுமுடையவர்.

11. **அ. வழக்கமான செயல்பாடு**

உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காது வழக்கமான நெறிமுறைகளைக் கடைப்பிடிப்பவர்.

**ஆ. எதிர்பார்க்காத செயல்பாடு**

எதிர்பார்க்காத வகையில் முரண்பட்டுச் செயல்படுவார்.

12. **அ.மேம்பட்டவர்**

தர்க்கரீதியான மனம், அமைதியான நடத்தை, அலட்டலின்மை.

**ஆ. தாழ்ந்தவர்**

உணர்ச்சிகளைக் காட்டுபவர், பிறரைக் கண்காணிப்பவர்

இந்த ஆளுமைப் பண்புக் கூறுகளிலே ‘அ’ உயர்ந்த நிலையையும், ‘ஆ’ தாழ்ந்த நிலையையும் குறிக்கும். ஒரு மனிதரிடம் எல்லாக் கூறுகளும் ஒரே நிலையில் இருக்க வேண்டும் என்ற தேவை இல்லை. சில உயர்ந்தும் இருக்கலாம். சிலதாழ்ந்தும் இருக்கலாம். சில நடுநிலையிலும் இருக்கலாம்”[9] என்கின்றனர்.

ஒருவரது தோற்றமும் ஆளுமைப் பண்பில் தக்க இடம் பிடிக்கின்றது. கவர்ச்சியான தோற்றம் பிறரை ஒருவர் பால் ஈர்க்கிறது என்பதை நாம் கண்கூடாகக் காணலாம்.

தனிமனிதனின் ஆளுமையில் அவரது மதிப்பு நெறிகளும் இலட்சியங்களும் உரியப் பங்கேற்கின்றன. அவை சிறிய நம்பிக்கையிலிருந்து உயர்வான விஷயங்கள் வரை இருக்கக்கூடும். மனப்பாங்கு, மதிப்புநெறி, நம்பிக்கைகள் எல்லாம் பொதுவான நடத்தையிலிருந்து உயர்பண்பு நெறிவரை ஒருவரது போக்கையும் அதன் மூலமாக ஆளுமையையும் நிர்ணயிக்கின்றன.

---

9 . எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு.

ஒரு தனி நபருடைய குணத்தைக் கொண்டு சமுதாயத்தில் அவருடைய ஆளுமை நல்ல கருத்துக்களை உருவாக்கியுள்ளதா? அல்லது தவறான கருத்துக்களை உருவாக்கியுள்ளதா? என்பதனைக் கணிக்க முடியும். எனவே மனிதனுடைய மரபுநிலை குடும்பச்சூழல், சமுதாயத்தில் அவனுடைய பங்களிப்பினால் உண்டாகும் மாற்றங்கள் போன்றவற்றின் ஒருங்கமைவினால் உண்டாகும் சிறப்புக் கூறுகளே ஆளுமையைத் தீர்மானிப்பதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன.

**ஆளுமை பற்றி உளப்பகுப்பாய்வு அறிஞர்களின் கருத்துக்கள்**

**சிக்மண்ட் பிராய்டின் கருத்து**

டாக்டர் பிராய்டின் கருத்துப்படி மனிதனுடைய ஆளுமை (ஆள்+தன்மை) மூன்று நிலைகளாகப் பகுக்கப் பட்டிருக்கின்றது. இந்த மூன்று நிலைகளும் சரிவர உருவானால் மனிதன் முழுமை பெறுகின்றான். “மனித உள்ளத்தின் இயல்புகளுக்கு ஏற்றவாறே ஒவ்வொருவரின் ஆளுமையும் அமைகின்றது. இந்த இயல்புகள் முறையே ‘இட்’ (Id) என்ற அடிநிலை மனம். இதுவே, ஆளுமையின் அடித்தளம் ஆகும். தன்னுணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. “ஈகோ” (Ego) எனப்படும் நனவுநிலை மனம். சமூக பண்பாட்டு சூழ்நிலைகளால் உருவாவது மேனிலை மனம் சூப்பர் ஈகோ (Super Ego) ஆகும்.”[10] என மனித மனங்களை மூன்று நிலைகளாகப் பிரித்துள்ளார் பிராய்டு அவர்கள்.

**ஆர்.பி. காட்டல் என்பவரின் கருத்து**

ஆர்.பி. காட்டல் என்பவர் “ஆளுமை என்பது ஒரு தனிமனிதன் தனக்குக் கொடுக்கப்பட்ட சூழ்நிலையில் செயல்படும் தன்மையைக் கூறுவதாகும்” [11] என்று ஆளுமைப் பண்பிற்கு விளக்கம் தருகின்றார்.

---

[10] . கி. நாகராஜன், கல்வி உளவியல்.

[11] . அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல்.

**மார்டன் பிரின்ஸ் என்பவரின் கருத்து**

மார்டன் பிரின்ஸ் என்பவர் "மனிதனின் உயிரியல் சார்புடைய உடன்பிறந்த தன்மைகள், துடிப்புகள், இயல்புகள், மனப்போக்குகள், உந்துதல்கள், அனுபவத்தின் வாயிலாகப் பெற்ற தன்மைகள் இவை அனைத்தின் ஒட்டுமொத்தமான தொகுப்பே ஆளுமை"[12] என்று ஆளுமையை வரையறுக்கிறார்.

**ஜெ.பி. வாட்சன் என்பவரின் கருத்து**

ஜெ.பி. வாட்சன் என்பவர் "ஆளுமையானது நாம் எதனோடு தொடங்குகின்றோமோ? எதன் வழியாக வாழ்ந்து முடித்தோமோ? அதன் விளைவே" [13] என்று குறிப்பிடுகிறார்.

**ஆபிரகாம் மாசுலோ என்பவரின் கருத்து**

ஆபிரகாம் மாசுலோ என்பவர் ஆளுமை என்பதனை "மனிதனின் தேவைகள் எந்த அளவில் நிறைவு பெறுகின்றனவோ அந்த அடிப்படையில் அவனுடைய ஆளுமை அமைகிறது."[14] என்று காட்டுகிறார் ஆபிரகாம் மாசுலோ. ஒவ்வொரு தனி மனிதனுக்கும் தனது முழுமையான திறன்களின் வளர்ச்சியில் நம்பிக்கை உண்டு என்ற கருத்தினை மாசுலோ வலியுறுத்துவதனை அறியலாம்.

**ஆல்போர்ட் என்பவரின் கருத்து**

"தனிமனிதன் தனக்கே உரிய நடத்தை, சிந்தனை ஆகியவற்றை நிச்சயிக்கின்ற அவரது உளநிலை, உடல்சார்ந்த அமைப்புகளின் மாறக் கூடிய கூட்டமைப்புதான் ஆளுமை" [15]என்று ஆல்போர்ட் கருதுகிறார்.

---

[12] . அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல்.

[13] . மேலது.

[14]. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி -2.

[15] . அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல்.

**எரிக் எரிக்சன் என்பவரின் கருத்து**

தனி ஒருவனின் ஆளுமை சமூகத்துடன் ஒட்டி அமைகின்றது என்பது எரிக் எரிக்சனின் கருத்து. அதாவது தனி மனிதனுடைய தேவைகளுக்கும் சமூகத்தின் எதிர்பார்ப்புகளுக்கும் இடையே எழும் தொடர்பு. ஆளுமை என்றும், ஆளுமை வளர்ச்சியின் அடிப்படையாக அமையும் என்ற கருத்தினையும் அவர் குறிப்பிடுகிறார்.

**மகாத்மா காந்தி என்பவரின் கருத்து**

"ஆளுமையானது தான், மனம், உடல் ஆகியவற்றின் தொகுதி"[16] என்று மகாத்மாகாந்தி கருதுகிறார்.

**சுவாமி சின்மயானந்தா என்பவரின் கருத்து**

"மனிதனது உடல் அவனது ஆளுமையின் முதல்கட்ட வெளிப்பாடு".[17] என்பது சுவாமி சின்மயானந்தாவின் கருத்து. அதில் ஐந்து உணர்வு புலன்களும் ஐந்து வினைப்புலன்களும் அடங்கியுள்ளன. அப்புலன்களின் வடிவமைப்பு ஒருவருக்கொருவர் மாறுபட்டு இருப்பினும் அவற்றின் நோக்கமும், செயலும் ஒன்றே. நுட்பமான, தெளிவான உணர்வு நிலை ஒவ்வொருவரிடமும் உள்ளது. இதுவே ஒருவனின் ஆளுமை என வேதாந்த முறையில் விளக்கம் தருகிறார்.

**கபிலர் என்பவரின் கருத்து**

"இந்திய தத்துவ இயல் அறிஞர் கபிலர் மனிதர்களின் மனப்பான்மைகள், குணங்கள், நடத்தையின் அடிப்படையில் 1. சத்துவ **(Sattava)** குணமிக்கோர் 2. ரஜஸ் (**Rajas**) குணமிக்கோர் 3. தாமச (**Thamas**) குணமிக்கோர்''[18] என வகைப்படுத்துகின்றார்.

சத்துவ குணமிக்கோர் சிந்தனையில் தெளிவும், செயலில் நேர்மையும், உணர்வுகளில் தூய்மையும் கொண்டு விளங்குவர். காணும் பொருள்கள்,

---

[16] . க. பலராமன், உளவியல் நோக்கில் திருக்குறள்.

[17] . எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு.

[18] . சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள்.

ஆட்களில் கடவுளையே காணும் பண்பு கொண்டவர்கள், பிறர் நலச் சேவையைப் பெரிதாக மதிப்பவர்கள், பல்வேறு வகைப்பட்ட சிக்கல்மிகு செயல்கள் சூறாவளியாகச் சூழ்ந்திடினும் தன் நிலைகலங்காது மனச் சமநிலையுடன் நடந்து கொள்ளக் கூடியவர்கள்.

ரஜஸ் குணமுடையோர் என்போர் வலிமை மிக்கவர்கள். உணர்வுகளின் வழி நடப்பவர்கள். பிறர்மீது ஆதிக்கம் செலுத்த விரும்பக் கூடியவர்கள். தைரியமும், தன்னம்பிக்கையும் நிறைந்து காணப்படுவார்கள். வலிமையே பலம் என்று நினைத்துச் செயல்படக் கூடியவர்கள்.

தாமச குணம் படைத்தோரை சோம்பலுக்குச் சொந்தக்காரர்கள் என்பர். எதையும் அலட்சியம் செய்யக் கூடியவர்களாகவும், எளிதில் கோபமுறக் கூடியவர்களாகவும், கபடநாடகம் ஆடக் கூடியவர்களாகவும் கூச்ச சுபாவமும், கோழைத்தனமும் மிக்கவர்கள். முன்யோசனை அற்றவர்களாகவும், தனது உணர்ச்சி, பேச்சு செயல் போன்றவற்றில் நேர்மையற்றவர்களாகக் காணப்படுவர்.

**மேயர்சு பிரிக்சு என்பவர்களின் கருத்து**

“மேயர்சு, பிரிக்சு ஆகியோரின் குறியீட்டு அட்டவணைப்படி ஆளுமையின் வகைகளை பதினாறு வகையாகப் பிரிக்கலாம். கார்ல் யூங் அவர்கள் பிரித்தறிந்த அகமுகர், புறமுகர் என்ற இருபெரும் பிரிவுகளினுடைய விரிவாக்கமே இந்தப் பதினாறு வகை ஆளுமை ஆகும்”[19]

மேயர்சு, பிரிக்சு அவர்கள் புலனுணர்வினால் செயல்படக்கூடியவர்கள், சுய சிந்தனையுடன் செயல்படக் கூடியவர்கள், உள்ளுணர்வில் செயல்படக்கூடியவர்கள், உணர்ச்சியுடன் செயல்படக் கூடியவர்கள் என நான்கு பெரும் பிரிவுகளாகவும், அவற்றுள் ஒவ்வொரு பிரிவிற்கும் நான்கு நான்கு வகைகளாக பதினாறு வகைகளாக ஆளுமையை விளக்குகின்றனர். அவை பின்வருமாறு,

---

[19]. சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள்.

## புலனுணர்வில் செயல்படுபவர்கள்

'எஸ்டிஜெ' (STJ) என்ற பிரிவினைச் சார்ந்தோர் யோசனை கொண்டவர்களாகவும், அமைதியானவர்களாகவும் காணப்படுவர். முழு ஈடுபாட்டுடன் செயல்களில் ஈடுபட்டு நடைமுறைக்கு ஏற்ப நடப்பர். ஒழுங்கான நியாயமான, கற்பனையில்லாத, நம்பத்தகுந்த, செயற்கையில்லாத, உண்மையான செயல்கள் நடைபெறும்படி பார்த்துக் கொள்வர். இவர்களுடைய புற வாழ்வு சிந்தனை மிக்கதாகவும், அக வாழ்வு புலன்உணர்ச்சி மிக்கதாகவும் காணப்படும்.

'ஐஎஸ்டிபி' (ISTP) என்னும் ஆளுமைப் பரிவைச் சார்ந்தோர் அலட்டிக் கொள்ளாத பார்வையாளராகவும் அமைதியானவர்களாகவும், கலகலப்பானவர்களாகவும் காணப்படுவர். இவர்கள் தன்னோடு எதையும் தொடர்புப்படுத்திக் கொள்ளாமல் நோக்கமாக வாழ்க்கையைக் கூர்ந்து கவனித்து ஆராய்ந்து அறியும் ஆர்வம் மற்றும் எதிர்பாராமல் நகைச்சுவை உணர்வு ததும்ப பேசக் கூடியவர்களாகவும் திகழ்வர். இவர்களின் புற வாழ்வு புலனுணர்வு நிறைந்ததாகவும் அகவாழ்வு சிந்தனை நிறைந்ததாகவும் காணப்படும்.

'இஎஸ்டிபி' (ESTP) என்ற ஆளுமைப் பிரிவினர் கற்பனை வளம் அற்றவர்கள். இவர்கள் எதிலும் அவசரப்படுவதும் கிடையாது. அநாவசியமாகக் கவலைப்படுவதும் கிடையாது. எதுவரினும் அனுபவிக்கும் ஆற்றல் கொண்டவர்களாக காணப்படுவர். இவர்களுடைய நண்பர்கள் அருகில் இருப்பதையே விரும்புவர். 'இஎஸ்டிபி' பிரிவினரின் புறவாழ்வு புலனுணர்வுடனும், அகவாழ்வு சிந்தனை கொண்டதாகவும் இருக்கும்.

'இஎஸ்டிஜெ' (ESTJ) என்னும் ஆளுமை வகையினர் நடைமுறைக்கு ஒத்தவர்களாகவும், உண்மையானவர்களாகவும், கள்ளங்கபடமின்றி நேரடியாகப் பேசக் கூடியவர்கள் இருப்பர். இவர்கள் இயந்திரம் மற்றும் வியாபாரம் தொடர்பான செயல்களில் ஈடுபாடு அதிகம் உள்ளவர்கள். இவர்கள் பயனில்லை எனக்கருதும் பாடங்களில் ஆர்வம் இல்லாமலும், ஆனால் அவை

தேவையென உணர்ந்தால் இவற்றில் ஈடுபாடு கொள்ளும் தன்மையுடையவர்களாகக் காணப்படுவர். இவர்களுடைய புறவாழ்வு எண்ணங்கள் மிகுந்ததாகவும், அகவாழ்வு புலனுணர்வு மிகுந்ததாகவும் திகழும்.

**<u>சுய சிந்தனையுடன் செயல்படக்கூடியவர்கள்</u>**

'ஐஎன்டிஜெ'(INTJ) என்கின்ற ஆளுமைப் பிரிவினர் சுய சிந்தனை உடையவர்களாகவும், தன் கருத்துக்கள், நோக்கங்கள் இவற்றில் தீவிரம் கொண்டவர்களாகவும் தனக்குப் பிடித்தமான துறைகளில் ஈடுபாட்டுடன் செயல்படுவர். ஒரு செயலை ஏற்பாடு செய்து அதை மற்றவர்கள் உதவியுடனோ அல்லது உதவியின்றியோ நடத்திக் காட்டும் திறம் படைத்தவர்கள். இவர்களுடைய புற வாழ்வு சிந்தனை நிறைந்தும் அகவாழ்வு உள்ளுணர்வு நிறைந்தும் இருக்கும்.

'ஐஎன்டிபி'(INTP) என்ற ஆளுமைப் பிரிவினர் அறிவாளியாகவும், அமைதியானவர்களாகவும், தேர்வுகளில் அதிக சாதுர்யம் உள்ளவர்களாகவும் காணப்படுவர். இவர்கள் பெரும்பாலும் குறிப்பிடத்தக்கச் சிலவற்றில் மட்டுமே தனிப்பட்ட ஆர்வம் உடையவர்களாகவும் தோழமை மனப்பான்மை குறைந்தவர்களாகவும் திகழ்வர். இப்பிரிவினரது புறவாழ்வு உள்ளுணர்வு உடையதாகவும், அகவாழ்வு சிந்தனை உடையதாகவும் இருக்கும்.

'இஎன்டிபி'(ENTP) என்ற ஆளுமை வகைப்பாட்டினர் சாமர்த்திய சாலிகளாகவும், பல விசயங்களில் கைதேர்ந்தவர்களாகவும், வேடிக்கைக்காக இரு தரப்பிலும் வாதிக்கும் திறன்படைத்தவர்களாகவும், சவாலாக விளங்கும் புதிய பிரச்சினைகளைத் தீர்க்கும் கூர்மையான அறிவுடையவர்கள். ஆனால் வழக்கமாகச் செய்யும் வேலையை ஒதுக்கும் தன்மையுடையவர்கள். இவ்வகைப்பாட்டினர் அக உள்ளுணர்வு கொண்டு அகவாழ்வு சிந்தனை கொண்டும் திகழ்வர்.

'இஎன்டிஜெ'(ENTJ) என்ற ஆளுமைக் குணமுடையோர் மனமுவந்து செயல்களில் ஈடுபடுபவர்களாகவும், கள்ளங்கபடம் அற்றவர்களாகவும் கல்வியில் சிறந்தவர்களாகவும், ஒரு செயலினை ஆற்றுவதில் மற்றவர்களுக்கு

வழிகாட்டியாகத்  திகழ்வர். இவர்கள் எல்லா இடங்களிலும் சிறந்து விளங்கக் கூடியவர்கள். இப்பிரிவினரின் புற வாழ்வு சிந்தையுடனும், அகவாழ்வு உள்ளுணர்வுடனும் காணப்படும்.

**உள்ளுணர்வில் செயல்படுபவர்கள்**

'ஐஎன்எப்ஜெ'(INFJ) இப்பரிவு ஆளுமையினை உடையவர்கள் தனது தனித்தன்மையின் மூலம் வெற்றி பெறுபவர்களாகவும், எது தேவையோ அதைமட்டும் செய்வதில் விருப்பம் உடையவர்களாகவும், முழு முயற்சியுடன் செயல்களில் ஈடுபடக்கூடியவர்களாக இருப்பர். இவர்கள் பொது நன்மைக்காக எவ்வாறு செயல்பட வேண்டும் எனத் தெளிவான கொள்கைகளைக் கொண்டவர்களாக திகழ்வதால் மற்றவர்களால் கௌரவிக்கப்பட அதிக வாய்ப்பு உள்ளது. இப்பிரிவு ஆளுமை வகையினரது புறவாழ்வு உணர்ச்சி மிக்கதாகவும் அகவாழ்வு உள்ளுணர்வு மிக்கதாகவும் காணப்படும்.

'ஐஎன்எப்பி'(INFP) இவ்வகை ஆளுமையினர்க்கு செயலிலும் நல்ல ஆர்வம் உண்டு. உண்மை,  நேர்மை, ஆகியவற்றில் நாட்டம் கொண்டவர்கள். எப்படியாவது மற்றவர்களிடம் வேலை வாங்கலாம் என்று எண்ணாது தானே அதிகப் பொறுப்புகளை ஏற்றுச் செய்வதில் வல்லவர்கள். இவர்கள் தான் ஈடுபடும் செயல்களில் முற்றிலும் மூழ்கி விடுவதால் மற்றச் செயல்களில் அதிகக் கவனம் செலுத்துவது கிடையாது. இதனால் மற்றவர்களுடன் அதிகமாகப் பழகுவதில்லை. இவ்வாளுமைப் பண்பினை உடையோரின் புறவாழ்வு உள்ளுணர்வுகள் நிறைந்ததும் அகவாழ்வு உணர்ச்சி நிறைந்தும் இருக்கும்.

'இஎன்எப்பி'(ENFP) என்ற ஆளுமைப் பிரிவினர் உற்சாகமானவர்கள். இவர்களுக்குக் கற்பனை வளம் மற்றும் இரக்கக் குணம் உண்டு. தனக்கு ஆர்வம் உள்ள எதையும் சாதிக்கும் மனநிலை உடையவர்கள். எந்த ஒரு சிக்கலுக்கும் எளிதில் தீர்வு காணும் பண்பும்,  பிரச்சினையுள்ள எவருக்கும் உதவி செய்ய முன்வரும் பண்புடையவர்களாக காணப்படுவர். இவர்கள் எந்த ஒரு செயலையும் முன்னதாக சாதிக்கும் தன்மையுடையவர். இவ்வாளுமையினரின்

புறவாழ்வு உள்ளுணர்வு உடையதாகவும், அகவாழ்வு உணர்ச்சி உடையதாகவும் காணப்படும்.

'இஎன்எப்ஜெ'(ENFJ) என்னும் ஆளுமைப் பிரிவினர் பொறுப்பானவர்களாகவும், மற்றவர்களின் கருத்துக்களுக்கு செவிமடுப்பவர்களாகவும், இவர்கள் அடுத்தவர்களின் சிந்தனை செயல் ஆகியவற்றிற்கு அக்கறை காட்டுபவர்கள். பிறருடைய விருப்பத்தை உணர்ந்து மதிப்பளித்துச் செயல்படுவார்கள். தனக்குச் சரி என்று தோன்றும் ஆலோசனையை முன்மொழியத் தயங்கமாட்டார்கள். இவர்களின் புறவாழ்வு உணர்ச்சிமிக்கதாகவும், அகவாழ்வு உள்ளுணர்வுகள் மிக்கதாகவும் இருக்கும்.

**<u>உணர்ச்சியால் செயல்படக் கூடியவர்கள்</u>**

'ஐஎஸ்எப்ஜெ'(ISFJ) என்ற ஆளுமை வகையினர் அமைதியானவர்களாகவும், நட்பு மனப்பான்மை கொண்டவர்களாகவும், விடாமுயற்சியுடன் தன் நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்காகவும் உழைக்கக் கூடியவர்கள். தொழில் நுட்பத் தொடர்புடைய பாடங்களில் அதிக நாட்டமின்மையால் அவற்றைக் கற்க இவர்களுக்கு அதிக நேரம் தேவைப்படும். கடின உழைப்பும், எதிலும் துல்லியமாகச் செயல்படும் ஆற்றலும் மற்றவர்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்பளிப்பவர்களாகவும் திகழ்வர். இவ்வாளுமைப் பிரிவினரின் புறவாழ்வு உணர்ச்சிகளுடனும் அகவாழ்வு புலனுணர்வுகளுடனும் காணப்படும்.

'ஐஎஸ்எப்பி'(ISFP) என்னும் ஆளுமைப் பண்பினர் அமைதியானவர்களாகவும், தனது திறமைகளைப் பற்றிக் கர்வம் கொள்ளாமலும், பிறரின் கருத்துக்களுக்கு ஒத்துப்போகும் தன்மையுடனும், தனது கருத்துக்கள், மதிப்பீடுகளை அடுத்தவர்கள் மேல் திணிக்காத தன்மை உடையவர்களாகவும், தலைமை தாங்குவதைப் பற்றிக் கவலை கொள்ளாது உண்மையான வழிகாட்டுபவராக இருப்பர். இவர்களிடம் தேவையற்ற அவசரம் காணப்படாது. இவ்வாளுமைப் பிரிவினரது புறவாழ்வு புலனுணர்ச்சி மிக்கதாகவும், அகவாழ்வு உணர்ச்சிகள் மிக்கதாகவும் காணப்படும்.

'இஸ்எப்பி'(ESFP) என்னும் ஆளுமைப் பிரிவினர் நட்பு மனப்பான்மையுடன் எதையும் ஏற்கும் பாங்குடனும், நல்ல நேரத்தை அதிகம் விரும்பும் தன்மை கொண்டவர்கள். பொருட்களை உருவாக்குவதிலும், விளையாட்டுக்களிலும் அதிக ஆர்வம் காணப்படும். தன்னைச் சுற்றிய நண்பர்களின் விவரங்களை அறிந்து அதில் ஆவலுடன் ஈடுபடுதல். இவர்கள் தம்மை மக்களுடனும், பொருட்களுடனும் தொடர்புபடுத்திக் கொள்வதில் செயல்திறன் மிக்கவர்கள். இவர்களுடைய புறவாழ்வு புலனுணர்வுடன் அகவாழ்வு எண்ணங்களுடனும் காணப்படும்.

'இஸ்எப்ஜெ'(ESFJ) என்ற ஆளுமைக் குணமுடையோர் இரக்கச் சுபாவம் கொண்டவர்கள். எப்பொழுதும் கலகலப்பாக காணப்படுவதால் அனைவராலும் விரும்பப்படுவர். நன்கு செயல்படக்கூடிய நண்பர்கள் குழுவில் உறுப்பினராய் இருப்பர். எப்பொழுதும் யாருக்காவது நன்மை செய்து கொண்டே இருப்பர். இவர்கள் நல்ல புகழ்ச்சியும் உற்சாகமும் கிடைக்கப் பெற்றால் நன்கு செயல்படுவர். இவர்களுடைய புறவாழ்வு உணர்வுகள் மிக்கதாகவும், அகவாழ்வு புலனுணர்வு மிக்கதாகவும் இருக்கும். என்று மேயர்சு, பிரிக்கசு அவர்கள் பதினாறு வகையான ஆளுமைப் பண்புகளை கூறியுள்ளதைக் காணலாம். மேலும், இப்பதினாறு வகையான ஆளுமைப் பண்புகளில் ஒரு தனிமனிதன் எவ்வகை ஆளுமைப் பண்பினை உடையவன் என்பதனை அறிவதற்கு 'மேயர்சு, பிரிக்கசு அவர்கள் எழுபது முடிவடையாத கூற்றுக்களை கொடுத்துள்ளனர். அதில் ஒவ்வொரு கூற்றிற்கும் இரண்டு பதில்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒருவர் இந்தக் கூற்றுகளுக்கு அளிக்கும் பதிலைக் கொண்டு அவர்கள் எந்தவகையான ஆளுமை பண்பினை உடையவர்கள் என எளிதில் கண்டறிந்து விடலாம். ஒவ்வொரு கூற்றிற்கும் ஒரு பதிலை மட்டும் அளிக்க வேண்டும். பதில் அளிப்பவர் தங்களது பதிலை அளிப்பதற்கெனக் குறிப்பிடப்பட்டிருக்கும் எழுத்துக்களான "அ" அல்லது "ஆ" வைச் சுற்றி வட்டமிடவேண்டும்.

**மேயர்சு, பிரிக்கசு அவர்கள் மனோபாவத்தை வகைப்படுத்திக் காட்டும் கூற்றுக்கள்:**

**1.ஒரு விருந்தில் நான்**

அ. அன்னியர் உள்படப் பலருடன் கலந்துரையாடித் தொடர்பு கொள்வேன்.

ஆ. எனக்குத் தெரிந்த சிலருடன் மட்டும் உரையாடுவேன்.

**2. நான்**

அ. ஊகித்துச் செயல்படுவதைவிட இயல்பாகச் செயல்படுவேன்.

ஆ. இயல்பாகச் செயல்படுவதைவிட ஊகித்துச் செயல்படுவேன்.

**3. இது எனக்கு உகந்ததல்ல**

அ. கற்பனையில் மிதத்தல்.

ஆ. பழக்கப்பட்ட பாதையிலே செல்லல்.

**4. நான் அதிகம் பாதிக்கப்படுவது**

அ. கொள்கைகளினால்.

ஆ. மனவெழுச்சிகளினால்.

**5. நான் அதிகம் நாடுவது**

அ. அறிவுக்கு உகந்தவற்றை.

ஆ. மனத்திற்கு உகந்தவற்றை.

**6. நான் வேலை செய்ய விரும்புவது**

அ. கடைசி நிமிடம் வரை.

ஆ. எப்பொழுது முடியுமோ அப்பொழுது.

**7. நான் இவ்வாறு தேர்ந்தெடுப்பேன்**

அ. மிகக் கவனத்துடன்.

ஆ. மனத்திற்குப் பட்டவாறு.

**8. நான் விருந்துகளில்**

அ. நீண்ட நேரம் உற்சாகத்துடன் செயல்படுவேன்.

ஆ. விரைவில் சோர்வடைந்து வெளியேறிவிடுவேன்.

**9. நான் அதிகம் விரும்புவது**

அ. விவேகம் உள்ளவர்களை.

ஆ. கற்பனை உள்ளவர்களை.

**10. நான் அதிக ஆர்வம் கொள்வது**

அ. நடைமுறையை.

ஆ. சாத்தியத்தை.

**11. மற்றவர்களை எடைபோடும்போது நான் அதிகம் கருத்தில் கொள்வது**

அ. சூழ்நிலையைவிட, சட்டங்களை.

ஆ. சட்டங்களைவிட, சூழ்நிலையை.

**12. மற்றவர்களோடு என் உறவுமுறை**

அ. மனத்திற்குப் புறம்பானதைச் சார்ந்திருக்கும்.

ஆ. என் உள்ளுணர்வைச் சார்ந்திருக்கும்.

**13. நான் அதிகமாக விரும்புவது**

அ. காலந்தவறாமையை.

ஆ. சாவதானமாகச் செய்வதை.

**14. என்னை அதிகம் பாதிப்பது**

அ. முடிவடையாத செயல்கள்.

ஆ. முடிவடைந்த செயல்கள்.

**15. நான் சமூகக் குழுக்களில்**

அ. நடப்பவை எல்லாவற்றையும் அவ்வப்போது அறிந்து கொள்வேன்.

ஆ. தாமதமாக அறிந்து கொள்வேன்.

**16. சாதாரணமாகச் செயல்களைச் செய்யும் போது**

அ. வழக்கமான முறையிலேயே செய்ய விரும்புவேன்.

ஆ. என்னுடைய பாணியில் செய்ய விரும்புவேன்.

**17. எழுத்தாளர்கள்**

அ. நினைப்பவற்றைச் சொல்பவர்களாகவும், சொன்னதை நினைப்பவராகவும் இருத்தல் வேண்டும்.

ஆ. நேரடியாக எதையும் சொல்லாது மறைபொருளாகவே சொல்ல வேண்டும்.

**18. இது எனக்குப் பிடிக்கும்.**

அ. முரண்பாடற்ற சிந்தனை.

ஆ. இணக்கமான மனிதத் தொடர்பு.

**19. எவ்வகையான முடிவுகள் எடுக்கும்போது நான் ஆறுதலடைகிறேன்**

அ. அறிவுப்பூர்வமான முடிவுகளில்.

ஆ. மதிப்பீடுகளை ஒட்டிய முடிவுகளில்.

**20. நான் விரும்புவது**

அ. தீர்மானிக்கப்பட்டவற்றை, நிருணயிக்கப்பட்டவற்றை.

ஆ. தீர்மானிக்கப்படாத, நிருணயிக்கப்படாதவற்றை.

**21. நான்**

அ. ஆழ்ந்த யோசனை செய்பவர், தீர்மானமான முடிவுடையவர்.

ஆ. சுகவாசி.

**22. மற்றவருடன் தொலைப்பேசியில் பேசும் போது நான்**

அ. என்ன சொல்ல வேண்டுமென்று முன்பே தீர்மானிப்பதில்லை.

ஆ. சொல்வதற்குமுன் அதை யோசித்துச் சொல்லிப் பார்ப்பேன்.

**23. உண்மைகள் மற்றும் கருத்துக்கள்**

அ. தாமே விளக்கமளிப்பவை.

ஆ. கொள்கைகளை விளக்குபவை.

**24. கற்பனையில் மிதப்பவர்**

அ. எரிச்சல் அல்லது சினமூட்டுபவர்.

ஆ. ஈர்க்கும் தன்மையினர்.

**25. பெரும்பாலும் நான்**

அ. எளிதில் உணர்ச்சிவசப் படாதவன்.

ஆ. இரக்கச் சுபாவம் உடையவன்.

**26. இது மிகக் கீழ்த்தரமானது**

அ. நியாயமற்றுச் செயல்படுவது.

ஆ. இரக்கமற்றுச் செயல்படுவது.

**27. சம்பவங்கள்**

அ. கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

ஆ. ஏனோதானோ என்று நிகழ விட்டுவிட வேண்டும் .

**28. இது எனக்கு உகந்தது**

அ. வாங்கி முடித்துவிட்ட நிலை.

ஆ. வாங்குவதற்கு இன்னும் சந்தர்ப்பம் கொண்டிருப்பது.

**29. மற்றவருடன் சேர்ந்திருக்கும்போது**

அ. நானே உரையாடலைத் தொடங்குவேன்.

ஆ. மற்றவர்கள் என்னை நாடி வருவதை விரும்புவேன்.

**30. சமயோசிதப் புத்தி**

அ. கேள்விகளுக்கு அப்பாற்பட்டது.

ஆ. அடிக்கடி கேள்விக்குட்படுத்த வேண்டியது.

**31. குழந்தைகள் அடிக்கடி**

அ. போதுமான அளவு பயன்படும் முறையில் நடந்து கொள்வதில்லை.

ஆ. போதுமான அளவு கற்பனை சக்தியைப் பயன்படுத்துவதில்லை.

**32. முடிவுகள் எடுக்கும்போது இது எனக்கு உகந்ததாய் உள்ளது**

அ. சட்டங்களின் அடிப்படையில் எடுக்கப்படும் முடிவுகள்.

ஆ. உணர்வுகளின் அடிப்படையில் எடுக்கப்படும் முடிவுகள்.

**33. நான் அதிகம்**

அ. இதமாய் இருத்தலைக் காட்டிலும் உறுதியாய் இருப்பேன்.

ஆ. உறுதியாய் இருப்பதைக் காட்டிலும் இதமாய் இருப்பேன்.

**34. இது போற்றுதற்குரியது**

அ. ஒழுங்காகத் திட்டமிட்டுச் செயல்படுதல்.

ஆ. அனுசரித்துச் செயல்படுதல்.

**35. எவற்றை நான் அதிகம் மதிக்கிறேன்**

அ. மாறாது தீர்மானமாக உள்ளவற்றை.

ஆ. மாறக் கூடியவற்றை.

**36. எப்பொழுதும் போலன்றிப் புதிதாக மற்றவர்களுடன் பழகுதல்**

அ. என்னைத் தூண்டி சக்தியளிக்கிறது.

ஆ. எனக்குக் களைப்பூட்டுகிறது.

**37. பெரும்பாலும் நான்**

அ. நடைமுறைக்கு உகந்த வகையில் செயலாற்றுவேன்.

ஆ. கற்பனை வளத்துடன் செயலாற்றுவேன்.

**38. நான் பெரும்பாலும் பார்ப்பது**

அ. மற்றவர்கள் எவ்வாறு பயனுள்ளவராக இருக்கிறார்கள் என்று.

ஆ. மற்றவர்கள் எவ்வாறு நோக்குகின்றனர் என்று.

**39. எது திருப்தி அளிக்கிறது**

அ. ஒரு பிரச்சனையை நன்கு அலசி ஆராய்தல்.

ஆ. அந்தப் பிரச்சனையைப் பொருத்தவரை ஓர் ஒப்பந்தத்திற்கு வரல்.

**40. என்னை ஆட்டிப் படைப்பது**

அ. எனது அறிவு.

ஆ. எனது மனம்.

**41. நான் விரும்பும் செயல்கள்**

அ. ஒப்பந்தப்படி நடப்பது.

ஆ. இயல்பாக நடப்பது.

**42. நான் அதிகம் எதிர்பார்ப்பது**

அ. ஒழுங்காக நடைபெறும் செயல்கள்.

ஆ. எதிர்பாராமல் நடைபெறும் செயல்கள்.

**43. இதில் எனக்கு விருப்பம்**

அ. அதிக நண்பர்களுடன் குறைந்த தொடர்பு கொள்வது.

ஆ. குறைந்த நண்பர்களுடன் அதிக தொடர்பு கொள்வது.

**44. நான் பின்பற்ற விரும்புவது**

அ. நிகழ்வுகளின் உண்மையின் அடிப்படையை.

ஆ. கொள்கையின் அடிப்படையை.

**45. உங்களுக்கு எதில் ஆர்வம்**

அ. உற்பத்தியும் விநியோகமும்.

ஆ. வடிவமைப்பும் ஆராய்ச்சியும்.

**46. இது எனக்கு அதிகப் பெருமைக்குரியது**

அ. அறிவுப்பூர்வமாக, நியாயமாகச் செயல்படுபவர் எனப்படுவது.

ஆ. உணர்வுப்பூர்வமாகச் செயல்படுபவர் எனப்படுவது.

**47. நான் இவ்வாறு இருப்பதில் அதிகமான பெருமை கொள்வேன்.**

அ. தடுமாற்றமில்லாது நிலையாக இருப்பது.

ஆ. ஆர்வப் பற்றுக் கொண்டவராக இருப்பது.

**48. நான் அதிகம் விரும்புவது.**

அ. இறுதியான மாற்ற முடியாத கூற்று.

ஆ. மாற்றக்கூடிய ஆரம்பக் கட்டத்திலுள்ள கூற்று.

**49. இந்த நிலை எனக்கு அதிகம் உகந்ததாய் உள்ளது.**

அ. ஒரு முடிவெடுத்தபின்.

ஆ. ஒரு முடிவெடுப்பதற்கு முன்.

**50. நான்**

அ. அன்னியருடன் தாராளமாக, சரளமாகப் பழகுகிறேன்.

ஆ. அன்னியருடன் பேசவே ஒன்றுமில்லை என்று உணர்கிறேன்.

**51. நான் அதிகம் விரும்புவது**

அ. அனுபவத்தை.

ஆ. ஊகித்தறிதலை.

**52. நான்**

அ. சாமர்த்தியமாகச் செயல்படுவதைவிட நடைமுறையில் செயல்படுவேன்.

ஆ. நடைமுறையில் செயல்படுவதைவிட சாமர்த்தியமாகச் செயல்படுவேன்.

**53. யார் அதிகம் போற்றத் தக்கவர்**

அ. தெளிவான சிந்தனை கொண்டவர்.

ஆ. ஆழ்ந்த உணர்ச்சி வடிவமானவர்.

**54. நான் பொதுவாக இவ்வாறு செயல்படுவேன்**

அ. சட்டத்திற்கு முரண்படாதவாறு.

ஆ. இரக்கமுடையவராக.

**55. இது விரும்பத்தக்கது**

அ. சரியாக நன்முறையில் எல்லாவற்றையும் ஏற்பாடு செய்தல்.

ஆ. தன்னிச்சையாகச் செயல்களை நடக்கவிடுதல்.

**56. உறவுமுறைகள் பெரும்பாலும்**

அ. சமரசப் பேச்சை அடிப்படையாகக் கொண்டவை.

ஆ. சூழ்நிலையைப் பொருத்தும் மனம்போன போக்கிலும் அமையும்.

**57. தொலைப்பேசி மணி அடிக்கும்போது**

அ. வேகமாகத் தொலைப்பேசியை முதலில் எடுப்பேன்.

ஆ. யாரேனும் எடுத்துப் பதிலளிப்பர் என எதிர்நோக்குவேன்.

**58. என்னிடம் நான் அதிகம் மதிப்பது**

அ. நடைமுறைக்கொத்த செயல்கள்.

ஆ. கற்பனை வளம்.

**59. நான் அதிகம் நாட்டம் கொள்வது**

அ. அடிப்படை அம்சங்களில்.

ஆ. மறைமுகமாகக் கூறப்பட்டவற்றில்.

**60. எது அதிகத் தவறாகத் தோன்றுகிறது**

அ. மிக அதிகமாக உணர்ச்சிவசப்படுவது.

ஆ. மனம் உணர்வுகளால் பாதிக்கப்படாமல் இருப்பது.

**61. நான் அடிப்படையில்**

அ. உணர்ச்சிவசப்படாதவன்.

ஆ. இளகிய மனமுடையவன்.

**62. எந்தவகைச் சூழ்நிலை உங்களுக்கு அதிகமாக உகந்ததாகத் தோன்றுகிறது.**

அ. முறைப்படி குறித்தபடி அமைவது.

ஆ. முறைப்படுத்தப்படாமலும் குறித்த காலத்தில் செயல்படாமலும் அமைவது.

**63. நான் பெரும்பாலும்**

அ. நினைத்த நேரத்தில் நினைத்தபடி செயல்படுவதை விட வழக்கமான முறையில் செயல்படுவேன்.

ஆ. வழக்கமான முறையில் செயல்படுவதைவிட நினைத்த நேரத்தில் நினைத்தபடி செயல்படுவேன்.

**64. நான்**

அ. மற்றவருடன் எளிதில் நெருங்கிப் பழகக் கூடிய தன்மையுடையவன்.

ஆ. கலகலப்பற்ற சுபாவம் கொண்டவன்.

**65. எழுதும்போது நான் அதிகம் விரும்புவது.**

அ. நேரடியாகச் சொல்வதை.

ஆ. மறைபொருளாக உரைப்பதை.

**66. இது எனக்கு அதிகக் கடினமாய் உள்ளது.**

அ. மற்றவர்களுடன் என்னையே ஐக்கியமாக்குதல்.

ஆ. மற்றவர்களைப் பயன்படுத்துதல்.

**67. எனக்கு இந்தத் தன்மை அதிகமாக வேண்டுமென்று விரும்புகிறேன்.**

அ. தெளிவான பகுத்தறிவு.

ஆ. இரக்கத்தின் வல்லமை.

**68. எது அதிகத் தவறானது**

அ. சீர்தூக்கிப் பார்க்காத தன்மை.

ஆ. விமர்சிக்கும் மனப்பான்மை.

**69. நான் அதிகம் விரும்புவது**

அ. திட்டமிட்ட செயல்.

ஆ. திட்டமிடப்படாத செயல்.

**70. நான் பெரும்பாலும்**

அ. இயற்கையாகவும் தன்னிச்சையாகவும் செயல்படுவதைவிடச் சிந்தித்துச் செயல்படுவேன்.

ஆ. சிந்தித்துச் செயல்படுவதைவிட இயற்கையாகவும் தன்னிச்சையாகவும் செயல்படுவேன்.

என்பவைகளாகும். மேற்காணும் வினாக்கள் பெரும்பாலும் தற்கால நடைமுகைளைச் சார்ந்து இருந்தாலும், இவற்றுள் உள்ள சில வினாக்கள் சங்க இலக்கியப் பாடாண் திணைப் பாடல்களில் உள்ள ஆளுமைப் பண்புகளை அளவிடுவதற்கு ஏற்ற சிந்தனைக் களங்களாக அமைகின்ற காரணத்தினாலும், இவற்றின் வழியே பின்வரும் சங்க இலக்கியப் பாடாண்திணைப் பாடல்களில் சில ஆளுமைப் பண்பு குறித்த சிந்தனைகள் மதிப்பிடப்படும் வகையினாலும் இவ்வினாக்களை விளக்கமாக இங்கு தருவது தேவையாகின்றது.

## ஆளுமைக் கோட்பாடுகள்

"ஆளுமை பற்றிய ஆராய்ச்சிகள், கண்டுபிடிப்புகள் அறிவியல்சார் கருத்துக்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஆளுமை என்னும் கருத்தினை விளக்குவதே ஆளுமைக் கோட்பாடு"[20] ஆகும்.

ஆளுமைக் கோட்பாடுகள் கொள்கைகளின் அடிப்படையில் வகைப்பாட்டுக் கோட்பாடுகள், அடிப்படைப் பண்புக்கூறு கோட்பாடுகள், வகைப்பாடு அடிப்படைக் பண்புக் கூறு கோட்பாடுகள், உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள், மார்கன் கில்லேண்டின் இயல்புணர்வுக் கோட்பாடு, வேதாந்த நோக்கில் ஆளுமைக் கோட்பாடுகள் வரிசையாக விளக்கப்பட்டுள்ளன. அவை :

### அ. வகைப்பாட்டுக் கோட்பாடுகள்

வகைப்பாட்டுக் கோட்பாடுகள் மனிதனின் உடல் அமைப்புகளைக் கொண்டு ஆளுமையை வேறுபடுத்த முயலுகின்றது. "கிரெட்சுமர், செல்டன் என்னும் உளவியல் அறிஞர்கள் உடல் அமைப்பின் அடிப்படையில் ஆளுமை"[21] என வகைப்படுத்தியுள்ளனர்.

1. திரண்ட பருத்த தசைகளும், எலும்புகளும் உடையோர். இவர்கள் தங்களது பிரச்சினைகளைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பார்கள்.

---

20 . க. பலராமன், உளவியல் நோக்கில் திருக்குறள்.

21 . சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள்.

பிறருடன் நெருங்கிப் பழக விரும்பமாட்டார்கள். ஓய்வை அதிகம் விரும்பக் கூடியவர்களாகவும், உணவு, உறக்கம் போன்றவற்றில் அதிக நாட்டம் கொண்டவர்களாகவும் திகழ்வர்.

2. ஒல்லியாக ஒட்டிய மார்பும், குறுகிய தோள்களும் உடையோர். இவர்களின் செயல்பாடுகளில் உணர்ச்சி மிகுந்த கற்பனைத் திறன் அதிகம் காணப்படும். சமூகச் செயல்பாடுகளில் நாட்டம் அற்றவர்களாகவும் வெளித் தூண்டல்களுக்கு உடனடித் துலங்கல் வெளிப்படுத்தக்கூடியவர்களாகவும் காணப்படுவர்.

3. உருண்டையான உடலும், வட்ட முகமும் உடையோர். இவர்கள் கலகலப்பானவர்கள். நகைச்சுவை உணர்வு மிக்கவர்கள். பிறருடன் நெருங்கிப் பழகுவர். துணிவு மிக்கவர்கள், செயல்களில் தீவரமாக ஈடுபடுபவர் இவர்களுடைய மனவெழுச்சி நிலைகளில் திடீர் மாற்றங்கள் ஏற்படும் என்று அறிவித்துள்ளார்கள்.

“வகைப்பாட்டுக் கோட்பாட்டில் ஹிப்போக்ரட்ஸ் என்பவர் தனிமனிதனின் இயல்பான உடலமைப்பைக் கொண்டுள்ளது ஆளுமை.”[22] என வகைப்படுத்தியுள்ளார்.

அவை,

- சிடுமூஞ்சி (கோபம்) ஆளுமை
- அழுமூஞ்சி (மனச்சோர்வு) ஆளுமை
- தூங்குமூஞ்சி (விரைவில் செயல்படாதவன்) ஆளுமை
- சிரிமூஞ்சி (நல்லது என நம்புபவன்) ஆளுமை

என்பவைகள் ஆகும்.

[22]. அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல்.

### ஆ. அடிப்படைப் பண்புக்கூறு கோட்பாடுகள்

ஆளுமையின் பல்வேறு அடிப்படைப் பண்புக் கூறுகளைக் கொண்டு ஆளுமையை விளக்குவது பண்புக்கூறு கோட்பாடு எனப்படும். ஆர்.பி. காட்டல் என்பவர் மனிதனது ஆளுமையைக் கண்டறிய தனிமனிதனின் இயற்கைப் பண்புகளும், நடத்தைப் பண்புகளும் அடிப்படையாகும் என்று கூறுகின்றார். எப்பண்பு முரண்பாடற்றதாகவும், விரைவில் மாறாத தன்மைகளையும் பெற்றிருக்கிறதோ அதுவே ‘கூறு’ எனப்படும். ஒருவனின் ஆளுமை என்பது பல பண்புகள் அல்லது கூறுகளால் தொகுக்கப்பட்டதாகும்.

‘காட்டல்’ என்பவர் பண்புக் கூறுகளை இரண்டு வகைப்படுத்துகிறார். அவை,

1. **மேற்பரப்புக் கூறுகள்**

   இக்கூறுகள் தனிமனிதனின் நடத்தையில் காணப்படக்கூடியவை.

2. **ஆதாரப் பண்புக் கூறுகள்**

ஒவ்வொரு தனி மனிதனும் ஆதாரப் பண்புகளைப் பெற்றிருக்கிறான். இவை மறைவான பண்புகளாகும். மேற்பரப்புப் பண்புகள் இவற்றையே அடிப்படையாகக் கொண்டு திகழும். ஒருவன் ஆதாரப் பண்புக் கூறான மனவெழுச்சியைப் பெற்றிருக்கும் பொழுது மட்டும் கோபமடைகிறான். காட்டலின் கூற்றுப்படி இவ்விரு கூறுகளின் தொகுப்பே தனிமனிதனின் ஆளுமை ஆகும்.

### இ. வகைப்பாடு அடிப்படைக் பண்புக் கூறு கோட்பாடுகள்

வகைப்பாடு – அடிப்படைப் பண்புக் கூறு கோட்பாடுகள் என்பவை வகைப்பாட்டுக் கொள்கை மற்றும் அடிப்படைப் பண்பு கொள்கைகளின் கருத்துக்களை பயன்படுத்தி ‘ஐசன்ங்’ என்பவர் ஆளுமையை விளக்கியுள்ளார். இவரது கருத்துப்படி நான்கு வகை ஆளுமைகள் காணப்படுகின்றன. அவை,

- அகமுகத்தன்மை
- புறமுகத்தன்மை
- நரம்புத் தன்மை நோய்
- கடுமையான சித்தக் கோளாறு நோய்

என்பவை ஆகும். 'லிப்பிட் மற்றும் ஒயிட்' என்ற அறிஞர்கள் மனிதனின் தலைமைப் பண்பின் அடிப்படையில் மூவகை ஆளுமையைக் குறிப்பிடுகின்றனர்.

**இ. 1. எதேச்சாதிகார ஆளுமை**

அதிகாரப் பலம் கொண்டு தன் முடிவுகளை எவ்வித தயவு தாட்சண்யமும் இன்றி, பிறர் மீது திணிப்பர் இவ்வகை ஆளுமை பண்பை உடையோர்.

**இ. 2. ஜனநாயகப் போக்குடைய ஆளுமை**

இவ் ஆளுமைப் பண்பினை உடையோர் ஒரு பிரச்சனை குறித்த முடிவுகளை எடுக்கும் முன்னர் அனைவரது கருத்துக்களுக்கும் மதிப்பளித்து, தன்னுடைய முடிவினை அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வண்ணமே செயல்படுவர்.

**இ. 3. அவரவர் விருப்பம் போல இயங்க அனுமதிக்கும் ஆளுமை**

இவர்கள் தனது குழுவில் உள்ள ஒவ்வொரு நபரையும் அவர்களுடைய விருப்பத்தின் பெயரில் இயங்க அனுமதித்து, பின் அவர்களைக் கட்டுப்படுத்தக் கூடிய ஆற்றலில்லாத தலைமையுடன் காணப்படுவர். 'ஆக்பர்ன்' என்ற சமூகவியல் அறிஞர் ஒரு தனி மனிதனின் செயல்பாடுகள் மற்றும் பண்புகளின் அடிப்படையில் தன்னலக்காரன், புரட்சியாளன், தலைவன், தற்பெருமைக்காரன், சூதாடி, பிறர் தன்னை மெச்ச விழைபவன் என்றும் ஆளுமைவகைகளை கூறுகின்றார்.

**ஈ. உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள்**

உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள் ஆளுமையின் வளர்ச்சியை நன்கு விளக்குகின்றன. இதில் பிராய்டு, ஆட்லர், யூங் போன்றோரின் கொள்கைகள் மிகவும் சிறந்தது.

***சிக்மண்ட் பிராய்டு***

சிக்மண்ட் பிராய்டு என்பவரே உளப்பகுப்பாய்வு கொள்கைக்கு அடித்தளமிட்டவர். இவரது கருத்துப்படி மனிதனுடைய ஆளுமை மூன்று நிலைகளாகப் பகுக்கப்பட்டிருக்கிறது. அவை,

- இட் (Id) என்ற அடிநிலை மனம்
- ஈகோ (Ego) என்ற அடிநிலை மனம்
- சூப்பர் ஈகோ (Super Ego) என்ற மேனிலை மனம்

என்பன.

**இட் என்ற அடிநிலை மனம்**

இட் என்பது ஆளுமையின் அடித்தளம் ஆகும். இது உயிரினங்களின் அடிப்படைத் தேவைகளை அடைவதனை குறிக்கோளாகக் கொண்டது. மனித வாழ்விற்குத் தேவையான காற்று, நீர், உணவு போன்றவற்றை அடைய உதவும் தூண்டுகோலாகும்.

**ஈகோ என்ற நனவுநிலை மனம்**

ஈகோ என்பது நாம் வெளிப்படையாகவே உணரும் வெளிமனப்பகுதியாகும். சுற்றுப்புறச் சூழ்நிலையை அறிந்து எண்ணங்கள், செயல்கள் உணர்ச்சிகளை ஒழுங்குப்படுத்திப் பிரச்சினைகளைக் கையாள்வதிலும், ஈகோ அக்கறை காட்டும், இது ஒரு நடுநிலைவாதி போன்றது.

**சூப்பர் ஈகோ என்ற மேனிலை மனம்**

சூப்பர் ஈகோ கண்டிப்பு நிறைந்த ஒரு மேற்பார்வையாளன் போன்றது. பெற்றோர்கள், ஆசிரியர்கள் போன்றோர் வலியுறுத்தும் சமூக நடத்தைகள், மதிப்புகள், தரங்கள் அறக்கோட்பாடுகள் போன்றவற்றை குழந்தை தன் உள்ளத்துள் அமைத்தலால் இம்மேனிலை மனம் உருவாகின்றது.

பிராய்டின் பகுப்பாய்வுக் கோட்பாட்டின்படி 'இட்'-ன் ஊக்கிகளும், 'ஈகோ' மற்றும் 'சூப்பர் ஈகோ' ஆகியவற்றின் தடுப்புச் சக்திகளுக்கும் இடையே போராட்டங்கள் எழுந்து ஆளுமை வளர்ச்சியில் சிக்கல்களைத் தோற்றுவிக்கும். இச்சிக்கல்களை எவ்வாறு சமாளிக்கிறோம் என்பதனைப் பொறுத்தே ஒருவனது ஆளுமைத் தன்மை அமையும் என்று கூறுகின்றார்.

**ஆட்லரின் தனிநபர் உளவியல்**

ஒருவனது ஆளுமையின் தனித்தன்மையில் பாலூக்கத்தை விட ஆக்கிரமிப்பு அல்லது வலிமை வாய்ந்த ஊக்கத்தின் சக்தி, ஆளுமை வளர்ச்சியில் அடிப்படை இயல்பூக்கங்களைவிட சமூக சக்திகளின் மிகுதியான செல்வாக்கு போன்றவற்றை ஆட்லர் வலியுறுத்தினார். 'தாழ்வுச் சிக்கல்' என்னும் கருத்தைத் தோற்றுவித்தவரும் இவரே. குழந்தையின் பிறப்பு வரிசை நிலையும் ஒருவரது ஆளுமையை உருவாக்கும் காரணியாக ஆட்லர் குறிப்பிடுகிறார்.

**கார்ள் யூங்கின் பகுப்பாய்வு**

மனித மனத்தின் நான்கு செயல்களான 1. சிந்தித்தல் 2. உணர்தல் 3. உணர்ச்சி கொள்ளுதல் 4. உள்ளுணர்வு ஆகியவை பற்றியும் அவை எவ்வாறு தீர்மானிக்கப்படுகின்றது என்று யூங் விளக்குகின்றார். உள இயக்கக் கூறுகள் சமநிலையை அடைய உதவும் தற்போதைய அனுபவங்களுக்கே முதலிடம் தருகிறார் யூங். இவர் மனிதர்களை அவர்களது சமூக நடத்தைகளை அடிப்படையாகக் கொண்டு இருவகைகளாகப் பின்வருமாறு பிரித்துக் கூறுகிறார்.

- **அகமுகர்**

அகமுகர் இவர்கள் தனித்திருப்பதையே அதிகம் விரும்பக் கூடியவனாகவும், வேலை செய்ததைவிட பகற்கனவு காண்பதிலேயே ஆர்வமுள்ளவனாகவும் இருப்பார்கள். புத்தகங்களை வாசிப்பதில் அதிக ஆர்வம் உள்ளவர்களாகக் காணப்படுவர். இவர்கள் தன் கருத்துக்களைப் பேச்சு மூலமாக அளிப்பதைவிட எழுத்து மூலமாகவே வெளிப்படுத்துவர்.

- **புறமுகர்**

புறமுகர் சமூக நட்புணர்ச்சியுடனும், கவலைகளற்றும் காணப்படுவர். இவர்கள் மக்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளக் கூடியவர்களாகவும் மனவெழுச்சிகளை ஒளிவுமறைவு இன்றி வெளிப்படுத்தக் கூடியவர்களாகவும் திகழக் கூடியவர்கள் என்று யூங் கூறுகிறார்.

**உ. மார்கன் கில்லேண்டின் இயல்புணர்வுக் கோட்பாடு**

இயல்புணர்வை அடிப்படையாகக் கொண்டு ஆளுமைப் பண்பினை மார்கன் மற்றும் கில்லேண்டின் நான்கு விதமாக விளக்குகின்றார்.

**உற்சாகமானவர்கள்**

உற்சாகமானவர்கள் நம்பிக்கை உணர்வும், உற்சாகமும், மகிழ்ச்சியும் கொண்டவர்களாகத் திகழ்வர்.

**மனச்சோர்வுடையவர்கள்**

நம்பிக்கையற்றவர்களும், உணர்ச்சி வயப்படக்கூடியவர்களும் மனச்சோர்வாளர்கள் ஆவர்.

**எரிச்சலடைபவர்கள்**

எரிச்சலும், கோபமும் எளிதில் அடையக் கூடியவர்கள். பிறர் செயல்பாடுகளில் குறுக்கிடக் கூடியவர்களாகவும் திகழ்வர்.

**நிலையற்றவர்கள்**

உணர்ச்சி வசப்படும் சமநிலையற்றவர்கள். எப்போது எப்படிச் செயல்படுவார்கள் என்று கூற முடியாது. ஒருவரது ஆளுமைப் பண்பினை மேலே கண்ட பிரிவுகளுக்குள்ளே வகைப்படுத்தி விடலாம் என்பது 'மார்கன் மற்றும் கில்லேண்டின்' கருத்து ஆகும்.

**ஊ. வேதாந்த நோக்கில் ஆளுமைக் கோட்பாடுகள்**

சுவாமி சின்மயானந்தா அவர்களின் வழிகாட்டல் அடிப்படையில் மனிதர்களின் ஆளுமைப் பண்பு பற்றி வேதாந்தக் கோட்பாட்டில் ஐந்து பரிணாமங்களில் மனிதனின் ஆளுமைப் பண்பு உருவாகின்றன என்பதையும் சீரிய ஆளுமைப் பண்புடைய ஒருவரிடத்தில் இந்த ஐந்து பண்புகளும் ஒத்திசைந்து செயல்படுகின்றன என்பதனைக் குறிக்கப்பெறுகின்றது.

**உடலியல் ஆளுமை**

உடலியல் ஆளுமை நமது புலன்களைப் பொறுத்து அமையும். உடலின் வளர்ச்சிக்குச் சத்தான சமச்சீர் உணவு, கேளிக்கை, இசை, உற்றார் உறவினரின் பாசம், பரிவு, உழைப்பு ஆகியவை தேவையாகும். பிரித்துணர்ந்து செயல்படுதல் புலன்களின் சீரான வளர்ச்சிக்கு முக்கியத் தேவையாகும். இல்லையெனில், புலனுர்ச்சிகளில் அளவுக்கு மீறிய ஈடுபாடு ஏற்பட்டு உடலியல் சமச்சீர் பாதிக்கப்படும்.

**ஆற்றல் ஆளுமை**

உடலியல் ஆளுமையை விடச் சூட்சமம் கொண்டது ஆற்றல் ஆளுமை. வளர்ச்சிதை மாற்றம், ஆற்றல் வெளிப்பாடு ஆகியவை அடங்கியது. இதில் மூச்சைக் கையாளுவது முக்கியப் பங்கு வகிக்கிறது. மூச்சைச் சீராக இழுத்து நிறுத்தி வெளிவிடுவதால், சினம், கவலை, அமைதியின்மை ஆகியவற்றைக் கட்டுப்படுத்தலாம்.

**மன ஆளுமை**

மனதைக் கட்டுப்படுத்துவது இதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. மன அமைதி, மனம் ஒன்றுதல், மனக் கட்டுப்பாடு, தன்னலமின்மை ஆகியவை இதன் சிறப்பிற்குத் தேவையானவை ஆகும்.

**அறிவு ஆளுமை**

அறிவு ஆளுமை தக்க அறிவினைப் பெற்று அதன்படி பகுத்துணர்ந்து சிந்தித்து செயல்படுவதைக் குறிக்கும். பொதுவான கல்வி மட்டுமின்றி அறநூல்களையும், பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளையும், நல்ல இலக்கியங்களையும், தத்துவ மேதைகளின் நூல்களைப் படிப்பது, அவர்களின் பேச்சுகளைக் கேட்பது இவ்வகை ஆளுமை சிறக்க உதவும்.

**மகிழ்வு ஆளுமை**

அமைதியோடும், மகிழ்ச்சியோடும் சமச்சீர் நிலைமையில் ஒருவர் இருப்பதைக் குறிக்கிறது. இது உலகத்தில் நடக்கும் போட்டி, பொறாமை, சிறுமை, சீரழிவு, போர், போராட்டம், துன்பங்கள் ஆகியவற்றைக் கண்டும் கலங்காது அமைதியோடு திகழும் ஆளுமைப் பண்பே இதுவாகும்.

**ஆளுமைப் பண்பை மேம்படுத்தும் வழிமுறைகள்**

ஆளுமைப் பண்பு ஒரு மனிதனைப் பிறரிடமிருந்து பிரித்துக் காட்டும் தனித்துவமானதாகும். நமது எண்ணங்கள், உணர்ச்சிகள், பேச்சு, செயல்கள் மூலம் நமது ஆளுமைப் பண்பு வெளிப்படுகிறது. நமது சுற்றுச்சூழலுக்கு ஏற்படி இணக்கமாக நடந்து கொள்வதையும், சமுதாயத்தில் நமக்குரிய மதிப்பினையும், நமது நல்வாழ்வினையும் ஆளுமைப் பண்பு நிர்ணயிக்கிறது.

**ஈதல் இசைபட வாழ்தல்**

நாம் நெஞ்சம் நெகிழ்ந்து மனதார தேவைப்படுவோருக்கு கொடுப்பதும், உதவுவதும் நம்மீது பிறர் காட்டும் மதிப்பினை உயர்த்துகின்றன. நமது கொடைப் பண்பு மிகவும் செலவு பிடிக்கக் கூடியதாகவோ, தம் எல்லையை

மீறியதாகவோ இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. வேறு ஏதும் ஒரு பலனை எதிர்பாராது கொடுப்பதே அவசியம் ஆகும்.

**பணிவே பெருமை**

பணிவு காட்டும் பண்பை நாம் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். பணிவு என்பது நமது உள்ளத்திற்கு அமைதி சேர்க்கும். தமது திறமைகளையும், ஆற்றல்களையும், சொத்துக்களையும் பிறர் அறிந்தும் கேட்டும் வியக்க வேண்டும் என்று நினைக்கக் கூடாது.

**பிறரைக் கவரும் ஆற்றல்**

ஒரு தலைவன், ஒரு மேலாளர், பிறரை வழிநடத்திச் செல்வோன் ஆகியோருக்குத் தேவைப்படுவது மட்டுமல்லாது, சமூக வாழ்வில் ஈடுபடுவோர் அனைவரும் பொதுவாக விரும்புவது பிறரைக் கவரும் ஆற்றலையே ஆகும். ஒருவரது கவர்ச்சி மற்றவர்களை விரும்பச் செய்கிறது. அது பயிற்சியினால் பெறக் கூடிய பண்பேயாகும். ஒருவருடைய கவர்ச்சி அவரைச் சுற்றியுள்ள மனிதர்களிடம் எதிரொலித்து நேர்முக எண்ணங்களைத் தூண்டுகிறது. அவர்கள் பால் செல்வாக்குச் செலுத்த உதவுகிறது.

**புன்னகை புரிதல்**

புன்னகை என்பது உடல் நலம், பொருள் நலம், மகிழ்ச்சி அனைத்திற்கும் அடிப்படை ஆகும். மகிழ்ச்சி நிறைந்த முகத்தோடு புன்னகை புரிந்தால் அது மூளைக்கு உற்சாகத்தை அளிக்கிறது. உடல் வலியினைப் போக்குகிறது. நரம்புகளை இறுக்கத்திலிருந்து தளர்த்துகின்றது. பிறரிடமும் உற்சாகத்தை ஊட்டுகிறது. புன்னகை மட்டுமின்றி ஊக்கமும் பிறரைத் தொற்றிக் கொள்ளச் செய்கிறது.

**உயர்வுள்ளல்**

உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் என்றார் வள்ளுவர். உயர்வுள்ளல் பணிவிற்கு எதிரானதல்ல. நாம் எப்படிப்பட்ட உயர்ந்த பண்புகளுடன் இருக்க வேண்டும் என்பதை நாமே உணர்ந்து, அத்தகைய உயர்ந்த ஆளுமை உடையவராகவே நம்மைக் கற்பனை செய்து பார்த்துக் கொள்ள வேண்டும். அந்தக் கற்பனை எண்ணங்களை நமது உயர்வுக்கு வழிகோலும். அவற்றின் சிந்தனையே அடைய வேண்டியவை நம்மை நாடி வரும்.

**திட்டமிடல்**

வெவ்வேறு பணிகளைத் திட்டமிட்டுக் கொள்ளுங்கள். அன்றாடம் முடிக்க வேண்டிய பணி, முக்கியப் பணி, அவசரப் பணிகளை இலக்குகளுக்கேற்ப வரிசைப்படுத்திக் கொள்ளுங்கள். இதனால் உங்கள் காலம் வீணாகாது தவிர்க்கலாம். மேலும் மிக அவசியமான பணிகள் தடைப்படாது இலக்குகளை அடைந்து பயன்பெறலாம்.

**தொடர்பு கொள்ளுமாற்றல்**

எழுத்து மற்றும் பேச்சு ஆகிய இரண்டு முறைகளிலும் பிறருடன் தொடர்பு கொள்ளலாம். தொடர்பு கொள்வதன் நோக்கம் ஒருவர் மனதிலுள்ள எண்ணத்தையோ, வேண்டுகோளையோ, பரிந்துரையோ, கட்டளையையோ, உரியவர்களுக்குத் தெரியப்படுத்தி அதனை நிறைவேற்றிக் கொள்ளுதல் ஆகும். ஒருவர் கூறியதை அவர் எண்ணியவாறே அதனைப் பெறுபவர் புரிந்து கொண்டாரா என்பதை நாம் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். நேரில் ஒருவரிடம் பேசுவது என்றால் உடல்பேசும் மொழி, முகம்கூறும் மொழி ஆகியன பேசுவதற்குத் தக்கவாறு பிறர் புரிந்துகொள்ளும்படியும் இருக்க வேண்டும்.

**நம்பிக்கை**

ஒருவர் தன்னுடைய இலக்கில் நம்பிக்கை வைக்க வேண்டும். தன்மேல் நம்பிக்கை கொள்ள வேண்டும். தன்னுடன் பணியாற்றுபவர்களின் மீதும் நம்பிக்கை வேண்டும்.

**வெளிப்படை**

ஒரு மனிதனின் செயல்பாடுகள் மறைவின்றி வெளிப்படையாக அமைய வேண்டும். பிறருடைய கருத்துக்களை வரவேற்று மதிப்பளிக்க வேண்டும். தனது கருத்திற்கு வேறுபட்ட கருத்துக்களுடையவர்களிடமும் இணைந்து செயல்படும் விருப்பம் வேண்டும்.

**நல்ல எடுத்துக் காட்டு**

ஒருவன் தானே பிறருக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக திகழ வேண்டும். எந்தப் பணியையும் தாழ்வாக எண்ணலாகாது. பிற பணியாளர்களுடைய முயற்சிகளுக்கு ஆதரவு வழங்க வேண்டும். ஒருவர் பிறரிடம் எதிர்பார்க்கக்கூடிய பண்புகள் அவரிடம் இருக்க வேண்டும்.

**தனக்குத் தானே ஊக்கமளித்தல்**

சிறப்பான ஆளுமைப் பண்பில் தனக்குத் தானே ஊக்கமளித்தல் சிறப்பான பங்கு வகிக்கிறது. கற்காலத்திலிருந்து கணிப்பொறி காலம் வரை எண்ணற்ற கண்டுபிடிப்புகள் மனித வாழ்க்கையின் தரத்தை உயர்த்த உதவியுள்ளன. அத்தகைய கண்டுபிடிப்புகளின் அடிப்படைக் காரணம் மனிதன் தனக்குத்தானே ஊக்கமளித்துக் கொண்டது தான்.

**தெளிவு**

தனிமனிதனின் சிந்தனையிலும், சொல்லிலும், செயலிலும் தெளிவு வேண்டும். எனினும் தெளிவிற்கு வழிவகுக்கக் கூடிய ஒருவரது நோக்கம், பேச்சு, செயல்பாடு ஆகியவை தொடர்புடைய அனைவர்க்கும் தெள்ளத் தெளிவாக தெரிவது அவசியமாகும்.

**முழுமை**

ஒவ்வொரு பணியிலும் நமது முழுமையான திறன்களைக் காட்டி நன்கு செய்யப்படுவது அவசியமானதாகும். எனினும் நூற்றுக்கு நூறு சரியாகச் செய்யப்படுவது என்பது அனைவராலும் இயலாத காரியம். ஏனென்றால் நூறு என்பது அவரவர் பார்வைக்கேற்ப மாறுபடும். ஒருவன் தனது முழுக் கவனத்தினையும் செலுத்தி தனது இலக்கினை அடைய முயற்சித்தால் அவனது இலக்கு வெகுவிரைவில் கைகூடும்.

**ஆளுமைப் பண்பை பாதிக்கும் காரணிகள்**

மனிதன் செய்கின்ற ஒவ்வொரு செயலும், பெறுகின்ற ஒவ்வொரு அனுபவத்தின் வாயிலான சிந்தனையும், மனத்தில் ஒரு பதிவுகளை உருவாக்குகின்றன. அவை நமக்கு வெளிப்படையாகத் தோன்றாமல் ஆழ்மனதில் புதைந்து கிடக்கும் மனப்பதிவுகளே நாம் யார் என்பதை நிர்ணயிக்கின்றன. எனவே நமது மனப்பதிவுகள் நன்றாக இருக்குமேயானால் நமது பண்புநலன்களும் நன்றாக இருக்கும். நம்முடைய மனப்பதிவுகள் தீயனவாக இருக்கக் கூடுமேயானால் நமது பண்புநலன்களும் தீயனவாக இருக்கும்.

**இடவியல் காரணிகள்**

ஒருவர் வசிக்கின்ற இடமும் அவரது ஆளுமைப் பண்பைப் பாதிக்கும் என்பதை நாம் தெளிவாகக் காணலாம். எல்லாத் தகுதிகளும் ஒன்றாக இருக்கும் மனிதர்கள் ஒரு சிற்றூரிலே வசிப்பதற்கும் பெருநகரிலே வசிப்பதற்கும் பெருத்த வேறுபாடுகளைக் காணலாம். ஒருவர் கிராமத்திலிருந்து நகரத்திற்கோ நகரத்திலிருந்து கிராமத்திற்கு குடிபெயரும் போது இவ்வேறுபாடுகள் நன்கு வெளிப்படும்.

**தட்பவெப்பநிலை**

தட்பவெப்பநிலையும் ஒரு மனிதனை வெகுவாக பாதிக்கக் கூடும். வெயில் காலத்தில் உடல் வெப்பம் அதிகரிப்பு, வியர்வை ஆகியவற்றின்

காரணமாகக் கடின உழைப்பை மேற்கொள்ள முடிவதில்லை. மிகக்குளிரும் அதிக வெப்பமும் மாறிமாறி வரும் சூழலில் இருப்பது மிகவும் மன அழுத்தத்தையும் உடலியல் தொல்லைகளையும் தோற்றுவிக்கும்.

**உணவு**

ஒருவரது உணவுப்பழக்கங்களும் அவரது மனநிலையிலும் உடல்நிலையிலும் பெரும் தாக்கங்களை உருவாக்கக் கூடியது. அதிக அளவு சமைத்த உணவு, அரிசி, பருப்பு ஆகியவற்றை உண்பதால் சோம்பல் தோன்றும். அசைவ உணவு, காரமாண உணவு ஆகியவை உணர்ச்சிகளைத் தூண்டக்கூடியது. காய்கறிகள் மற்றும் பழங்கள் கொண்ட சமச்சீர் சைவ உணவு உடலுக்கு ஏற்றது. உணவைக் குறைவாகவே உட்கொள்ள வேண்டும். “மாமிச உணவுகள் போராட்ட உணர்வை உருவாக்கிப் பிறரிடம் சண்டை புரியத் தூண்டும்”[23] என்கிறார் சுந்தர சீனிவாசன்.

**உளவியல் காரணிகள்**

ஒருவர் யாருடன் நண்பராக இருக்கிறரோ யாருடன் எல்லாம் தொடர்ந்து பழகி வருகின்றோரோ அவரது பண்புகளும் நம்முடன் ஒட்டிக் கொள்வதற்கு வாய்ப்புகள் உள்ளன. “உங்கள் நண்பர்கள் யார் என்று சொல்லுங்கள். நீங்கள் யார் என்று சொல்லிவிடுகிறேன்” என்பது பழமொழி. எனவேதான் உயர்ந்த போற்றத்தக்க பண்புகள் உடையோரிடம் நட்பு வைத்துக் கொள்ள வேண்டும். பழகவேண்டும் என்று பெரியோர்கள் அறிவுரைகள் நல்கியுள்ளனர். “மனிதர்கள் ஒருவரோடொருவர் உறவு கொள்ளும் போது அவர்கள் ஆளுமைப் பண்பைப் பொறுத்தும் உறவின் தன்மையைப் பொறுத்தும் பிறரது தாக்கம் ஒருவரது ஆளுமையில் மாற்றத்தை உருவாக்குகிறது”[24] என்பது இங்கு எண்ணத்தக்கது.

---

[23]. எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு.

[24]. மேலது.

**ஒழுக்கச் சூழல்**

தனிமனிதனின் சிந்தனை செயல்பாடு எவ்வாறு அமைய வேண்டும் என்ற நெறிமுறைகளே ஒழுக்கமாகும். ஒரு தவறான செயலைச் செய்தால், ஒருவனிடம் குற்ற உணர்வு தோன்றுவதற்குக் காரணம் அச்செயல் குற்றம் என்ற அடிப்படையில் பிறர் தண்டிக்கப்பட்டிருப்பதால் தான். அடிப்படை ஒழுக்க நெறிகளுக்கு ஏற்ப செயல்படுகின்ற போது அது தன் மனசாட்சியைப் பாதிக்கிறது. மேலும் இச்செயல் மனதில் முரண்பாடுகளையும், குற்ற உணர்வினையும் தூண்டிவிடுகின்றது.

ஒருவர் தனது தவறுகளாலன்றி, பிறர் தவறுகளாலோ அல்லது இயற்கை விளைவுகளாலோ தன் இயல்பான நடத்தைகளுக்கு இடையூறு நேரிடுவது அவரைப் பெரிதும் பாதிக்கும். மேலும் அதிர்ச்சியினால் மனச்சோர்வும், மந்த உணர்வும் தோன்றும். எனவே குடும்பத்திலும், சேர்ந்து வாழும் சமுதாயத்திலும் ஒழுக்கச் சூழல் சீராக அமைவது ஒருவரது ஆளுமைப் பண்பு சீரோடும், சிறப்போடும் கூடியதாக விளங்க உதவும்.

**ஆளுமையை அளவிடும் முறைகள்**

ஒருவனது ஆளுமைப் பண்புகள் எத்தன்மையது என்றறியப் பழங்காலந் தொட்டே முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆளுமையை அளவிடும் முறைகளைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்,

**அகவயமுறைகள்**

1. சுயசரிதை
2. சுயமதிப்பீடு
3. மறுமொழி கோருபவை
    - வினா நிரல்
    - மனப்பான்மை அளவுகோல்
    - ஆளுமைப்பட்டியல்கள்
    - பேட்டி

- ❖ நாட்டச் சோதனைகள்
- ❖ கவர்ச்சி பட்டியல்கள் என்பனவாகும்.

**புறவயமுறைகள்**

புறவய முறைகள் என்பது உடற்கூறு அளவைகளையும், நடத்தைக் கூறுகளையும் உற்று நோக்கித் தர மதிப்பீடு செய்வது ஆகும். அவை,

1. உற்று நோக்கல்
2. சரிபார்க்கும் பட்டியல்
3. தர அளவு கோள்
4. செயற்சோதனைகளும் நிலைமை சோதனைகளும் என்பனவாகும்.

**புறத்தேற்று நுண்முறைகள்**

புறத்தேற்று நுண்முறையில் திடமான அமைப்பற்ற சில பொருட்கள் சாதிக்கப்படுவோனுக்குக் காண்பிக்கப்பட்டு, அதில் அவன் தன் கற்பனையை ஓடவிட்டு ஒரு புதிய அமைப்பை உருவாக்க முயலுதலில் அவனின் ஆளுமைப் பண்புகளின் தன்மை வெளிப்படும்.

புறத்தேற்று நுண்முறைகள் மூன்று வகைப்படும். அவை,

1. புலன் காட்சி அணுகுமுறை
2. பொருளறிவோடு இணைத்தறி சோதனை
3. உருவாக்கும் சோதனைகள்

முதலான முறைகளில் ஒருவனின் ஆளுமையை அளவீடு செய்யலாம். "இவற்றில் ஆளுமைப் பட்டியல்களும் புறத்தேற்று நுண்முறைகளும் ஆளுமையை அளவிடலில் அதிகமாக பயன்படுத்தப் படுகின்றன."[25] ஆளுமை பட்டியல்களில் ஒருவர் பல்வேறு சூழ்நிலைகளில் தம்மிடம் ஏற்படும் எண்ணங்களையும், உணர்வுகளையும், செயல்களையும் விவரிக்க வேண்டியிருக்கும். மேற்கூறிய ஆளுமை அளவிடும் முறைகள் ஒரு தனி

[25]. கி. நாகராஜன், கல்வி உளவியல்.

மனிதனின் அல்லது ஒரு இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தர்களின் ஆளுமைப் பண்பினை அளவிடுவதற்கு ஏற்ற முறையில் அமைகின்றதனால் சங்க இலக்கியப் பாடாண்திணைப் பாடல்களில் காணலாகும் மாந்தர் படைப்பபுகளின் ஆளுமைப் பண்பினை அளவிட இவ்வாய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

ஆளுமை சொற்பொருள் விளக்கம் என்பதில் ஒருவனுடைய உடல் தோற்றமும், உடைப்பாணியும், நடையும், அவனிடம் காணப்படும் அன்பு, ஊக்கம். அச்சம், கொடை, இரக்கம், வீரம், நன்றியுணர்வு, தந்திரம் போன்ற பலவிதமான பண்புகளும், ஆளுமையில் அடங்கும் என விளக்கம் அளித்துள்ளதைக் காணலாம். ஆளுமை பற்றி உளப்பகுப்பாய்வாளர்கள் கூறுகையில் ஆளுமை என்பது ஒரு தனிமனிதன் தனக்குக் கொடுக்கப்பட்ட சூழ்நிலையில் செயல்படும் தன்மையே ஆளுமை என்பதனை நன்கு அறிய முடிகிறது. ஆளுமை குறித்த கோட்பாடுகள் பற்றி காண்கையில் வேதாந்தத்திலும் ஆளுமைக் கோட்பாடுகள் உள்ளன என்பதனை உணரமுடிகின்றது. மேலும் ஒருவனின் ஆளுமைத் தன்மையை எந்த எந்த முறைகளில் அளவிடலாம் என்பதனையும் தெரிந்து கொள்ள முடிகின்றது.

இந்த இயலில் கொடுக்கப்பட்டுள்ள கருத்துக்கள் மற்றும் கோட்பாடுகளின் முடிவுகளின் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமைத் திறன் ஆராயப் பெறுகிறது.

# சான்றெண் விளக்கம்


1. அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல், ப. 240
2. மேலது, ப. 239
3. பெருஞ்சொல் அகராதி, தொகுதி, இரண்டு, ப. 251
4. க்ரியாவின் தமிழ் அகராதி, ப. 121
5. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப. 396
6. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி, இரண்டு, ப. 678
7. எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு, ப. 1
8. சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள், ப. 3
9. எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு, பக். 2-4
10. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப. 353
11. அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல், ப. 242
12. மேலது, ப.242
13. மேலது, ப. 242
14. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி, இரண்டு, ப. 706
15. அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித வளர்ச்சி உளவியல்.ப. 242
16. க. பலராமன், உளவியல் நோக்கில் திருக்குறள், ப. 621
17. எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு, ப. 15
18. சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள், ப.11
19. மேலது, ப. 170
20. பலராமன், உளவியல் நோக்கில் திருக்குறள், ப. 621
21. சகோ.ம.செங்கோல், ஆளுமைத் திறனை மேம்படுத்தச் சிறந்த ஆலோசனைகள், ப. 12

22. அ. மீனாட்சி சுந்தரம், கற்றல் மற்றும் மனித
வளர்ச்சி உளவியல், ப. 247

23. எஸ். சுந்தர சீனிவாசன், ஆளுமை மேம்பாடு, ப. 56

24. மேலது, பக். 58,59

25. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப. 40

# இயல் 2

## பாடாண்திணையில் மூவேந்தர் ஆளுமை

முச்சங்கங்கள் வளர்த்த தமிழ்ப் பண்டைய இலக்கியங்களில் தற்காலத்தில் கிடைப்பன கடைச்சங்க கால நூல்கள் ஆகும். இவை எட்டுத்தொகை நூல்களும், பத்து நெடும்பாடல்களும் ஆகும். எட்டுத்தொகை நூல்களுள் நான்காவது மற்றும் எட்டாவது நூலாகக் கருதப்படும் பதிற்றுப்பத்து, புறநானூறு இரண்டும் பண்டைய தமிழரின் புற வாழ்வினை விளக்கக் கூடியவனாக தொகுக்கப்பெற்று உள்ளன.

புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவற்றில் இருநூற்று முப்பத்து எட்டு (238) பாடண் திணைப்பாடல்கள் அமைந்துள்ளன. இவைதவிர, பத்துப்பாட்டு நூல்களுள் முடத்தாமக் கண்ணியர் இருநூற்று நாற்பத்து எட்டு (248) அடிகளில் பாடிய பொருநராற்றுப்படை, நல்லூர் நத்தத்தனாரால் இருநூற்று அறுபத்து ஒன்பது (269) அடிகளில் இயற்றப்பட்ட சிறுபாணாற்றுப்டை, மாங்குடி மருதனார் படைத்த எழுநூற்று எண்பத்து இரண்டு (782) அடிகளை உடையதும், பத்துப்பாட்டு நூல்களில் அடி அளவில் பெரியதுமான மதுரைக் காஞ்சி முதலான நூல்களில் பாடாண்திணைப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களில் இடம்பெற்றுள்ள சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்களின் ஆளுமைப் பண்புகள் குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

இவ்வாய்வு பாடாண் திணையை முதன்மைப் படுத்தி ஆராய்வதால் அத்திணை பற்றிய விளக்கமும் இவ்வியலின் முன்பகுதியில் விவரிக்கப் பெற்றுள்ளது.

**<u>பாடாண்திணைவிளக்கம்</u>**

கொடையாளர்களைப் புலவர்கள் புகழ்ந்து பாடுவது பாடாண்திணை என்று கூறப்படுகிறது. இதனை “பாடு+ஆண்+திணை என்னும் சொற்கள் சேர்ந்து பாடாண்திணை என்றாகியுள்ளது. ஆண் என்பதற்கு ஆண்பால்

எனப்பொருள் கொள்ளப்படுகிறது. அவ்வாறு பொருள்கொள்ளாமல் ஆளும்தன்மை(Personality) எனப் பொருள்கொள்வது பொருந்துவதாகும். தொல்காப்பியரும் ஆண்மை என்பதை ஆளும்தன்மை எனும்பொருளில் கையாண்டுள்ளதை,

**“பிறப்பே குடிமை ஆண்மை” (தொல். பொருள். மெய். நூ. 25)**

என்ற பகுதி விளக்குகிறது.

“ஆண், பெண் என்னும் வேறுபாடு இன்றி ஒருவருடைய வலிமை, வீரம், ஆற்றல், கொடை, அருள் போன்றவற்றைப்பாடுவதே பாடாண்திணை ஆகும்”[26] என்ற விளக்கமும் இங்கு ஏற்கத்தக்கது. மேலும் “பாடண்திணையில் பாடுதல் என்ற வினை புலவர்பாலும், அவ்வினைக்குக் காரணமாகிய குணம், செயல் ஆகியவை பாட்டுடைத்தலைவன் பாலும் நிகழ்வனவாகும். வெட்சி முதலிய ஆறும் தலைமகனுக்குரிய பண்புகளை நிலைக்களனாகக் கொண்டு தோன்றும் தனிநிலைத் திணைகள். பாடாண்திணையோ தலைமகன்பால் நிகழும் மேற்கூறிய திணைநிகழ்ச்சிகளைத் தனக்கு நிலைக்களன்களாகக் கொண்டு தோன்றும் சார்புநிலைத் திணையாகும். எனவே போர்மறவர்பால் அமைவனவாகிய வெட்சி முதலிய புறத்திணைகளிலும் குற்றமற்ற மனைவாழ்க்கையாகிய அகத்திணையிலும் அமைந்த செயல்களாய்த் தலைமக்களுக்குரிய கல்வி, தறுகண், இசைமை, கொடை எனச் சொல்லப்பட்ட பெருமிதப் பண்புகளாய்ப் புலவராற் பாடுதற்கமைந்த ஒழுகலாறுகள் பாடாண்திணை"[27] என்ற கருத்தும் ஆளுமைப் பண்பினைச் சார்ந்தது பாடாண் திணை என்பதைக் காட்டுகின்றது.

மேற்காணும் விளக்கங்களில் இருந்து நல்லறிவுடைய புலமைச்செல்வர் பலரும் உரையினாலும், பாட்டினாலும் உயர்த்திப்புகழும்வண்ணம் ஆற்றல்மிக்க போர்த்துறையிலும், அன்பின்மிக்க மனைவாழ்க்கையிலும்,

---

[26]. முனைவர் ச. திருஞானசம்பந்தம், புறப்பொருள் வெண்பாமாலை.

[27]. வித்துவான் ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை.

புகழுடன்வாழும் நன்மக்களது ஒழுகலாறுகளினை புகழ்ந்து கூறுவது பாடாண்திணை என அறிய முடிகின்றது.

**<u>கைக்கிளைக்குப் புறம் பாடாண்</u>**

பாடாண் என்னும் புறத்திணை ஆனது கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாகும் என்பதனைத் தொல்காப்பியர்,

**“பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே” (தொல். பொருள். புறம் நூ. 80)**

என்ற நூற்பாவின் மூலம் குறிப்பிடுகின்றார் . “பாடண்திணை மற்ற திணைகள் போலத் தனக்கொரு தனிநிலை பெறாமல் பிற திணைகளை நிலைக்களனாகக் கொண்டு ஏற்றவிடத்தின் ஒன்றின் பகுதியே பாடாணாய் அமையும் என்பதன் இயல்பு கருதி பாடாண் பகுதி’’[28] என்று குறிக்கப்படுகிறது.

பாடாண்திணை கைக்கிளைக்குரிய புறத்திணையாகக் கூறுவதற்குரிய காரணங்களாக பின்வருவனவற்றைக் கூறமுடிகின்றது.

1. அகத்திணையான கைக்கிளையில் காதற் சிறப்பானது தலைவன் அல்லது தலைவி ஒருவருக்கே ஆகும். இது போன்றே புறத்திணையான பாடாண்திணையிலும் சிறப்பானது தகைமையுடைய ஒருவருக்கே உரிமை உடையது ஆகும்.

2. கைக்கிளையில் காதற்கூற்று பாராட்டும் தலைவனிடத்திலோ அல்லது தலைவியினிடத்திலோ நிகழும். அதே போன்று பாடாண்திணையிலும் புகழும் கூற்று புகழ்வோனாகிய புலவரிடத்திலே அமையும்.

3. கைக்கிளைக்கும் பாடாண்திணைக்கும் நிலமும் பொழுதும் வரையறுத்துக் கூறப்படவில்லை.

---

[28]. நாவலர். ச. சோமசுந்தர பாரதியார், தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை, (புறத்திணையியல்).

4. கைக்கிளை கழிப்பேரிரக்கமாகிய நோத்திறத்தில் பாடப்பெறாது செந்திறத்தில் பாடப்பெறுதல் போன்று பாடாணும் செந்திறத்திலே பாடப்பெறுகிறது.

5. வெட்சி, குறிஞ்சி, வஞ்சி, முல்லை, உழிஞை, மருதம், தும்பை, நெய்தல், வாகை, பாலை, காஞ்சி முதலிய திணைகள் மலர் பெயராய் அமைந்திருத்தல் போன்று, கைக்கிளை, பாடாண்திணை இரண்டும் மலர்கள் பெயரால் அமையாமல் உள்ள காரணத்தினாலும், இவை போன்ற பிற காரணங்களினாலும் பாடாண்திணையானது கைக்கிளைக்குரிய புறத்திணையாக கொள்ளப்படுகிறது.

**பாடாண் வகை**

கைக்கிளைக்குப் புறத்திணையான பாடாண்திணை எட்டு வகைப்படும் என்பதை,

**"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே**
**நாடுங்காலை நாலிரண் டுடைத்தே"** **(தொல், புற, நூ. 80)**

என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். ஆனால் அவை எட்டினைத் தொல்காப்பியர் இது இதுவெனக் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. ஆகையால் உரையாசிரியர்களின் உரைகளின் மூலமே பாடாண் திணையின் எட்டு வகைகள் பற்றி அறிய முடிகிறது.

இளம்பூரணார் அவர்களின் உரையில் பாடாணின் எட்டு வகையாக கீழ்வருவனவற்றைக் குறிப்பிடுகின்றார் .

1. கடவுள் வாழ்த்து வகை,
2. வாழ்த்தியல் வகை,
3. செவியறிவுறுத்தல்,
4. மங்கல வகை,
5. ஆற்றுப்படை வகை,
6. பரிசில்துறை வகை,
7. கைக்கிளை வகை,
8. வசை வகை,

என்பனவாகும். ஆனால் நச்சினார்க்கினியர் வேறு எட்டினை பாடாண்திணைக்குரிய வகைகளாகக் குறிப்பிடுகின்றார். பாடாண்திணைக்கு ஓதுகின்ற பொருட்பகுதி பலவும் சேர்த்து, இருவகை வெட்சி, வஞ்சி, பொதுவியல், உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி என்பனவாகும் என்று பரிசில் பெறும் நோக்கத்தோடு பாடப்படும் பிற போர்திணைப் பாடல்களையும் பாடாண்திணையில் அடக்கிக் காட்டுகின்றார் நச்சினார்க்கினியர்.

நாவலர் சோமசுந்தர பாரதியார் 'நாலிரண்டுடைத்தே' என்பதற்கு இருவேறு விளக்கம் தருகிறார். அவற்றுள் முதல் பகுப்பாக

1. கொடுப்போரேத்தல்,
2. கொடாஅர்ப் பழித்தல்,
3. அடுத்தூருந் தேத்திய இயல்மொழி வாழ்த்து,
4. கண்படை கண்ணிய கண்படை நிலை,
5. சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க் குரைத்த கடைநிலை,
6. கபிலை கண்ணிய வேள்வி நிலை,
7. வேலின் நோக்கிய விளக்குநிலை,
8. வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, புறநிலை வாழ்த்து

என்பவற்றைக் காட்டுகிறார். அவர் இரண்டாவது பகுப்பில் வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, வாகை, தும்பை, அன்பின் ஐந்திணை, கைக்கிளை என்றும் விளக்கம் தருகிறார்.

வெள்ளைவாரணார் பாடாண்திணை நாலிரண்டாவன என்பதற்கு "அமரர்கண் முடியும் அறுவகைளும், புரைதீர் காமம், புல்லிய வகையொன்றும், செந்துறை வண்ணப்பகுதி ஒன்றும்"[29] ஆக எட்டு என்கிறார்.

சிவலிங்கனார் பாடாண்பகுதி நாலிரண்டாவன என்பதற்கு, "அமரர்கண் முடியும் அறுவகை புரைதீர் காமம் புல்லிய வகை பரவலும், புகழ்ச்சியும், கருதிய

---

[29]. ஆ. சிவலிங்கனார், (தொ.ஆ) தொல்காப்பியம், பொருளதிகாரம், (உரைவளம்) புறத்திணையியல், பகுதி - 2

பாங்கும், முன்னோர் கூறிய குறிப்பும், கூறும் செந்துரை வண்ணப்பகுதி, கடவுள் வாழ்த்து மாட்டும், கடவுட் பெண்டிர் நயத்தல், கடவுள் மாட்டு மானிடப் பெண்டிரும், மானிடப் பெண்டிர் மாட்டுக் கடவுளரும் நயத்தல், குழவி மருங்கின் காமப்பகுதி, ஊரோடு தோற்றம், கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருவன"[30] என்கிறார்.

மேற்காணும், உரையாசிரியர்கள் தரும் விளக்கங்களில் இருந்து பரிசில் பெற்றோர் அல்லது பரிசு பெறும் நோக்கத்தோடோ, குறிப்போடோ பாடப்பெறுவது பாடாண் திணையின் வகையில் அடங்கும் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**மூவேந்தர் மரபு**

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே மூவேந்தர் அமைப்பு நிலைபெற்று விட்டது. மூவேந்தரைக் குறிப்பிடும் தொல்காப்பியர் சேர, சோழ, பாண்டியர் எனக் குறிப்பிடாமல் அவர் தம் மாலையின் வாயிலாக அடையாளப் படுத்துகிறார்.

**"போந்தே வேம்பே ஆரென வரூஉம்**
**மாபெருந்தானையார் மலைந்த பூவும்" (தொல்.பொருள்)**

என்றதன்படி, சேர மன்னர்களுக்குரியதாகப் பனம்பூவும், பாண்டிய மன்னர்களுக்குரியதாக வேம்பம்பூவும், சோழ மன்னர்களுக்குரியதாக ஆத்திப்பூவும் தொல்காப்பியரால் குறிக்கப் பெற்றுள்ளன.

இராமாயணம், மகாபாரதம், இரகுவம்சம், அசோகன் கல்வெட்டு, வெளிநாட்டார் குறிப்பு ஆகியவற்றிலிருந்தும் மூவேந்தரைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. அசோகன் கல்வெட்டொன்று "தென்னிந்தியாவில் சுதந்திர அரசர்களாக இருந்த சோழர், பாண்டியர், சத்திய புத்திரர், கேரள புத்திரர்

---

[30]. ஆ. சிவலிங்கனார், (தொ.ஆ) தொல்காப்பியம், பொருளதிகாரம், (உரைவளம்) புறத்திணையியல், பகுதி - 2

நாடுகளில் தரும போதனைகளும், தரும மயமான உபகாரச் செய்கைகளும் நடந்து வந்தன"[31] என்று மூவேந்தரைப் பற்றி குறிப்பிடுகின்றது. இக்கல்வெட்டில் சேரரைக் கேரளர் எனக் குறித்திருப்பது நோக்குதலுக்குரியதாக தோன்றுகிறது. அசோகனது கல்வெட்டு மூவேந்தரின் குடிப்பெயரை சுட்டுகின்றதே அன்றி அவர்தம் பெயரையோ நிலப்பரப்பையோ, எல்லையையோ, பிற சிறப்புகளையோ குறித்து பேசவில்லை.இக்கல்வெட்டில் இருந்து தமிழ் வேந்தர்களைப் பற்றியும், அசோகன் அறிந்துள்ளான் என அறிய முடிகின்றது.

"இராமாயணத்தில் சீதையை தேடிச் சென்ற வானர வீரர்களுக்கு வழித்தடங்களை வகுத்துரைத்த குன்று சூழ்வான் மகனாகிய சுக்ரீவன் தென்னாட்டு இயல்பு பற்றிக் கூறும்போது சேர, சோழ, பாண்டிய நாடுகளைப் பற்றி குறிப்பிடுகின்றார். மேலும் மகாபாரதத்தில் யுதிஷ்டிரன், ராஜசுய யாகம் செய்த போது சேர, சோழ, பாண்டியர் மூவரும் வந்ததாக வியாசரும் குறிப்பிடுகின்றார்."[32] இவற்றால் இதிகாச காலத்தில் வட நாட்டைச் சேர்ந்தவர்களும் தென்னாட்டு சேர, சோழ, பாண்டியரை அறிந்துள்ளனர் என்று தெளிவாய் விளங்குகின்றது.

சங்க இலக்கியங்கள் சேரர், சோழர், பாண்டியரை மூவரென பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

**"முரசு முழங்கு தானைமூவரும் கூடி**
**அரசவை இருந்த தோற்றம் போல"** **(புறம். 85; 5-6)**
**"வீயாத் திருவின் விறல் கெழுதானை**
**மூவருள் ஒருவன் துப்பாகியார்"** **(புறம். 122; 4-5)**

எனக் குறிப்பிடுகின்றது. இந்நூல்கள் குறிப்பிடும் மூவரையும் மூவேந்தர் என்றே கூறமுடிகின்றது. சிறுபாணாற்றுப்படை சேர, சோழ, பாண்டியரை,

---

[31].ஆர். ராம அய்யர், அசோகனுடைய சாசனங்கள்.

[32].ஔவை சு.துரைசாமிப்பிள்ளை,சேரமன்னர் வரலாறு.

**"குடபுலங் காவலர் மருமான்" (பா.எ.47)**

**"குணபுலங்காவலர் மருமான்" (பா.எ.79)**

**"தென்புலற்காவலர் மருமான்" (பா.எ.63)**

எனக் குறிப்பிடுகின்றது. குடபுலம் என்பது கொல்லிமலையை உள்ளடக்கிய தமிழகத்தின் மேற்கு பகுதி. குணபுலம் என்பது அக்கொல்லிமலைக்கும் அம்மலையினின்றும் தோன்றி ஓடும் கரைபோட்டான் ஆற்றிற்கும் கீழ் உள்ள நிலப்பகுதி ஆகும். தென்புலம் என்பது பழனிமலைத் தொடருக்குத் தெற்கில் உள்ள நிலப்பகுதி ஆகும். இவ்வாறு மூவேந்தர்கள் பற்றிய செய்திகளை அறிய முடிகின்றது. இம்மூவேந்தர்களும் கொடி, முடி, முரசு, வெண்கொற்றக் குடை, ஆணைச்சக்கரம், அடையாளப் பூக்கள் எனும் இவற்றை உடையவர்களாகவும், சிறு நிலப் பகுதிகளை ஆண்டு வந்த குறுநில மன்னர்களை தங்களது ஆளுகைக்குக் கீழ் கொண்டு வர முயன்றதையும்,

**"வேந்து மேம்பட்ட பூந்தார் மற" (புறம். 55 ; 6)**

என்ற புறநானூற்று பாடலடி வழியாக அறிய முடிகின்றது. மேலும் மூவேந்தர்களாகிய மன்னர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு ஒரு வேந்தன், ஏனைய இரு குடி வேந்தர்களைப் போரில் வெற்றி கொண்டு அடக்கி ஆளவே விரும்பினர் என்பதை,

**"சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை**
**அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ**
**டொருங்ககப் படேஎ னாயின்" (புறம். 72: 7 - 9)**

என்ற பாண்டியன் தலையானங்கானத்து நெடுஞ்செழியன் பாடிய பாடலின் மூலமே அறிய முடிகின்றது.

**<u>சேர வேந்தர்கள்</u>**

வேந்தர் குடிப்பெருமையை சுட்டுவதற்கு அவரின் குலப் பழமையை இறைமையோடு வைத்து வணங்குவது பண்டைய மரபாக உள்ளது. சோழரைச் சூரிய மரபினர் என்றும், பாண்டியரை சந்திர மரபினர் என்றும் இலக்கியங்கள்

ஏதும் குறிப்பிடவில்லை. ஆனால் பிற்கால இலக்கியமான வில்லிபாரதம் சேரரை அக்னிக் குலத்தவர் என்ற பொருளில் "இவன் செந்தழலோன் மரபாகி யீரேழுலகம் புகழ்சேரன்"[33] எனவும் பெரிப்புளூஸ் என்ற நூலாசிரியர், "சேரர்களின் முசிறி துறைமுகம் செல்வத்தால் சிறப்புடைய மாநகரம் என்றும், வட நாடுகளில் இருந்தும், எகிப்து நாட்டில் இருந்தும் எப்போதும் கலங்கல் இத்துறைமுகத்திற்கு வருவதும் போவதுமாக உள்ளது"[34] என்று கூறியுள்ளார். இவரது கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் ,

**"…….. சேரலர்**
**சுள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க**
**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்" (அகம். 149; 7-10)**

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் அமைகின்றன.

அகநானூற்றில் எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்பவர் சுள்ளி என்னும் பெயரை உடையப் பேரியாறு சேர அரசருக்கு உரிமை உடையது. இவ்வழகிய ஆற்றினது வெண்ணிற நுரை சிதறுமாறு தொழில் மாட்சிமை பட்ட யவனர்கள் கொண்டு வந்த நல்ல மரக்கலம் பொன்னைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு அதற்கு விலையாக மிளகை ஏற்றிச் செல்லும். அத்தகைய வளம் பொருந்தியது முசிறி என்னும் துறைமுகப் பட்டினம் என்று கூறுவதைக் கொண்டு சேரர்களின் துறைமுகம் செல்வச் செழிப்புடன் விளங்கியதை அறிய முடிகிறது.

சங்க இலக்கியங்கள் யாவும் சேர நாட்டினைச் சேர நாடு என்றும், அந்நாட்டு வேந்தர்களைச் சேரர் என்றும், சேரர்கள் என்றும் தெளிவாகக் கூறுகின்றன. செல்யூகஸ் நிகேடர் காலத்தில் மெகஸ்தனிஸ் என்பவர் கங்கைக் கரை பகுதியில் அமைந்துள்ள பாடலிபுத்திரத்தில் இருந்து எழுதிய குறிப்பிலும் சேரர்களைச் சேரமான்கள் என்றே குறித்துள்ளது. ஆனால் அசோக

[33]. வில்லிபாரதம், திரௌபதி மலையிட்ட சருக்கம்.

[34]. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, சேரமன்னர் வரலாறு.

மன்னனுடைய கல்வெட்டுகள் சேரர்களைக் கேரள புத்திரர் என்று குறிக்கின்றன. ஆயினும் அத்தொடர் சேரலப் புத்திரர் என்று படிக்குமாறு அமைந்துள்ளது.

சேர மன்னர்கள் மலை நாட்டில் வாழ்ந்த காரணத்தினால் மலைகளிலும், மலைச் சரிவுகளிலும் அண்டியிருந்த பெருங்காடுகளில் வேட்டைப் புரிவதையே தொடக்கக் காலத்தில் மேற்கொண்டிருந்திருப்பர் போலும். அதனால்தான் இவர்களுடைய நாட்டுக் கொடியில் வில்லினது சின்னம் பொறிக்கப்பட்டிருக்க வாய்ப்பு உள்ளது. கடற்கரை பகுதியில் பனை மரங்கள் காடு போல செறிந்திருப்தால் சேரர்கள் தமக்கு அடையாளமாகப் பனம்பூவை அணிந்து கொண்டனர் என்பதை நிரூபிக்கும் வகையில் இன்றும் சேர நாட்டு வட பகுதி கடற்கரைகளில் பனை மரங்கள் அதிகமாக இருப்பதைக் காணமுடிகின்றது.

சேர மன்னர்களுக்குச் சங்க நூல்கள் மிகப் பல சிறப்புப் பெயர்களை வழங்குகின்றன. அவர்களை வானவரம்பன், வானவன், குட்டுவன், குடக்கோ, பொறையன், இரும்பொறை, கடுங்கோ, கோதை என்றெல்லாம் அழைத்துள்ளனர். இதனை,

**“வென்றி நல்வேல் வான வரம்பன்”** **(புறம்.126 ;16)**

**“பெரும்படைக் குதிரை நற்போர் வானவன்”** **(அகம்.88 ; 7)**

**“வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்”** **(அகம் .159; 5)**

எனும் சங்க இலக்கியப் பாடலடிகளால் அறிய முடிகின்றது. சேரரைப் பற்றி பழந்தமிழ் இலக்கியங்களும், நிகண்டுகளும் வானவர் என்றும், கோதை என்றும் குறிப்பிடுகின்றன. இத்தொடர்களைக் கருத்தில் கொள்ளும் பொழுது சேரர்கள் ஆரம்பக் கால கட்டங்களில் இருந்தே தெய்வ வழிபாடு செய்தும், வழிபாடுகளை நடத்தியும் வந்துள்ளனர் என்பதால் இவர்களை வானவர் என அழைத்துள்ளனரோ என்றும் அறிய முடிகின்றது.

பண்டைய கால தமிழ் வேந்தர்கள் முடிசூட்டிக் கொண்ட முறை ஒரு தனி சிறப்புடையது. ஒரு அரசனுக்கு மூன்று புதல்வர்கள் எனில் அவர்கள் ஒருவர் பின் ஒருவராக முடிசூடிக் கொள்வர். முன்னவன் முடிவேந்தனாகவும், ஏனைய

இருவரும் நாட்டின் இருபகுதிகளில் சிற்றரசராய் முடி வேந்தருக்குத் துணை புரிவர். இம்மூவரும் முடி சூடியிருந்த பின்பே இவர்களின் மக்களின் மூத்தவன் எவனோ அவனே அரசாட்சிக்குரிய முடிசூட்டிக் கொள்ள உரிமை உடைய முடி வேந்தன் ஆவான். இதே போன்று சேர மன்னருள் உதியஞ்சேரலாதன் என்பவருக்கு இமய வரம்பன், பல்யானை செல்கெழு குட்டுவன் எனும் மக்கள் இருவர் இருந்தனர். இவர்களுள் இமயவரம்பன் சேர மன்னனாய் முடிசூடி இருந்த காலத்திற்கு பின்பு தான் அவன் தம்பி பல்யானை செல்கெழு குட்டுவன் சேர மன்னனாய் முடி சூடிக் கொண்டான். அதற்குப் பின்பு இமயவரம்பன் மக்களுள் மூத்தவனான கலங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும், அவனுக்குப் பின் செங்குட்டுவனும், அவனையடுத்து ஆடுகோட்பாட்ச் சேரலாதனும் சேரநாட்டு முடிவேந்தராய் விளங்கினர் என்பதை பதிற்றுப் பத்தில் காணலாகும் பதிகங்களின் வாயிலாகப் புலனாகின்றது.

சேர அரசர்கள் அரசர் குடியில் பிறந்த அரசனின் புதல்வர்களுக்கு அரசாளும் உரிமையை நல்க வேண்டி நாட்டைச் சிறுசிறு கூறுகளாக (நாடுகளாக) பிரித்தாளும் நிலை உண்டாயிற்று. அதன் பயனாக சேரநாடு, சிறு சிறு நாடுகளாகப் பிரிய வேண்டி வந்தது. இது பற்றியே "ஒரு நாழிகைத் தொலைக்குள் ஒன்பது நாடுகளைக் கடந்தாக வேண்டும் என்ற கருத்துடைய பழமொழி ஒன்று இன்றும் மலையாள நாட்டில் வழங்கி வருகிறது. மேலும் இடைக்காலத்தில் சேர நாடு பதினெட்டுச் சிறு நாடுகளாய் பிரிந்தமைக்கு இதுவும் ஓர் காரணம்"[35] என்கின்றார் அவ்வை துரைசாமிப் பிள்ளை.

சேர வேந்தர்கள் உதியஞ்சேரல் மரபு, இரும்பொறை மரபு என்று இரு பெரும் பிரிவுகளாக் காணப்படுகின்றனர். பதிற்றுப் பத்தில் உதியஞ்சேரல் மரபில் வந்த மன்னர்கள் குறித்து முதல் ஆறு பத்துக்களும், இரும்பொறை மரபில் வந்த மன்னர்கள் குறித்து இறுதி நான்கு பத்துக்களும் பாடப்பட்டுள்ளன.

[35].ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, சேரமன்னர் வரலாறு.







உதியஞ்சேரலாதனுக்குரிய முதற்பத்தும், யானைகட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறைக்குரிய பத்தாம் பத்தும் கிடைக்கவில்லை. எனினும் இவ்விரு சேரவேந்தர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் அகநானூறு, புறநானூறு முதலிய சங்கத்தொகை நூல்களில் இடம்பெற்றிருக்கின்றது.

மூவேந்தர்களின் நாடுகள் முறையே குடபுலம், குணபுலம், தென்புலம் என வழங்கப்பெற்றாலும் செந்தமிழ் வழங்கும் நாடுகளாக பண்டையக் காலத்தில் விளங்கிய பன்னிரண்டு நாடுகளில் குட்ட நாடு, குட நாடு, கற்கா நாடு, பூலிநாடு, மலாடு என்ற ஐந்து நாடுகளையும் உள்ளடக்கிய நிலமே குடபுலம் என்ற பெயரால் வழங்கி வந்த சேர நாடாகும். ‘‘சேரநாடு பல்வேறு வளங்களையும் தன்னகத்தே ஒருங்கே கொண்ட நாடாகத் திகழ்ந்தாலும் அவ்வளங்களுள் குறிப்பிடத் தக்க பெரு வளம், வேழம் முதலான மலைபடு பொருட்களே ஆகும். ‘வேழம் உடைத்து மலைநாடு’ எனக் கூறுவதனால் வேழங்கள் நிறைந்து வாழக் கூடிய காடென்று பொருள் கொள்ளத் தக்கதாகும். இதனால் தான் சேர நாட்டு ஊர்களில் ஒரு சில ஊர்கள் வேழக்காடு, உம்பற்காடு என்ற பெயராலும் அழைக்கப்பெறுகிறது.”[36] என்ற கருத்தியல் வழி அறியலாகும்.

சேர நாட்டை ஆண்ட சேர வேந்தர்கள் இரு கிளையினராகக் காணப்படுவதால் ஒருவர் உதியஞ்சேரலாதன் வழி வந்தவர்கள், மற்றொருவர் இரும்பொறை என்ற பெயராலும் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் இருவருள் முன்னவர் வஞ்சி மாநகரைத் தலைநகராக் கொண்டு உள்நாட்டுப் பகுதியினையும், பின்னவர்கள் தொண்டித் துறைமுகத்தை தலைநகராகக் கொண்ட கடற்கரைப் பகுதியையும் ஆட்சி புரிந்து வந்துள்ளனர். இவர்களில் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள உதியஞ்சேரலாதன், இமயவரம்பவன் நெடுஞ்சேரலாதன், பல்யானைசெல்கெழுகுட்டுவன், களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், சேரன் செங்குட்டுவன் ஆடுகோட்பாட்ச் சேரலாதன், செல்வக்கடுங்கொ வலியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை, கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, கடுங்கோ வாழியாதன், பெருங்கடுங்கோ, கோக்கோதை மார்பன், குடக்கோச் சேரல் இரும்பொறை, திருக்குட்டுவன், வஞ்சன் முதலான சேர மன்னர்களின் ஆளுமைப் பண்பு சங்க இலக்கிய பாடாண் திணையில் இடம்பெற்றுள்ள விதத்தினை இவ்வியலின் வாயிலாக விளக்கப் பெறுகிறது.

---

[36] . கா. கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை.

**உதியஞ்சேரலாதன்**

சங்க கால சேர வேந்தர்களுள் வரலாறு விளங்க வாழ்ந்த முதற்சேர வேந்தன், உதியஞ்சேரலாதன் ஆவான். இவன் முதற்சங்கப் புலவர்களுள் ஒருவராகக் கருதப்பெறும், முரஞ்சியூர் முடி நாகராயரால் பாராட்டப்படும் பழமை வாய்ந்தவனாகத் திகழ்கின்றான். இம்மன்னன் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் எனவும், உதியஞ்சேரலாதன் எனவும், உதியஞ்சேரல் எனவும் அழைக்கப்பட்டுள்ளான். முரஞ்சியூர் முடிநாகராயர், மாமூலனார், இளங்கீரனார், கோட்டம்பலத்து துஞ்சிய சேரமான், இளங்கோவடிகள் முதலான புலவர்களால் பாராட்டப் பெறுபவனாகவும் விளங்குகின்றான். சேர மன்னர்களின் வரலாற்று நூலாகக் கருதப்படும் பதிற்றுப்பத்தில் இரண்டாவது பத்து, மூன்றாவது பத்துப் பதிகங்களால் வெளியன் வேண்மாள் என்னும் வேளிர் குலத் தலைவன் மகளாகிய நல்லினி என்பவள் உதியஞ்சேரலாதனின் மனைவி என்பதனையும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழு குட்டுவன் இருவரும் உதியஞ்சேரலாதனின் புதல்வர்கள் எனவும்,

**“மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி**
**இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு**
**வெளியன் வேண்மாள் நல்லின் ஈன்ற மகன்**
**…………………………..**
**இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன்” (பதி.பதி. 2; 1-13)**
**“இமயவரம்பன் தம்பி அமைவர்**
**…………………………...**
**பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி.பதி. 3; 1-11)**

என்று பதிற்றுப்பத்து பதிகங்கள் குறிப்பிடுவதனை அறிய முடிகின்றது.

**பண்பு நலன்கள்**

பேரரசர் ஒருவருக்கு அமைய வேண்டிய பண்புகள் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்றவன் பெருஞ்சேற்று உதியஞ்சேரலாதன். இவன் பகைவரின் பிழைகளைப் பொருத்து, அவர்களை மன்னிக்கும் பண்புடையவன். ஒரு செயல்

ஒன்று ஆற்றத் தொடங்குவானாயின் அவன் எண்ணியதை எண்ணியவாறே செய்து முடிக்கும் ஆற்றல் உடையவன். தன்னை எதிர்க்கும் எவரையும் தாக்கி அழிக்கும் வலிமை உடைய பேராற்றலும், பெருந்திறலும் உடையவன்.தனது பகைவர்களை அடியற அழிக்கும் ஆற்றல் உடையவன். தம்மிடம் தஞ்சம் என்று அடைந்தவர்களின் துயரத்தினை விரட்டி அடித்து அவர்களை ஆட்கொள்ளும் அருட்குணம் உடையவன் என்பதாலும் அரசருக்குரிய அத்துனை ஆளுமை பண்புகளும் ஒருங்கே அமையப் பெற்றமையால் புலவர் இவனைப் பொறுமை, அகலம், ஆற்றல், அழித்தல், அருளல் ஆகிய பண்புகளின் நிலைக்கலன்களாகிய நிலம், ஆகாயம், காற்று, தீ, நீர் ஆகிய பஞ்ச பூதங்களுடன் உதியஞ்சேரலாதன் ஒத்தவன் என்பதை,

**“மண் திணிந்த நிலனும்**
**நிலன் ஏந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளையும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை போல**
**போற்றாப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்**
**வலியும் தெறலும் அளியும் உடையோய்” (புறம். 2; 1-8)**

என்று முரஞ்சியூர் முடிநாகராயர்உதியஞ்சேரலாதனின் பண்பு நலன்களின் ஆளுமையினைக் குறிப்பிடுகிறார்.

<u>**ஆட்சிச் சிறப்பு**</u>

உதியஞ்சேரலாதன் தமிழகம் முழுமையும் தனது ஒரு குடையின் கீழ் கொண்டு உலகாண்ட பேரரசன் என்பதை,

**“நின்கடல் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்நின்**
**வெண்தலை புணரிக் குடகடல் குளிக்கும்” (புறம். 2; 9-10)**

என்று இப்பாடலடிகள் குறிக்கின்றன.

அரசே! கீழ்கடலும் உன்னுடையதே, மேலைக்கடலும் உன்னுடையதாகவே திகழ்வதால் ஞாயிறு தோன்றுவதும் நின்கடலிலேயே, ஞாயிறு மறைவதும் நின்கடலிலேயே எனக் கூறுவதன் மூலம் கிழக்கு, மேற்கு ஆகிய இரு பெருங்கடல்களை எல்லையாகக் கொண்டு தமிழகம் முழுவதும் உதியஞ்சேரலாதன் அரசாட்சியின் கீழ் இடம்பெற்றது என்பதனால் உதியஞ்சேரலாதனின் நிர்வாகம் தொடர்பான ஆளுமைப் பண்பினை முரஞ்சியூர் முடிநாகராயர் எடுத்துரைக்கின்றார்.

<u>பரிசிலருக்குப் பொருள் வழங்குதல்</u>

உதியஞ்சேரலாதன்தன்னிடம் வரும் பரிசிலர்களுக்குப் பொருள் கொடுத்து உதவும் செயல் எத்தகையது என்பதனைக் காட்டும் வண்ணமாக மாமூலனார் ,

**“நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்**
**பாடிச் சென்ற பரிசிலர் போல”** **(அகம். 65; 5-6)**

என்று பாடுகிறார்.

பிறர் நாட்டினை வென்று தன் நாட்டின் எல்லைப் பகுதிகளை மேலும் மேலும் விரிவாக்கும் உதியஞ்சேரலாதனைப் பாடிச் செல்லும் பரிசிலர்கள் பொருள் பெற்று மகிழ்ச்சிக் கொள்ளுதல் போன்று நீயும் மகிழ்வாயாக என்று கூறுவதன் மூலம் உதியஞ்சேரலாதன் தனது நாட்டின் எல்லைப் பகுதியை விரிவாக்கிய நிகழ்ச்சியையும் தன்னை நாடிவரும் பரிசிலருக்கு அவரின் தேவைக்கு அதிகமான பொருள்களை வழங்கி அவர்களை மகிழ்ச்சியுறச் செய்யும் விதத்தினையும் கொண்டு பிறரை மகிழ்வித்து மகிழும் ஆளுமைப் பண்பினை உதியஞ்சேரலாதனிடம் காணமுடிகின்றது.

<u>பெருஞ்சோறு அளித்தல்</u>

உதியஞ்சேரலாதன் தனது ஆட்சிக் காலத்தில் தன்னுடைய நாடு மிகை வளத்துடன் காணப்பட்டதால் பாரதப் போரில் இருதிறப் படையினருக்கும்

போர் முடியும் வரை உணவளித்துக் காத்தான் என்பதை முரஞ்சியூர் முடிநாகராயர் பின்வரும் பாடலடிகளில் குறிக்கிறார்,

**"அலங்குளைப் புரவி ஐவரொடு சினை இ**
**நிலந்தலைக் கொண்ட பொலம்பூந்தும்பை**
**ஈரைம் பதின்மரும் பொருது களத்து ஒழியப்**
**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறம். 2; 13-16)**

இப்பாடல் தரும் பொருளாவன, அசையும் தலையாட்டத்தினை உடைய குதிரைகளைக் கொண்ட பஞ்ச பாண்டவர்கள் ஆகிய தருமன், பீமன், அர்சுனன், நகுலன், சகாதேவன் ஆகிய ஐவரும் அவர்களுடன் பகைத்து, பாண்டவர்களின் நாடு (நிலம்) கையகப்படுத்தியவர்களும் பொன்னால் ஆகிய தும்பை மலர்களை அணிந்தவர்களுமான துரியோதனன் முதலாகிய நூற்றுவர் ஆன கௌரவர்களும் மேற்கொண்ட பாரதப் போரில் அப்போர் முடியும் வரை இரு படைகளுக்கும் பெருஞ்சோறாகிய உணவினை நீ அளவில்லாது தந்தாய் என்று கூறுவதன் மூலம் உதியஞ்சேரலாதனின் நடுநிலைமைத் தன்மை மற்றும் கொடைதொடர்பான ஆளுமைப் பண்பினை நன்கு அறியமுடிகின்றது.

**<u>தென்புலக் கடன் ஆற்றுதல்</u>**

வீரம் பொருந்திய குதிரைப் படைகளையும், போரில் புறமுதுகிடாத வலிமையும் உடையவன் உதியஞ்சேரலாதன் எனும் மன்னன் என்பதை,

**"துறக்கம் எய்திய தொய்யா நல்இசை**
**முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்**
**கூளிச் சுற்றம் குழ்இயிருந் தாங்கு" (அகம். 233; 7-10)**

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

இவ்வுலக வாழ்வில் இருந்து நீங்கி சொர்க்கம் அடைந்த அழியாத நல்ல புகழினை உடைய தன் முன்னோரை வழிபடக் கருதிய உதியஞ்சேரலாதன் பிண்டம் ஈதலாகிய தென்புலக் கடனை செய்த பொழுது அவர்களுக்குப்

பலியாக பெருஞ்சோறு படைத்தான். அதனை உண்பதற்காகச் சிறிய பெரிய கரிய பேய்களின் கூட்டங்கள் கூடின என்று மாமூலனார் கூறுவதன் மூலம் உதியஞ்சேரலாதன் தன் முன்னோர்களுக்காகச் செய்யும் தென்புலக் கடனை தவறாது பின்பற்றும் பண்பினை உடையவன். மேலது கூற்றின் வாயிலாக, நினைத்தபடி செயல்படுவதை விட வழக்கமான முறையில் செயல்படும் மேயர்சு பிரிக்கசுவின் ஆளுமை வகைப்பாட்டினை உதியஞ்சேரலிடம் காணமுடிகின்றது.

<u>**கொடைக்குணம்**</u>

கொடுத்தல் தன் பிறவிகடன் என்ற நல்உள்ளம் வாய்க்கப் பெற்றவன் உதியஞ்சேரலாதன்.

**“கொடைக் கடன் என்ற கோடா நெஞ்சின்**
**உதியன் அட்டில் போல ஒலியெழுந்து**
**அருவி யார்க்கும் பெருவரை” (அகம். 168; 6-8)**

என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. தம்மிடம் பரிசில் பெற வரும் இரவலர்களுக்குக் கொடுத்தலாகிய கடமையை ஏற்றுக் கொண்டவன் என்பவன். அவனது சமையலறையில் எழும் ஆரவாரமானது பெரிய மலைகளில் இருந்து விழும் அருவிகளின் ஆரவாரம் வழிந்தோடுதலைப் போன்று இருக்கும் என்று கோட்டலம்பலத்து துஞ்சிய சேரமான் கூறுவதில் இருந்து இவனது சமையலறையில் எழும் ஒலியை அருவி ஒலியுடன் ஒப்பிட்டுக் கூறும் காரணத்தினாலும் இவன் அரண்மனைக்கு இரவலர்கள் இடைவிடாது வருகை புரிந்தனர் என்பதும் அவர்களுக்கு உணவளித்து ஈகைக் கடன் ஆற்றினான் எனவும் காணப்படுவதனால் முறைப்படியும் குறித்தபடியும் விருந்தினர்களுக்கு உணவு அளிக்கும் ஆளுமைப் பண்பினை உடையவன் உதியஞ்சேரலாதன் எனமுடிகின்றது.

**<u>இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்</u>**

சேர வேந்தர்களுள் சிறந்தவனாகிய செங்குட்டுவனையும், சிறந்த பெரும்புலவராய் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகளையும் பெற்றெடுத்த பெருமைக்குரிய பேரரசன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவான். இவன் நெடுஞ்சேரலாதன் எனவும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் எனவும், குடக்கோ நெடுஞ்சேரலாதன் எனவும், குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன் எனவும் அழைக்கப்படுகின்றான். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பாரதப் போரில் இரு தரப்பு போர் வீரர்களுக்கும் அப்போர் முடியும் காலம் வரையில் உணவளித்துக் காத்தவன் எனப் போற்றப்படும் உதியஞ்சேரலாதனின் மகன் ஆவான். இவனுடைய தாய் வெள்ளியன் வேண்மான் என்னும் வேளிர் குலத் தலைவன் மகளாகிய நல்லினி என்பதை,

**“மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி**
**இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு**
**வெளியன் வேண்மாள் நல்லின் ஈன்ற மகன்**
**…………………………..**
**இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன்” (பதி.பதி. 2; 1-13)**

என்ற பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து பதிகம் குறிப்பிடுகின்றது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இமயமும், குமரியும் இருபால் எல்லைகளாகக் கொண்டு பெரும் நிலப்பரப்பு முழுவதையும் ஆண்ட பேரரசன் ஆவான். இவன் தன் படையுடன் வட நாடு வரைச் சென்று அங்குத் தன்னை எதிர்த்துப் போரிட்ட ஆரிய அரசர்களை வென்று வணங்கச் செய்தான். அவ்வெற்றியின் அடையாளமாக அவ்வாரியர்களுக்கு உரியதாகக் கருதப்படும் இமய மலையின் மீது தனது அரச இலட்சணை ஆகிய வில்லைப் பொறித்த கொடியினை பறக்கச் செய்தான். இவ்வெற்றியின் சிறப்பே அவன் பெயரோடு இணைத்துப் பாராட்டப்பெற்றுள்ளதை,

**"அமைவரல் அருவி இமயம் விற்பொறித்து**
**இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்**
**தன்கோல் நீறிஇத் தகைசால் சிறப்பொடு**
**பேரிசை மரபின் ஆரியர் வணக்கி"           (பதி.பதி. 2;4-7)**

என்ற பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தின் பதிகம் வாயிலாக அறியமுடிகின்றது.

<u>பொய்கூறாப்பண்பு</u>

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தனது அரசியல் பணிகள் காரணமாக பொய்கூற வேண்டிய சூழ்நிலை நேர்ந்தாலும் அவன் அப்பொழுதும், எப்பொழுதும் பொய் கூறாத பண்பை உடையவன் என்பதை,

**"கண்ணின் உவந்து நெஞ்ச அவிழ்பு அறியா**
**நண்ணார் தேஎத்தும் பொய்ப்பு அறியலனே**
**கனவினும் ஒன்னார் தேய"  (பதி. 20; 8-10)**

என்று குமட்டூர் கண்ணனார் குறுப்பிடுகிறார்.

நெடுஞ்சேரலாதன் கண்ணிலே உவப்பை வெளிப்படுத்தி உள்ளத்தின்கண் மலர்ச்சி இல்லாமல் தாம் பகை கொண்டுள்ள பகைவரிடத்தில் கூட கனவிலும் பொய் கூறுவதை அறியாதவன் எனக் கூறுவதனால் ஆழ்ந்த யோசனையும் தீர்மானமான முடிவும் உடைய ஆளுமைப் பண்பினை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கொண்டுள்ளான்.

<u>ஆட்சிச் சிறப்பு</u>

பகைவரின் நாட்டைப் பாழ் செய்து மகிழும் நெடுஞ்சேரலாதன் தன் நாட்டு மக்கள் தன்னிகர் இல்லாத பெரு வாழ்வு வாழ்வதற்கு வழிவகை செய்யும் நல்லோன் ஆவான்.இவன் அரச நெறியில் நின்று காக்கும் நல்லாட்சியை உடையவன்.  மழைக் கோள்களின் நிலையால் பொய்த்தல் அறியாது அவன் நாட்டு மக்கள் எங்கு எந்தக் காலத்தில் எவ்வளவு மழை வேண்டுகின்றாரோ, அங்கு அக்காலத்தில் அவர்கள் வேண்டுமளவு மழை பெய்யும் என்பதை,

**“காடே கடவுள் மேன புறவே**

**ஒள் இழை மகளிரொடு மள்ளர் மேன**

**ஆறே அவ்அனைத்து அன்றிய ஞாலத்துக்**

**கூலம் பகர்நர் குடிபுறந்தராஅ**

**குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி**

**அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது**

**மழை வேண்டு புலத்து மாரி நிற்ப**

**நோயொடு பசி இகந்து ஒரீஇ**

**பூத்தன்று பெரும! நீ காத்த நாடே!” (பதி. 13; 20-28)**

என்ற பாடல் பதிவு செய்துள்ளது. இரண்டாம் பத்தில் வேந்தே உன் நாட்டில் பெரிய காடுகள் எல்லாம் கடவுள் விருப்பங்கொண்டு தங்கும் கோயில்கள் ஆயின. சிறிய காடான இடங்கள் அனைத்தும் உனது படைவீரர்கள் தங்குகின்ற இடங்கள் ஆயின. பெரிய வழிகளில் ஆறலைக் கள்வர்களால் ஏற்படும் இடையூறுகளும் பிற இடையூறுகளும் இன்றி கடவுளும், படை வீரர்களும் தங்கக் கூடிய இடங்கள் ஆயின. அரசே! நீ நெல் முதலிய தானியங்களை விற்கும் வணிக குடிகளை பாதுகாத்தும், உழுதுண்ணும் வேளாளர்களின் எளியக் குடும்பங்களை பாதுகாத்தும் வருகின்றாய். செவ்வாய் கோள் சென்ற வழியில் சுக்கிரன் போல் செல்லாமல் மழை தேவையான இடங்களில் எல்லாம் உனது நாட்டில் தேவைக்கேற்ப பெய்கின்றது. உனது மக்களுக்கு நோயும் பசியும் இல்லாமல் நீ காத்து வருவதால் உனது நாடு பொலிவு பெற்று விளங்கும். இக்கூற்றுகளால் இம்மன்னனின் ஆளும் நாட்டினது நிர்வாகம் தொடர்பான ஆளுமைப் பண்புகள் வெளிப்படுகின்றன.

**பண்பு நலன்**

அரசர் அறிவும் ஆற்றலும் உடையவராக இருந்தாலும், தம்மை விடச் சிறந்த சான்றோர் சூழ வாழ்வதைத் தன் தலையாய வழக்கமாகக் கொள்வர். நெடுஞ்சேரலாதனிடமும் இப்பண்பு நிலைபெற்று இருந்தது. அறம் கூறும் ஆன்றோர்களை அவன் என்றும் பிரிய மாட்டான். செல்லும் இடமெல்லாம்

தன்னை விட்டுப் பிரியாத நிழல் போன்று சான்றோர்களும் தன்னை விட்டுப் பிரியாமல் இருத்தலையே அவன் பெரிதும் விரும்புவான்.

**“அமர்பு மெய்யார்த்த சுற்றமொடு**
**நுகர்தற் கினிது பெருஞ்கலி மகிழ்வே” (பதி.12; 24-25)**

என்னும் பாடலடிகள் இச்செய்தியைத் தருகின்றன.

பகைவரைப் போர் செய்து பணிய வைக்கும் பேராற்றல் வாய்ந்தவர்கள் அப்பகைவர் தம் பகைமை ஒழிந்து பணிந்து நின்றதனால் அவரைப் பாதுகாத்தலே புகழ் தரும் பெருஞ்செயல் ஆகும்.மாறாகப் பணிந்து நின்றவரின் பிழையை பொறுத்துப் பேணாது மேலும் பழி வாங்க எண்ணுவது பழியோடு இணைந்ததாகும்.இதையும் உணர்ந்தவன் நெடுஞ்சேரலாதன் ஆவான். இவன் தனது பகைவர்கள் பொறுக்க முடியாத பெரும்பிழை புரிந்தவராக இருந்தாலும், பின் அவர்கள் பணிந்து திறை கொடுத்ததனால் அவர்களது பிழையினை மறந்து அவர்கள் மீதும் அருள் புரியும் அற உள்ளம் உடையவன் என்பதனை,

**“பெரிய தப்புநராயினம் பகைவர்**
**பணிந்து திறை பகரக் கொள்ளுநை ஆதலின்” (பதி. 17; 2-3)**

என்று குமட்டூர் கண்ணனார் கூறுவதனால் சூழ்நிலைக்கு ஏற்றவாறு செயல்படும் ஆளுமைப் பண்பினை உடையோனாக இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் விளங்கியமையை அறியமுடிகின்றது.

**<u>வீரம்</u>**

கூற்றுவனே வெகுண்டு வந்தாலும் அவனையும் தோற்கச் செய்யும் ஆற்றல் மிக்கவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்.

**“அமர் கடந்து மலைந்த தும்பைப் பகைவர்**
**போர் வீடு அழித்த செருப் புகழ் முன்ப**
**கூற்று வெகுண்டு வரினும் மாற்றும் ஆற்றலையே” (பதி. 14; 8-10)**

என குமட்டூர் கண்ணனார் குறிப்பிடுகிறார்.மன்னா! உன்னோடு போரிட்ட உனது பகைவர்கள் பல போர்க்களங்களில் வேறு பலரோடு அஞ்சாது எதிர்த்து நின்று வெற்றி பெற்ற ஆற்றல் உடையவராவர். அவர்கள் தும்பை மாலையைச் சூடி நின்னோடு தம் வலிமை கருதி போரிட்ட நின் பகைவர்களது வெற்றிப் புகழினை அழித்து மேலும் போர் செய்தலையே விரும்பி நின்ற வலிமை உடையவன் நெடுஞ்சேரலாதன் என்பதை மேற்காணும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

**“எழுமுடி கெழீஇய திரு ஞெமர் அகலத்து**
**நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை” (பதி.14; 11-12)**

என்பதும் இவனின் வீரம் குறித்த குறிப்பாகும்.ஏழு அரசர்களை வென்று அவர்கள் தரித்திருந்த மணி முடிகள் ஏழினையும் கவர்ந்து கொண்டு அவற்றால் செய்த ஆரம் பொருந்திய வெற்றித் திருமகள் விரும்பித் தங்கும் பரந்த மார்பினையும், வலிமை பொருந்திய பெரிய கைகளையும் உடையவனே, போரிற்கு அமைந்தோராகிய உன் படை வீரர்கள் போர் களத்தில் புகுந்து போர் செய்கின்றார். அவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு போரில் புகுந்து வலிமையோடு முன் நின்று வீரர்களின் மார்புக் கவசமாக விளங்கும் நிலையில் அவனின் பெருவீரம் வெளிப்படுகிறது.

நெடுஞ்சேரலாதன் ஆரிய மன்னர்களை வென்று இமயத்தின் மீது தன் கொடியைப் பறக்கச் செய்த செய்தியைப் பரணர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

**“ஆரியர் அவலத் தாக்கி பேர் இசைத்**
**தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து**
**வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்” (அகம் .396; 16-18)**

பொங்கி சினந்தெழுந்த நெடுஞ்சேரலாதன் ஆரிய மன்னர்கள் அலறுமாறு அவர்களைத் தாக்கி பழமைச் சிறப்பும் பெரும் புகழும் கொண்ட இமய மலையின் மீது தமது விற்கொடியை பறக்க விட்டார் என்று பரணர் குறிப்பிடுகின்றார்.

இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் பெற்ற வெற்றிகளுள் புலவர் பலரால் போற்றப்படும் பெருமை வாய்ந்தது. கடலிடையே உள்ளத் தீவுகளைத் தனது வாழ்விடமாகக் கொண்டு வாழ்ந்த கடம்பர்கள் என்னும் கடற்கொள்ளையர்களை விரட்டி அடித்து வென்றதாகும்.

**" சாலபெருந் தானைச் சேரலாதன்**
**மால்கடல் ஓட்டி கடம்பு அறுத்து இயற்றிய**
**பண்அமை முரசு" (அகம். 347; 3-5)**

என்னும் பாடலடிகள் இச்செய்தியைத் தருகின்றன.

மிகப்பெரிய படைகளை உடைய நெடுஞ்சேரலாதன் பெரிய கடலின் கண் தன்னை வந்தெதிர்த்த கடற்கொள்ளையர்களை புறங்காட்டி ஓடச் செய்து அவர்களுடைய காவல் மரமாகிய கடம்பினை வெட்டி ஓசை அமைந்த முரசினைச் செய்தான் என்பதனால் நெடுஞ்சேரலாதனின் வீரம் குறித்த ஆளுமைப் பண்பினை அறிய முடிகின்றது.

**கொடைப்பண்பு**

ஒருவர் அறிவு, ஆற்றல், ஒழுக்கம், உயர்குணம் இவை உடைமையால் எத்துணைதான் புகழுறினும் அவர் தம்பால் வந்து இரந்தாருக்குப் பொருள் கொடுத்துப் பெறும் கொடைக் குணத்தால் உண்டாகும் புகழுடையார் போல் போற்றப்படுவதில்லை. அறிவு முதலாகியவற்றால் வருவது உண்மைப் புகழ் ஆகாது.கொடுத்துப் பெறும் புகழே புகழ் ஆகும். நெடுஞ்சேரலாதனிடம் ஏனையப் பண்பு நலன்களோடு ஈகைப் பண்பு நிறைந்திருந்தது என்பதை,

**"மண்ணுடை ஞாலம் புரவெதிர் கொண்ட**
**தண்ணியல் எழிலி தலையாது மாறி**
**மாரி பொய்க்குவ தாயினும்**
**சேரலாதன் பொய்யலன் நசையே" (பதி. 18; 9-12)**

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

மண் அணுக்கள் செறிந்த இவ்வுலகத்து உயிர்களைப் பாதுகாத்தலை கடமையாகக் கொண்ட குளிர்ந்த தன்மையுடைய மேகமானது மழை பெய்யாது நீங்கிப் பொய்ப்பினும் சேரலாதன் கொடுத்தலைக் கைவிடமாட்டான். கொடைக் குணத்தில் இருந்து அவன் உள்ளம் சிறிதும் மாறாது என்பதைப் பின்வரும் பாடல் காட்டுகின்றது,

**"கொடைக்கடன் அமர்ந்த கோடா நெஞ்சினன்**
**மன்னுயிர் அழிய யாண்டுபல மாறித்**
**தண்ணியல் எழிலி தலையா தாயினும்**
**வயிறுபசி கூர ஈயலன்' (பதி. 20; 23-26)**

வறியோராய் வந்து தன் வாயிலினில் நிற்பாருக்கு அவர் வறுமை போக வழங்கும் வள்ளியோனாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கொடுக்கும் போது குறையாகக் கொடுப்பவன் அல்லன். வருந்தி வந்தோர் வயிற்றுப் பசித் தீ தணியப் பெரும்பொருள் தந்து பேணுவான். இவன் மண் செறிந்த நில உலகில் நிறைவு பெற்ற உயிர்களெல்லாம் குறைபடாமல் கொடுத்து கையொளியாக ஈகையினையும் கடிய வலிமையினையும் உடையவன் என்பதை மேற்காணும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

**"மண்ணுடை ஞாலத்து மன் உயிர்க்கு எஞ்சாது**
**ஈத்துக் கை தண்டாக் கை கடுந்துப்பின்" (பதி. 15; 35-36)**

என்று குமட்டூர் கண்ணனார் கூறுவதில் இருந்து நெடுஞ்சேரலாதனின் கொடை குறித்த ஆளுமைப் பண்பினைக் காணமுடிகின்றது.

**<u>பல்யானைச் செல்கெழுகுட்டுவன்</u>**

பல்யானைச் செல்கெழுகுட்டுவன் பாரதப் போரில் இருதிற பெரும்படைக்கும் அப்போர் முடியும் வரையில் உணவளித்துப் புகழ் பெற்ற பெருஞ்சோற்று உதியன்சேரலாதன் மகன் ஆவான். வெள்ளியன், வேண்மான் என்னும் வேளிர்குலத் தலைவன் மகளாகிய நல்லினி என்பாள் இவள் தாய். இமயத்தில் விற்கொடியினை பொறித்து இமயவரம்பன் என புகழ்மிக்க பெயர்

கொண்ட நெடுஞ்சேரலாதன் இவன் உடன் பிறந்தவன் என்பதைப் பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தின் பதிகத்தில்,

**"இமைய வரம்பன் தம்பி அமைவர**
**உம்பற் காட்டைத் தன் கோல் நிறீஇ" (பதி. பதி. 3; 1-2)**

எனக் குறிக்கப் பெற்றுள்ளது. போர்க்களத்தில் அஞ்சாது முன் சென்று அரும்போர் ஆற்றி பகைவர் தம் அரண்களை அழித்து வெற்றி தரும் விறல் மிக்க யானைகள் பல கொண்ட பெரும் படை உடைமையால் இச்சேரன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என அழைக்கப்பட்டான். என்பதை,

**"அமர்கோள் நேர் இகந்து ஆர்எயில் கடக்கும்**
**பெரும்பல் யானைக் குட்டுவன்" (பதி, 29; 13-14)**

என்று குறிப்பிடுகின்றது.

<u>அறிவுரை கேட்கும் பண்பு</u>

பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வெற்றியும், விழுச் சிறப்பும் விளங்கப் பாடிய புலவர் பாலைக்கௌதமனார் அவன் நல்லோர் போற்றும் நற்பண்புடையவனாய் வாழ வேண்டும். என்னும் நல்லெண்ணம் உடையவராகத் திகழ்ந்தார். இவர் செல்கெழுகுட்டுவன் அருகிருந்து அவன் முன்னோர் நாடாண்ட முறையினை,

**"சினமே காமம் கழிகண்ணோட்டம்**
**அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை**
**தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து**
**அறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்**
**தீதுசெண் இகந்து நன்றுமிகப் புரிந்து**
**கடலும் கானமும் பலபயம் உதவப்**
**பிறர்பிறர் நலியாது வேற்றுப் பொருள் வெஃகாது**
**மையில் அறிவினர் செவ்விதின் நடந்துதம்**
**அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்**

**மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய**

**ஊழி உய்த்த உரவோர் உம்பல்” (பதி. 22; 1-11)**

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

மிகுந்த கோபமும், மிகுந்த காமமும், அளவிறந்த கண்ணோட்டமும் பகைவருக்கு அஞ்சுதலும், பொய் கூறலும், பொருளின் இடத்தில் அளவுக்கு அதிகமாகப் பற்று வைத்தலும், அளவுக்கு அதிகமாகத் தண்டனை அளித்தலும் இவை போன்ற பிறவும் இவ்வுலகத்தில் அறவழியில் ஆட்சி செலுத்துவதற்குரிய அரசனது ஆணைச் சக்கரத்திற்கு தடையாக நிற்பன. எனவே, இத்தீமைகளெல்லாம் தம்மை நெருங்காது சேய்மையிலேயே விட்டு நீக்கி நன்மை பயப்பனவற்றையே செய்து கடலும் கடலினை அடுத்த காடாகிய முல்லை நிலங்களும், காட்டை அடுத்த நிலங்களும், பல பயன்களையும் உதவுமாறு செய்து குடிமக்கள் பிறரை வருத்தாமலும், பிறர் பொருளை விரும்பாமலும், குற்றமற்ற அறிவினராய் செந்நெறியில் ஒழுகி தம்மை விரும்புகின்ற தம் மனைவியரைப் பிரியாது தம் இல்லம் நாடி வரும் விருந்தினருக்கு தமக்குள்ளதை பகிர்ந்து அளித்து தாமும் உண்டு. குடிமக்கள் முதுமையும், நோயும் இல்லாமல் நல்லுடம்போடு நெடுநாள் வாழும் வகையில் ஆட்சி செலுத்திய நின் முன்னோர்களின் வழித்தோன்றலே! நீயும் உன் முன்னோர்கள் போல ஆட்சி புரிவாயாக என்று கூறுகின்றதனால் பிறரது கருத்திற்கு மதிப்பளிக்கும் இவனின் ஆளுமைக் குணம் அறியலாகின்றது.

**<u>ஆட்சி சிறப்பு</u>**

பல்யானைச் செல்கெழுகுட்டுவன் தனது ஆட்சி சிறப்பால் முன்பு பெரிய வெற்றியை உடையப் பகைவரது பசிய கண்களை உடைய யானையினது வரிசை அழியும்படி தம் வலிமையெல்லாம் செலுத்தி வேலினை எறிந்த ரத்தக்கறை படிந்த பாதங்களை உடைய வீரர்கள் இன்று விரைந்து அம்பு தொடுத்தலையே மறக்கும்படி ஆயினர் என்பதை,

**"திரு உடைத்து அம்ம – பெரு விறற் பகைவர்**
**பைங்கண் யானைப் புணர் நிரைதுமிய**
**உரம் துரந்து எறிந்த கறைஅடி கழற்கால்**
**கடுமா மறவர் கதழ் தொடை மறப்ப**
**இளை இனிது தந்து விளைவு முட்டுறாது**
**புலம்பா உறையுள் நீ தொழில் ஆற்றலின்"          (பதி. 28; 1-6)**

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

<u>**வீரம்**</u>

பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் ஆற்றலையும், ஆண்மையையும் அறிந்து, சோழ நாட்டையும், பாண்டி நாட்டையும் ஆண்டு கொண்டிருந்த இரு பெரு வேந்தர்களும் சில வேளிர்களைத் துணையாகக் கொண்டு குட்டுவனை எதிர்த்தனர். குட்டுவன் அவர்களையும் அழித்து அவர்களுக்கு அரணாக அமைந்திருந்த கடல் அரணையும், காட்டரணையும் அழித்தான். இதனை,

**"பனைகெழு வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து**
**கடலவும் காட்டவும் அரண்வலியார் நடுங்க"          (பதி.30; 30-31)**

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. அழிக்கலாகாத செல்கெழுகுட்டுவன் ஆற்றலினை அறிந்த அரசர்கள் அம்மன்னனுக்கு அஞ்சி தங்களது வாழ்வினை நடத்தினர்.

**"………………. நின்**
**மைந்து மலிபெரும் புகழ் அறியார் மலைந்த**
**போர் எதிர் வேந்தர் தார் அழிந்து ஒராலின்"          (பதி. 23; 15-17)**

என்பதன் வழியாக, பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் வலிமை பொருந்திய பெரிய புகழினை அறியாமல் அவனோடு பகை கொண்டு போர் எதிர்த்து வந்த வேந்தர்கள் அவன் தூசி படைக்கே நிலைத்து நிற்க முடியாமல் தோற்று ஓடுவர் என்பதனால் செல்கெழு குட்டுவனின் வீரம் குறித்த ஆளுமையினைப் பெறமுடிகிறது.

**கொடை**

பாடிப் பரிசில் பெறுவது தம் தொழில் எனக் கொள்ளாமல் தன் புகழைப் பாடியதோடு தான் நல்வாழ்வு வாழ்வதற்காக நல்லுரை பல வழங்கிய புலவரின்பால் பேரன்பு கொண்டவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன். அவன் பாலைக்கௌதமனாரை அன்புடன் நோக்கி "ஆன்றிர்!நீவீர் என்பால் வேண்டுவன யாவை?என விரும்பிக் கேட்டான். புலவர் யானும் என் மனைவியும் சொர்க்கம் புகல் வேண்டும். அஃதே என் விருப்பம் எனக் கூற கேட்ட உடனே குட்டுவன் அந்தணர் கூறிய அறவழி நின்று பத்துப் பெரு வேள்விகள் செய்து அவ்விருவரையும் பெரு நெறியில் இருத்தினான்"[37] என்ற கருத்தின் வழி இவனது கொடைத்திறன் புலனாகிறது.

**களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல்**

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மக்கள் நால்வருள் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலும் ஒருவன் ஆவான். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் இளைய மனைவி வேளாவிக் கோமான் பதுமன் மகள் வயிற்றிற் பிறந்தவர்கள். களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் இருவரும் ஆவர். களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் என்னும் இப்பெயர் "இவன் களங்காயாற் கண்ணியும், நாரால் முடியும் செய்து அணிந்து கொண்டிருந்தமையால் வந்த காரணப் பெயர் என்றும் இவன் சிறு வயதிலேயே அரசுரிமை பூண்ட காரணத்தினால் ஒரு சிலர் நன்னன் என்பான் துணையைப் பெற்று சேர நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றி ஆண்டு கொண்டிருந்தனர். அந்நாட்டையும் வென்று சேர அரசிற்குரிய அனைத்து நாட்டையும் ஆளும் அந்நாள் வரை அச்சேரர்க்குரிய கண்ணியும், முடியும் புனையேன்"[38] எனச் சூளுரைத்து அவற்றிற்கு ஈடாக களங்காய்க்கண்ணியும் நார்முடியும் புனைந்து நின்றமையால் இவருக்கு இப்பெயர் வந்தது.

---

37. .கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை.

38. . மேலது.

**ஆட்சிச் சிறப்பு**

களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் பிறருக்கென்றே வாழ்கின்றவன் என்பதை,

> **“பிறர்க்கு என வாழ்தி நீ ஆகன்மாறே**
> **எமக்கு இல் என்னார்” (பதி. 39: 1-2)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

நார்முடிச் சேரல் மிக உயர்ந்ததும் நல்ல புகழையுடையதுமான உலகம் உள்ள அளவும் அழியாமல் நிலைத்து நிற்க, வறுமையால் நடுக்கமுற்ற தன் கீழ் உள்ள மக்களையும் மேம்படுத்தும் நிர்வாகத்திறன் கொண்டவன். இதனை,

> **“வான் தோய் நல்இசை உலகமொடு உயிர்ப்ப**
> **துளங்கு குடி திருந்திய வலம்படு வென்றியும்…**
> **……………………………..**
> **தொல் நிலைச் சிறப்பின் நின்நிரல் வாழ்நர்க்குக்**
> **கோடு அற வைத்த கோடாக் கொள்கையும்” (பதி. 37; 6-11)**

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன.

தனது நிழலில் வாழ்பவர்களுக்கு இன்னல்கள் இல்லாதபடி வைத்த மாறுபடாத கோட்பாட்டினை மிகவும் உடையவனாய் நார்முடிச் சேரல் திகழ்வதனால் நிர்வாகம் தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

**வீரம்**

நன்னன், நார்முடிச்சேரல் சிறுவனாக இருந்த காலத்திலேயே அவனுக்குரிய பூழி நாட்டைக் கவர்ந்து கொண்டான். நார்முடிச்சேரல் சேர நாட்டின் அரியணை ஏறியதும் நன்னன் கைப்பற்றி ஆண்டு கொண்டிருந்த பூழி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். இதற்கான இலக்கியச் சான்று பின்வருமாறு,

**“இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்**
**பொலம்பூண் நன்னன் பொருது களத்துஒழிய**
**வலம்படு கொற்றம் தந்த வாய் வாள்**
**களங்காயக் கண்ணி நார்முடிச் சேரல்**
**இழந்தநாடு தந்தன்ன”** **(அகம். 199; 19-23)**

நார்முடிச்சேரல், கடம்பின் பெருவாயில் வாகை மரத்தினை உடையப் பெருந்துறை என்னும் போர்க்களத்தில் பொன்னால் ஆன பூண் அணிந்த நன்னன் என்பவனுடன் கடும்போர் புரிந்து அந்நன்னனுக்கு உரியக் காவல் மரமாகிய வாகை மரத்தை வெட்டி வீழ்த்தினான். மேலும் நன்னனையும் போரில் வென்று முன்பு தான் இழந்த நாட்டையும் கைப்பற்றி மீண்டான் என்று கல்லாடனார் குறிப்பிடுகின்றார்.

அதியமான் நெடுமான் அஞ்சியின் குலத்தில் தோன்றிய நெடுமிடல் என்பவன் வளம் செறிந்த மருத நிலத்து ஊர்களை ஆண்டு வந்தான். இவனது நாட்டில் நாரைகள் தமக்கு வேண்டிய உணவுகளைத் தேர்ந்தெடுத்து உண்பதற்கு ஏற்றார் போல் மீன்கள் நிறைந்து காணப்படும், அந்நாட்டு நன்செய் நிலங்களில் மூங்கில் போல் வளர்ந்து விளங்கும் நெற்பயிர்கள் கதிர்களின் கனத்ததால் தலை சாய்ந்து கிடக்கும். இவ்வண்ணம் வளங்கொழிக்கும் நாட்டினை உடையவன் என்பதால் நெடுமிடல் செருக்குற்று இருந்தான். நார்முடிச்சேரல் நெடுமிடலின் செருக்கு அழியுமாறு, தன் படையொடு நெடுமிடல் நாட்டிற்குப் புகுந்து தனது யானைப் படையைக் கொண்டு அவன் நாட்டு வளத்தை அழித்து நெடுமிடலையும் வென்று வெற்றிவாகை சூடினான். இதனை,

**“நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்**
**பெருமலை யானையொடு புலங்கெட இறுத்துத்**
**தடந்தாள் நாரை படிந்து இரை கவரும்**
**முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்**
**பிழையா விளையுள் நாடகப் படுத்து”** **(பதி. 32; 10-14)**

என்ற நிலையில் நார்முடிச் சேரலின் வீரம் குறித்து அறிய முடிகின்றது.

## கொடை

வறுமையால் சில வளையல்கள் அணிந்து காணப்படும் விறலியே! நீ களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலிடம் செல்வாயாக. சென்றால் உன் கூட்டத்தில் உள்ள மெல்லிய இயல்பை உடைய மகளிர் வேங்கை மரம் எவ்வாறு அதிகமான பூக்களுடன் காணப்படுமோ அதே போன்று அவர்களும் அணிகலன்களை அணிந்து அழகு பெற்றுச் சிறந்து விளங்குவீர் என்று பொருள் தரும்படி அமைந்த பின்வரும் பாடல் அவனின் கொடைத் திறத்தைக் காட்டுவதாக உள்ளது.

**"செல்லாயோதில் சில்வளை விறலி**
**மலர்ந்த வேங்கையின் வயங்குஇழை அணிந்து**
**மெல்இயல் மகளிர் எழில் நலம் சிறப்ப**
**பாணர் பைம்பூ மலைய இளையர்**
**இன்களி வழாஅ மென்சொல் அமர்ந்து**
**நெஞ்சு மலி உவகையர் வியன் களம் வாழ்த்த**
**தோட்டி நீவாது தொடி சேர்பு நின்று**
**பாகர் ஏவலின் ஒன் பொறி பிசிர**
**காடுதலைக் கொண்ட நாடுகான் அவிர்சுடர்**
**அழல் விடுபு மரீஇய மைந்தின்**
**தொழில் புகல் யானை நல்குவன்" (பதி. 40; 21-31)**

இப்பாடலில் பாணர்கள் பசிய பொன்னால் செய்த தாமரை மலரைச் சூடும்படி இவன் தருவான் என்பதும் குறிக்கப்படுகிறது. இதற்கு நன்றி செலுத்தும் நிலையில் பாணரின் சிறுவர் இனிய களிப்பு வழுவாத மென்சொல்லை விரும்பி நெஞ்சில் மிக்க மகிழ்ச்சியுடையவராய் அகன்ற போர்க்களத்தில் வாழ்த்துவர். அங்குசத்தின் எல்லையைக் கடவாது, பூண் அணியப் பெற்று விளங்குபவையும், பாகர் ஏவுதலின்படி நடப்பனவும் ஒள்ளி தீப்பொறிகள் கலந்து தோன்றும்படி காட்டை இடமாகக் கொண்டனவும், நாட்டிலுள்ள அனைவரும் காணத்தக்கதாய் விளங்குகின்ற காட்டுத்தீயைப் போன்ற சினத்தீயை

வெளிப்படுத்தும் வலிமையுடையனவாய்ப் போர்த்தொழிலை விரும்பும் யானைகள் பலவற்றை இவன் அளிப்பான் என்று காப்பியாற்றுக் காப்பியனார் குறிப்பிடுவதனால் நார்முடிச் சேரலின் கொடைக் குணம் புலனாகின்றது.

**கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்**

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் சோழன் மணக்கிள்ளி மகள் நற்சோனையை மணந்து பெற்ற மக்கள் இருவராவர். அவருள் மூத்தோன் தென் தமிழரை பழித்துரைத்த வட ஆரியரை வணங்கச் செய்த செங்குட்டுவன் ஆவான். இளையோன் சிலப்பதிகாரத்தை ஆக்கித்தந்த இளங்கோவடிகள் ஆவார். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், செங்குட்டுவனைப் பெற்றெடுக்க பெருந்தவம் கிடந்தான் என்பதை,

**“செஞ்சடை வானவன் அருளினில் விளங்க**
**வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்” (சிலம்பு. 26; 98-99)**

என்றும்,

ஆனேறூர்ந்தோன் அருளால் பிறந்தான் என்பதை,

**“ஆனேறு ஊர்ந்தோன் அருளிற் தோன்றி**
**மாநிலம் விளக்கிய மன்னவன்” (சிலம்பு. 30; 141-42)**

என்றும், தனது அண்ணனின் வரலாற்றினை எடுத்தியம்புகின்றார் இளங்கோவடிகள்.

**நட்புணர்வு**

மோகூரில் பழையன் என்றொருவன் பெருவீரனாய் விளங்கி வந்தான். மோகூர் அரிய வளங்களைத் தன்னுள் உள்ளடக்கியதாக இருந்தது. அப்பழையனோடு பகை கொண்டவர்களுள் அறுகை என்பவனும் ஒருவன் ஆவான். இவன் சேர நாட்டிற்கு வெகு தொலைவில் அமர்ந்து, சிறப்புடன் ஆட்சி புரிந்து வாழ்ந்து வந்தான். அவன் பல போர்களிலும் வெற்றி கண்டான். அவன் அச்செருக்கால் மோகூர் பழையனையும் எதிர்த்துப் போரிட்டான்.

ஆனால் அப்போரினில் அறுகை தோல்வியடைந்தான். அறுகை, தோற்ற பழி அஞ்சி எங்கோ ஓடி ஒளிந்து வாழ்ந்து வந்தான். இச்செய்தியினை அறிந்தான் செங்குட்டுவன். ஏனெனில் அறுகைச் செங்குட்டுவனின் சிறந்த நண்பர்களுள் ஒருவன் ஆகத் திகழ்ந்தவன் ஆவான். சேர நாட்டிற்கு வெகு தொலைவில் இருந்து வாழ்ந்து வந்தமையால் செங்குட்டுவனுடன் சேர்ந்து வாழும் வாய்ப்பினை இழந்திருந்தான். “செங்குட்டுவனோ புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும் என்ற உண்மை அறிந்து ஒழுகும் உணர்வுடையவன் ஆவான்.அதனால் அருகைச் சேய் நாட்டினன் ஆயினும் என் சிறந்த நண்பன் ஆவான். அவனுக்கு நேர்ந்த இவ்விழிவு எனக்கு நேர்ந்த இழிவாம். ஆகவே அதனைக் களைதல் என் கடன் எனக் கொண்டான்”[39] என்ற குறிப்பு செங்குட்டுவனின் நட்புத்திறத்தை உணர்த்துகின்றது. இதற்கான இலக்கியச் சான்று பின்வருமாறு,

**“வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து**
**மொய்வளம் செருக்கி மொசிந்துவரு மோகூர்**
**வம்படு குழூஉநிலை அதிரமண்டி**
**நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்**
**நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி**
**மழைநாட் புனலின் அவல்பரந் தொழுகப்**
**படுபிணம் பிறங்கப் பால்பல செய்து**
**படுகண் முரசன் நடுவண் சிலைப்ப**
**வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்**
**கருஞ்சினை விறல்வேம் பறுத்த**
**பெருஞ் சினக் குட்டுவன்”          (பதி. 49; 7-17)**

சேரர்களின் படைக்குத் தோற்று பின்வாங்கிய சோழனும் பாண்டியனும் பழையன் படைக்குத் துணையாக வந்தனர். பேரரசர்கள் இருவர்கள் மட்டுமல்லாது குறு நில மன்னர்களான வேளிர் பலரும் அவனுக்குத் துணையாக நின்றனர்.வேந்தர்களும், வேளிரும் ஒன்று கூடி தனக்குத் துணைபுரிந்த

[39].கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை.

காரணத்தினால் பழையன் பெருஞ்செருக்குற்று பேராற்றலுடன் போரிட்டான். ஆயினும் அவன் செங்குட்டுவனிடம் போரில் தோற்றான். குட்டுவன் பழையனுக்கு போரில் துணையாக வந்தோரைத் துரத்தியடித்து பழையனை தனக்குப் பணிய வைத்தான் என்பது இப்பாடல் தரும் பொருளாகும்.

**"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்**
**முழாரை முழுமுதல் துமியப் பண்ணி**
**வாலிழை கழிந்த நறும்பல் பெண்டிர்**
**பல்லிருங் கூந்தல் முரற்சியாற்**
**குஞ்சர ஒழுகை பூட்டி" (பதி.பதி. 5; 13-17)**

பழையனின் காவல் மரமாகிய வேம்பை வெட்டி அதனை முரசு செய்வதற்காக சிறு சிறுத் துண்டுகளாகச் செய்து அவற்றைப் பழையனின் மனைவியர் தலை மயிரினை திரித்துப் பெற்ற கயிற்றால் கட்டி அவன் யானைகளைக் கொண்டே இழுத்துச் சென்று தன் நண்பன் அறுகையின் இழிவுத் துன்பத்தை துடைத்து, செங்குட்டுவன் தானும் புகழ் பெற்றான் என்பதைப் பாடலடிகள் சுட்டுகின்றன. ஆகையினால் செங்குட்டுவனின் நட்புணர்வு குறித்த பண்பு நலனை அறிய முடிகின்றது.

<u>பக்தி</u>

ஆற்றல் மிக்க அரசனாகவும் ஏற்றோர் இன்முகம் கண்டு உவக்கும் உயர்கொடையாளனாகவும் விளங்கியவன் செங்குட்டுவன். இவன் கடவுள் அன்பு கொண்ட காவலனாகவும் விளங்கினான்.தமிழ் பத்தினி தெய்வமான கண்ணகியின் சிலையினை வடிக்க கல்கொண்டு வருவதற்காக வடநாடு நோக்கிச் செல்லும்முன், நிகழ்ந்தவற்றைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்**
**சேடம் கொண்டு சிலர் நின்று ஏத்த**
**தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்**
**வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்**
**ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்து தாங்கினன்" (சிலம்பு. 26; 62-66)**

ஆடகமாடம் என்னும் கோயிலில் அறிதுயில் அமர்ந்தருளும் திருமாலின் பிரசாதத்துடன் வந்து சிலர் அரசர் முன் நிற்கச் சிவபெருமான் திருவடிகளைத் தலை உச்சியில் தாங்கி இருக்கும் செங்குட்டுவன் திருமாலின் பிரசாதத்தை வாங்கி தன் தோள்களில் இட்டுக் கொண்டான் என்று கூறுவதன் மூலம் இவனிடத்து சமயப் பொறையுடைமை காணப்பட்டது என்பதை இளங்கோவடிகள் கூற்றால் அறியலாகின்றது.

<u>கொடை</u>

செங்குட்டுவன் போர் பல கண்ட சிறப்புடையவன் மட்டுமன்றி பிறருக்கு கொடுத்து மகிழும் குணச்சிறப்பும் உடையவன் ஆவான். தனது விளை நிலங்களில் பொன்னேர் பூட்டும் உழவர் உள்ளமெல்லாம் இன்பம் நிலைகொள்ளுமாறு பெருமழை பெய்து பெரு வெள்ளத்தினை ஏற்படச் செய்யும் வானத்தைப் போன்ற கொடைக்குணம் உடையவன் செங்குட்டுவன் என்பதை, பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"இரும்பணை திரங்கப் பெரும்பெயல் ஒளிப்பக்**
**குன்றுவறன் கூரச் சுடர்சினம் திகழ**
**அருவியற்ற பெருவறற் காலையும்**
**அருஞ்செலற் பேராற்று இருங்கரை உடைத்துக்**
**கடியேர் பூட்டுநர் கடுக்கை மலைய**
**வரைவில் அதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்து**
**ஆர்கலி வானம் தளிசொரிந் தாஅங்கு**
**உறுவர் ஆர ஓம்பாது உண்டு**
**நகைவர் ஆர நன்கலம் சிதறி**
**ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரல்**
**பாடு விறலியர் பல்பிடி பெறுக**
**துய்வீ வாகை நுண்கொடி உழிஞை**
**வென்றி மேவல் உருகெழு சிறப்பின்**
**கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக**

**மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்**
**கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்**
**அகவலன் பெறுக மாவே' (பதி. 43; 12-18)**

மேலும் செங்குட்டுவன் தன் இடத்தில் பொருள் பெறும் விருப்பத்தால் தன்னைப் பாடிய புலவர் பெருமக்களை விரும்பி ஏற்று அவர் அமர்ந்து உண்ணுமாறு அவர்களின் அருகில் இருந்து ஊட்டுவான். அவன் ஆடல் பாடல்களால் தனது அகத்தினை மகிழச் செய்யும் பாணர் கூத்தர் முதலியோருக்கு பொற்கலன்களை அளித்துப் போற்றுவான். அவன் கையில் தாங்கிய யாழில் இருந்து எழும் இசையோடு இயைந்த இன்குரல் எழுப்பிப் பாடும் விறலியருக்கு பிடி யானைகள் பல தந்து பேணி மகிழ்வான். அவன்வெற்றி மேல் வெற்றியே வேட்கையாகக் கொண்டு பகை வேந்தர் உள்ளம் பதைபதைக்குமாறு அவர்கள் நாட்டிற்குள் புகுந்து போரிடும் பொருள் பல கவர்ந்து வரும் ஆண்மை நிறைந்த ஆற்றலுடைய மறவர்களுக்குக் கொல்லும் தன்னையுடைய களிறுகளை கொடுத்து அவர்களின் வீரத்தைப் போற்றுவான். அவன்கையில் கோலேந்தி மன்றினும் மருகினும் மன்னன் புகழை மகிழ்ந்து பாடும் பாணர்களுக்குக் குதிரைகள் பல அளித்துப் பாராட்டுவான் என்று பரணர் இவனின் கொடைத்திறத்தை வெளிப்படுகின்றார்.

**<u>வீரம்</u>**

கடல் நீரை அரணாகக் கொண்டு அக்கடலின் இடையில் வாழ்ந்து வந்த சிலர் சேரரின் குலத்திற்கே பகைவராய் விளங்குவதைக் கண்ட செங்குட்டுவன் கப்பற்படையுடன் சென்று அவர்களை அறவே ஒழித்து வெற்றி பெற்றான். குலப் பகை ஒழித்துக் குடி விளங்கச் செய்த இவனின் நிலையை நாடு வாழ்த்திற்று. மக்கள், கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், கடலோட்டிய வெல்புகழ் குட்டுவன் என்றெல்லாம் இவனைப் பாராட்டினர். குட்டுவன் பெற்ற கடற்போர் வெற்றியைப் பரணர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**“கால்உளைக் கடும்பிசிர் உடைய வால்உளைக்**
**கடும்பரிப் புரவி ஊர்ந்த நின்**
**படும்திரைப் பனிக்கடல் உழந்த தாளே” (பதி. 41; 25-27)**

ஓயாது ஒலிக்கும் அலைகளை உடைய கடல் நீரானது, காற்றால் அலைக்கப்பட்டு சிறுசிறு திவலைகளாக மாறி உடையுமாறு பெரும்போரிட்ட கால்கள் சேரன் செங்குட்டுவன் கால்கள் எனப் பாராட்டப் பெறுகிறான்.

**“இனி யாருளரோ? நின்முன் இல்லை**
**மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது**
**விலங்குவளி கடவும் துளங்கிரும் கமஞ்சூல்**
**வயங்குமணி இமைப்பின் வேலிடுபு**
**முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே” (பதி. 45; 18-22)**

மேலும் உன் முன்னோரிலும் உன்னைப் போன்று ஆற்றல் கொண்டு விளங்கியவர் ஒருவரும் இல்லை. இனி உன்னைப் போன்று ஆற்றல் உடையோர் பிறத்தலும் அரிதே என்பதை, ஓவென முழங்கும் அலைகளோடு கூடிய குளிர்ச்சி பொருந்திய கடலிடையே மணிபோல் ஒளிவிட்டு மின்னும் வேற்படையினை கொண்டு சென்று எதிர்த்த பகைவரை ஆற்றல் தோன்ற அழித்து வென்றவன் செங்குட்டுவன் என்பதை மேற்கண்ட பாடலடிகள் வழியாக ஆற்றல் சுட்டப்பெறுகின்றன.

உயர எழுந்து ஓய்ந்து அடங்கும் அலைகளை உடைய நீர் பரப்பாகிய ஒலிக்கும் கடலை தங்களுக்கு அரணாகக் கொண்டு வாழ்ந்த அப்பகைவர்களைச் சங்குகள் ஒலிக்கும், அக்கடலும் கலங்குமாறு வேற்படையினைக் கொண்டு சென்று பகைவரை வென்று ஓட்டிய வெற்றியால் புகழ்பெற்ற குட்டுவன் என்பதைக் கீழ்க்கண்ட பாடலடிகள் சுட்டுகின்றன.

**“கோடுநரல் பெளவம் கலங்க வேலிட்டு**
**உடைதிரை பரப்பிற் படுகடல் ஓட்டிய**
**வெல்புகழ்க் குட்டுவன்” (பதி. 46; 11-13)**

**“குட்டுவன்**

**பொருமுரண் பெறாஅது விலங்கு சினம் சிறந்து**

**செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி**

**ஓங்குதிரைப் பெளவம் நீங்க ஓட்டிய**

**நீர்மாண் எஃகம்” (அகம். 212; 16-19)**

என்ற இலக்கியச் சான்றின் வழியாக தன்னோடு எதிர்த்து போரிடத்தக்க பெரும்பகைவர் யாவரையும் இந்நிலவுலகில் கண்டு பொறுத்துக் கொள்ளமாட்டாமையால் செங்குட்டுவனின் தோள்கள் இரண்டும் தினவு கொள்ளலாயின. ஆகவே அவன் தன் தோள்கள் பூரிக்க போர் புரியும் வேட்கையின் காரணமாக கடலை வளைத்து போரிட்டான். உயர்ந்து எழுந்து விழும் அலைகளை உடைய அக்கடல் நீர் செங்குட்டுவனின் ஆற்றலுக்குத் தோற்று பின்னிடுமாறு ஓட்டி பெருமையுற்றது அவன் கைவேள் என்று பாராட்டும் பரணர் பாராட்டுரைகள் பதிற்றுப்பத்திலும் அகநானூற்றிலும் இடம்பெற்றுள்ளன.

**"நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்**
**கொங்கர் செங்களத்துக் கொடுவரிக் கயல்கொடி**
**பகைபுறத்துத் தந்தனராயினும் ஆங்கவை**
**திசைமுக வேழத்தின் செவியகம் புக்கன'' (சிலம்பு, 25; 152-155)**

சேர நாட்டின் ஒரு பகுதியாக கொடுகூர் என்ற நாடொன்று இருந்தது.அது இன்றைய மைசூர் நாட்டின் தென் பகுதியாகிய புன்னாடு விஷயத்தின் ஒரு பகுதியாகத் திகழ்கின்றது. அந்நாட்டினை கொங்கர்கள் என்பவர்கள் ஆண்டு வந்தனர்.அண்டை நாடுகளின் அமைதியைக் குலைப்பதே தங்கள் தொழிலாகக் கொண்டிருந்தனர். இத்தகைய பண்புடையோர் தனது நாட்டின் அருகில் இருக்கக் கூடாது என நினைத்துச் செங்குட்டுவன் கொங்குநாட்டுக் கொடுகூர் மீது தான் படையெடுத்துச் சென்றான் என்பதை அறிய முடிகிறது.

**<u>ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்</u>**

சேரர் குலத்தில் சிறந்து விளங்கிய அரசர்களுள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பவனும் ஒருவன் ஆவான். அவனது மனைவியர் இருவரும் வேளாவிக் கோமான் பதுமன் என்னும் வேளிர் குலத் தலைவன் மகளுக்கும், நெடுஞ்சேரலாதனுக்கும் பிறந்த ஆண்மக்கள் இருவர். ஒருவன் களங்காய்கண்ணி நார்முடிச்சேரல் என்னும் பெயருடையவன். மற்றொருவன் பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்தில் நச்செள்ளையாரால் பாராட்டப்பெற்ற ஆடுகோட்பாட் சேரலாதன் ஆவான். இவனின் பிறப்பு பற்றி,

**"குடக்கோ நெடுஞ்சேரலாதற்கு வேளள்**
**ஆவிக்கோமான் தேவி ஈன்ற மகன்" (பதி. பதி. 6; 1-2)**

என்று குறிக்கப்படுகிறது.

**"மாறாஅ விளையுள் அறாஅ யாணர்த்**
**தொடை மடிகளைந்த சிலையுடை மறவர்**
**பொங்குபிசிர்ப் புணரி மங்குலொடு மயங்கி**
**வருங்கடல் ஊதையின் பணிக்கும்**
**துவ்வா நறவின் சாய் இனத் தானே" (பதி. 60; 8-12)**

என்னும் பாடலடிகள் இவனது நாட்டு வளத்தைக் காட்டுகின்றன.

ஆடுகோட்பாட் சேரலாதன் மாறாமல் விளையக்கூடிய நிலப்பகுதியையும், குன்றாத வளமும் கொண்டதும், விற்போர் அஞ்சா வன்காளரையும் வருத்தி வாட்டும் குளிர்ச்சி பொருந்திய காற்றடிக்கப் பெறுவதுமாகிய நறவு என்னும் கடற்கரை தலைநகராகக் கொண்டு சேர நாட்டின் வடமேற்குப் பகுதியை ஆண்டு வந்தான்.

## வீரம்

ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் ஆற்றல் மிக்கப் பேரரசன் ஆவான்.அவனை எதிர்த்துப் போர் புரிபவர்கள் போர் களத்திலேயே அழிந்து விடுவர். போர்களத்தில் ஆடுகோட்பாட்சேரலாதனின் கண்களில் பட்டு பிழைத்த பகைவர் ஒருவரும் இல்லை என்பதை கீழ்க்காணும்பாடலடிகள் எடுத்துரைக்கின்றன,

**"மாற்றரும் சீற்றத்து மாயிரும் கூற்றம்**
**வலைவிரித்த தன்ன நோக்கலை**
**கடியையால் நெடுந்தகை செருவத்தானே" (பதி. 51; 35-37)**

பனையின் வெள்ளியத் தோட்டியினால் ஆகிய மாலையை அணிந்த மார்பினை உடையவனே! உனது பகைவர் இரத்தத்தால் தன் நிறம் மாறிய போர்க் கண்ணிகளை உற்று நோக்கி எடுக்கப் பருந்தும் ஆராயும். பரிகாரம் இல்லாத கோபத்தை உடையக் கரிய பெரிய எமன் தன் வலையை விரித்தால் அதில் வீழ்ந்தவர் எவ்வாறு பிழைத்தல் அரிதோ அது போன்றே உன் பார்வையில் பட்டவரும் பிழைக்க மாட்டார்கள். போர்க்களத்தில் ஆடுகோட்பாட்சேரலாதனின் பார்வை ஒரு பகைவன் மீது விழுந்தது எனில் அது அப்பகைவன் மீது எமன் வலை வீசி விட்டான் என்றே பொருள்படும் என இம்மன்னனின் வீரத்தின் தன்மையைக் குறிப்பிடுகின்றார் காக்கைப் பாடினியர். ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் சேர நாட்டினை ஆண்டு கொண்டிருந்த கால கட்டத்தில் காட்டுப் பகுதிகளில் வாழ்ந்து வந்த சிலர் இம்மன்னன் நாட்டினுள் புகுந்து அங்குள்ள ஆட்டு மந்தைகளை கைப்பற்றிக் கொண்டு காட்டிற்குள் மறைந்து விட்டனர். அஃதறிந்த சேரலாதன் செய்த செயலை,

**"தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்**
**தொண்டியுள் தந்து கொடுப்பித்து" (பதி. பதி. 6)**

என்று குறிப்பிடுகின்றார் காக்கைப் பாடினியர்.

பெரும்படையுடன் அக்காட்டிற்குள் புகுந்து அக்காட்டு நாட்டாரை வென்று கைப்பற்றிச் சென்ற ஆட்டு மந்தைகளை மீட்டுக் கொணர்ந்து தொண்டி நகருள் அவ்வாட்டு மந்தையர்களுக்கு உரியவர்களிடம் ஒப்படைத்தான் என்ற செய்தியினால் ஆடுகோட்பாட் சேரலாதனின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை காணமுடிகின்றது.

## கொடை

ஈந்து உவக்கும் இன்பமே இன்பம், ஈதல் இசைபட வாழ்வதே வாழ்வு என்னும் வளமார்ந்த உள்ளம் உடையவன் ஆடுகோட்பாட்டுச்சேரலாதன்.

**"ஒள் நுதல் மகளிர் துனித்த கண்ணினும்**
**இரவலர் புன்கண் அஞ்சும்**
**புரவு எதிர் கொள்வனை" (பதி. 57; 13-15)**

என்பதன் வழி ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் தன்னிடம் வரும் இரவலர்களின் வறுமை வாழ்வினை எண்ணி அவன் உள்ளம் துன்புறும் என்பதை அறியமுடிகிறது. தன் மனைவி தனது பிரிவுத் துயரினைப் பொறுத்துக் கொள்ளாது விடும் கண்ணீரைக் காட்டிலும் இரவலர்கள் வறுமைத் துயரால் வருந்திவிடும் கண்ணீரே இம்மன்னது உள்ளத்தை உறுதுயர்க்கு உள்ளாக்கும். தன் மனைவியின் கண்ணீரைக் காணினும் காண்பான். இரவலர் முதலான வறுமையால் வாடுவோர் வருந்தி விடும் கண்ணீரை காணப் பெறாது அவனுள்ளம்.ஆடுகோட்பாட்டுச்சேரலாதன், இரவலர்க்குப் பொருள் அளித்துப் போற்றுவதை நாள்தோறும் மேற்கொள்ள விரும்புவான்.

**"வாரார் ஆயினும் இரவலர் வேண்டித்**
**தேரின் தந்து அவர்க்கு ஆர்பதன் நல்கும்**
**நசைசால் வாய்மொழி இசைசால் தோன்றல்" (பதி. 55; 10-12)**

ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் தன்னிடம் இரவலர் ஒரு நாள் வாராராயினும் இருக்கும் இடத்தைத் தேடிச் சென்று, அவரைத் தேரேற்றி அழைத்து வந்து, வேண்டும் அளவு பெரும் பொருள் தந்து போற்றி அனுப்பும் நல்லுள்ளம்

கொண்டவர் என்று நச்செள்ளையார் மேற்கூறுவதனால் ஆடுகோட்பாட்சேரலாதனின் கொடைக் குணத்தினை உணரமுடிகின்றது.

**செல்வக்கடுங்கோ வாழியாதன்**

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் மகனைப் பெற்றெடுத்த பெறற்கரும் பேருடையான் செல்வக் கடுங்கோ வாழியாதன். இவனின் தாய் தந்தை யார் என்று அறிய முடியவில்லை. ஏனெனில் இவனின் தாய் தந்தை பற்றி இன்னார் என்று அறிவிக்கும் பதிற்றுப்பத்தின் ஏழாம் பத்தின் பதிகம் தெளிவின்றி உள்ளது. "கடுங்கோ வாழியாதன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் இளைய மனைவியோடு உடன் பிறந்தவளும் வேளாவிக் கோமான் பதுமன் என்பவனின் மகளுமாகிய ஒருத்தியை மனைவியாகப் பெற்றான்"[40] என்ற குறிப்பு இவனின் மனைவி பற்றி அறியமுடிகின்றது. இவனைக் கபிலரும் குன்றுகண்பாலியாதனாரும் புகழ்ந்து பாடியுள்ளனர்.

**பண்பு நலன்**

செல்வக் கடுங்கோ வாழியாதன் அரியணை ஏறிய காலத்தில் சேர நாடு அளவில் சுருங்கி இருந்தது.தான் பரப்பளவில் சுருங்கிய நாட்டினை ஆள இம்மன்னனின் உள்ளம் இடம் தரவில்லை.இந்நாடு அனைவருக்கும் பொது என்ற சொல் அவனது காதில் எட்டிக்காய் எனக் கசந்தது. இவனுக்கு உலக அரசர் எல்லாம் தன் ஏவல் கேட்டு நிற்க வேண்டும் எனவும் உலகனைத்தையும் தனது ஒரு குடையின் கீழ் கொண்டு வர வேண்டும் எனவும் விரும்பினான் என்பதை,

**"வையம் காவலர் வழிமொழிந்து ஒழுகப்**
**போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறாஅது**
**ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்**
**கடந்து அடு தானைச் சேரலாதன்" (புறம். 8; 1-5)**

என்னும் பாடலடிகள் தருகின்றன.

---

[40].கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை.

உலகத்தைக் காக்கும் அரசரால் வழிபட்டுப் போற்றப்படுபவன் பெருஞ்செல்வமாகிய இன்பத்தை நுகர விரும்பக் கூடியவன் சோம்பல் என்பதையே அறியாத உள்ளத்தை உடையவன். தனக்கென எதையும் பாதுகாத்துக் கொள்ளாத கொடைத் தன்மையினை பகைவரை வஞ்சிக்காது எதிர்த்து நின்று போரிட்டு வெல்லும் பண்புடையவன் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்கின்றார். மேலும்,

**"பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலையே**
**பணியா உள்ளமொடு அணிவரக் கெழீஇ**
**நட்டோர்க்கு அல்லது கண் அஞ்சலையே**
**வணங்கு சிலை பொருதநின் மணம் கமழ் அகலம்**
**மகளிர்க்கு அல்லது மலர்ப்பு அறியலையே**
**நிலம்திறம் பெயரும் காலை ஆயினும்**
**கிளந்த சொல் நீ பொய்ப்பு அறியலையே" (பதி. 63; 1-7)**

என்று செல்வக்கடுங்கோ வாழியாதன் பண்புகளை இப்பாடலடிகள் பட்டியலிடுகின்றன. அந்தணருக்குப் பணிதல் அல்லாமல் பிறருக்கு கீழ்ப் பணிதலை அறியாதவன். நட்பின் நிலையில் தாழ்வு படாத மனத்தினால் நண்பர்களின் அறிவுரையைக் கேட்டு அஞ்சும் அறநெறி உடையவன். ஆனால் பகைவரைக் கண்டு அஞ்சாத உள்ளம் உடையவன்.வளைந்த வில் உயர்ந்த நினது மணம் பரக்கின்ற மார்பை உன் மகளிர்க்குப் போகத்தின் பொருட்டு மலர்வித்தலை அல்லாமல் பகைவருக்கு மலர்வித்தலை அறியாதவன். உலகமே தனது நிலையில் இருந்து மாறி அழிவது போன்று அழிவு வந்த காலத்திலும் அவ்வழிவினை அகற்றும் பொருட்டு முன்னர் கூறியதொன்றை பின்னர் மறுத்து அவ்வாறு கூறினேன் அல்லேன் எனப் பொய் கூறி மறுக்கும் பண்பினை உடையவன் அல்லன் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்கின்றார் கபிலர்.

**<u>வீரம்</u>**

ஒரே போர்க்களத்தில் சோழனும், பாண்டியனுமாகிய இருபெரும் வேந்தர்களையும் வென்ற சிறப்புடையவனாக விளங்கியவன் செல்வக்கடுங்கோ வாழியாதன்.

**"ஒருமுற்று இருவர் ஓட்டிய ஒள்வாட்**
**செருமிகு தானை வெல்போ ரோய**
**ஆடு பெற்று அழிந்த மள்ளர் மாறி**
**நீகண் டனையேம் என்றனர்" (பதி. 63; 11-14)**

என்பதன் வழி, பிற அரசர்களை வென்று புகழ்பெற்ற பெரு வீரர் எல்லாம் இம்மன்னிடம் போரிட்டுத் தோற்று இனி இம்மன்னனது படையிலே சேர்ந்து இவனது ஆணையின் வழி நிற்போம் என உறுதி உரைத்துப் பணிந்து நின்றனர் என்ற நிலைப்பாட்டை உணரமுடிகின்றது.

**"இடி இசை முரசமொடு ஒன்று மொழிந்து ஒன்னார்**
**வேலுடைக் குழுஉச் சமம் ததைய நூறி**
**கொன்று புறம்பெற்ற பிணம்பயில் அழுவத்து**
**தொன்று திறை தந்தை களிற்றொடு" (பதி. 66; 4-7)**

என்ற வழி, செல்வக்கடுங்கோ இடியினைப் போன்ற ஓசை உடைய முரசத்தோடு வஞ்சினம் கூறி பகைவரது போர் கெடும்படி அவர்களை அழித்துக் கொன்று புறமுதுகுக் காட்டி ஓடச் செய்வான் என்பதை உணரமுடிகின்றது.

**<u>கொடை</u>**

செல்வக்கடுங்கோ வாழியாதன் சிறந்த கொடையாளனாவான். கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனை,

**"அந்தணர் அருங்கலம் ஏற்ப நீர்பட்டு**
**இருஞ்சேறு ஆடிய மணல்மலி முற்றத்து**
**களிறுநிலை முணைஇய தார்அருந் தகைப்பின்**

**புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே**
**எஃகுபடை அறுத்த கொய் சுவற் புரவி**
**அலங்கும் பாண்டில் இழைஅணிந்து ஈம் என" (பதி. 64; 5-10)**

என்று கொடை வள்ளலாகக் காண்கிறார்.

அறத்தையே கூறி விளங்கிய செவ்விய நாவினையும், செய்தற்கரிய யாகங்களைச் செய்து முடித்த பெருமையினையும் வேதத்தை ஓதுதலையும், உடைய அந்தணர்க்கு அருங்கலங்களை அளிக்குங்கால், அப்பொருளோடு வார்த்த நீர் ஓடி அவன் அரண்மனை முற்றம் சேறுபடும். இத்தகைய முற்றம் புலவர், பொருநர், அந்தணர் என்போர் அன்றிப் பிறர் புகுதற்கு அரியத் தன்மையுடையது. பரிசு பெற்ற கூத்தர்கள் வருவர் அவர்களைக் கண்டால் தாமதிக்காமல் கூரிய அம்பு முதலிய ஆயுதங்கள் உடைய படையை வென்றவனுமான செல்வக்கடுங்கோ பிடரி மயிரினையுடைய குதிரைகளையும், தேர்களையும் அவற்றிற்குரிய உரிய இழைகளை அணிந்து கொள்ளுங்கள் என்று அவ்வீதலுக்கு உரியாரை ஏவி கொடுக்கச் செய்வான் என்பது முன் காட்டிய பாடலின் வழி அறியலாகும் அவனின் கொடைத்தன்மையாகும்.

**"ஈத்தது இரங்கான் ஈத்தொறும் மகிழான்**
**ஈத்தொறும் மாவள்ளியன் எனநுவலும் நின்" (பதி, 61; 12-13)**

என்பதிலும் அவனின் கொடைத்தன்மை வெளிப்படுகிறது.தன்னிடம் வந்தோருக்கு எல்லாம் வழங்கும் வள்ளலாகிய செல்வக்கடுங்கோ வாரி வாரி வழங்கி விட்டோமே என வருந்தாதப் பண்புடையவன்.மேலும் பொருள் கொடுக்கக் கொடுக்க தன் புகழ் பெருகுவதைக் கண்டு மகிழ்ந்து மனச்செருக்கு கொல்லாதவன் ஆவான். அவன்,

**"புலவு நாற்றத்த பைந்தடி**
**பூ நாற்றத்த புகைகொளீஇ ஊன்துவை**
**கறிசோறு உண்டு வருந்து தொழில் அல்லது" (புறம். 14; 12-14)**

என்ற நிலையில் கொடைத் தன்மை உடையவன்.

செல்வக்கடுங்கோவைப் புகழ்வோருடைய கைகள் புலால் மனமுடையப் பசிய இறைச்சியையும், பூ மணம் வீசும் புகையை எழுப்பிச் செய்த ஊனையும், துவையலையும், கறியையும், சோற்றையும் உண்பதன்றி வருந்தும் தொழிலாய் பிறிதொன்றும் அறியாது எனக் கூறுவதன் வாயிலாக இவனது கொடைத்தன்மை எத்தகையது என்பதனை கபிலர் உணர வைக்கின்றார்.

தன் கொற்றம், குணம், கொடை ஆகிய பண்புகள் எல்லாம் தோன்றப் பாடிய கபிலரின் பாக்களைக் கேட்டு மனம் மகிழ்ந்தான் செல்வக்கடுங்கோ. தன்னைப் பாடிய புலவருக்குப் பெரியதொரு பரிசளிக்க விரும்பியவன் சிறு பரிசாக நூறாயிரம் பொன் அளித்தான். அதோடு மட்டுமல்லாமல் கபிலரையும் உடன் அழைத்துச் சென்று நன்றா என்னும் குன்றின் மீது ஏறி நின்றான். அங்கிருந்து கண்களுக்குப் புலப்படும் ஊர்கள் அனைத்தையும் புலவருக்கே அளித்தான் என்பதிலிருந்து செல்வக்கடுங்கோவின் கொடைக்குணத்தை அறியமுடிகின்றது.

**<u>பெருஞ்சேரல் இரும்பொறை</u>**

பெருஞ்சேரல் இரும்பொறை சேரருள் ஒரு பிரிவினரான இரும்பொறை என்னும் மரபினைச் சார்ந்தவன். கபிலர் பாடும் பெருமைமிக்க செல்வக் கடுங்கோ வாழியாதன் பெற்றெடுத்த மகனாவான். இவன் தாய், இமயவரம்பன் இளைய மனைவியின் உடன் பிறந்தவளான வேளாவிக் கோமான் பதுமன் எனும் வேளிர் குலத் தலைவன் மகளாவாள் என்பதை,

**"பொய் இல் செல்வக் கடுங்கோவுக்கு**
**வேளாவிக் கோமன் பதுமன் தேவி ஈன்ற மகன்" (பதி. பதி. 8; 1-2)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

பெருஞ்சேரல் இரும்பொறை பல போர்களில் வெற்றி பெற்ற பேராண்மை உடையவன். அவ்வெற்றிகளுள் இவன் தகடூரில் பெற்ற வெற்றியே பெரும் வெற்றியாகக் கருதப்படுகிறது. அதனாலேயே இவன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்றும் அழைக்கப்படுகின்றான்.

பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தில் இவனை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடியவர் அரிசில் கிழார் என்னும் புலவர்.அவருக்கு இவன் அளித்த பரிசில் வரலாற்றுப் புகழ் பெற்றது ஆகும். தானும் தன் மனைவியும் கோயிலாளும் புறம்போந்து நின்று அரண்மனை முழுவதும் கொண்மினென்றும், காணம் ஒன்பது நூறாயிரத்தோடு அரசு கட்டிலையும் இவன் அவருக்குக் கொடுத்தான்.

## பண்பு நலன்

பெருஞ்சேரல் இரும்பொறை பொய் கூறாத நாவினையும், பகைவர்களை அழித்த ஆண்மையையும் உடையவன்.

**"உயிர் போற்றலையே செருவத்தானே**
**கொடை போற்றலையே இரவலர் நடுவண்**
**பெரியோர்ப் பேணி சிறியோரை அளித்தி**
**நின்வயிற் பிரிந்த நல்இசை கனவினும்**
**பிறர்நசை அறியாவயங்கு செந்நாவின்**
**படியோர்த் தேய்த்த ஆண்மை"      (பதி. 79; 1-6)**

என்ற வழி போர்க்களத்தில் உயிரை ஒரு பொருளாக எண்ணமாட்டான் பெருஞ்சேரல் இரும்பொறை. அவன் இரப்பாராகிய பரிசிலர் தம்மைச் சூழ்ந்து நிற்கும் பொழுதோ, அவர்களுக்கு பொருட்களைக் கொடுக்கும் போது பொருட்களைப் பெரிதாக எண்ணிப் பாதுகாக்க மாட்டான். பெரியோர்களைப் பாதுகாத்தும், சிறியோர்களுக்கும் அருள்புரியக் கூடியவனாகவும், திகழ்வதினையே இம்மன்னன் பெரிதும் விரும்புவான் என்று அரிசில்கிழார் பெருஞ்சேரல் இரும்பொறையின் பண்பு நலன் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

## புலவரைப் போற்றும் பண்பு

பெருஞ்சேரல் இரும்பொறை புலவர்களை போற்றும் புரவலனாய் விளங்கினான் என்பதை மோசிகீரனார்,

**“நுரை முகந்தன்ன மென் பூஞ்சேக்கை**
**அறியாது ஏறிய என்னைத் தெறுவர**
**இரு பாற்படுக்கும் நின்வாள் வாய் ஒழித்ததை**
**அதூஉம் சாலும் நல்தமிழ் முழுது அறிதல்**
**அதனொடும் அமையாது அணுக வந்து” (புறம். 50; 7-11)**

என்றுரைக்கிறார்.

எண்ணெயின் நுரையினை முகந்து பரப்பியது போன்று மென்மையான பூக்களை உடையக் கட்டிலில், அது முரசுக்கட்டில் என அறியாது ஏறிக் கிடந்துறங்கினேன். ஆயினும் சினத்துடன் இரு கூறாக்கும் உன் வாளின் வாயால் என்னைக் கொல்லாது விடுத்தாய். நீ நல்ல தமிழின் இனிமையை முழுதும் உணர்ந்தவன் ஆகையினாலேயே அச்செயல் உனக்கே உரியது. அது மட்டுமன்று, என்னருகே வந்து உன்னுடைய வலிமையான முழவு போன்ற தோளை உயர்த்திக் குளிர்ச்சி பொருந்திய கவரியினை எனக்காக வீசவும் செய்தாய் என்று குறிப்பிடுகின்றார்.

**கொடை**

பெருஞ்சேரல் இரும்பொறையிடம் கொடைக்குணம் குடி கொண்டிருந்தது. இதனை,

**“புண் ஒரீஇப்**
**பெருங்கைத் தொழுதியின் வன்துயர் கழிப்பி**
**இரந்தோர் வாழநல்கி இரப்போர்க்கு**
**ஈதல் தண்டா மாசிதறு இருக்கை**
**கண்டனென் செல்கு வந்தனென்” (பதி.76; 5-9)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. பெருஞ்சேரல் இரும்பொறை தன்பால் வந்து பொருள் வேண்டி இரந்து நிற்கும் பரிசிலர்க்குப் போரில் கைப்பற்றிய யானைகளை, அவைகளுக்கு போரில் ஏற்பட்ட புண்களுக்கு மருந்திட்டுப் போக்கிப் பரிசாக பரிசிலர்க்கு அளிப்பான். மேலும், வந்து இரப்பவர்களை

எதிர்நோக்கிக் காத்திருந்து, வேண்டுமளவு கொடுப்பதற்காகக் குதிரைகள் எண்ணற்றனவற்றை வைத்திருப்பான் பெருஞ்சேரல் இரும்பொறை.

கொடைத் தொழிலில் இவர்க்கு இது கொடுக்கலாம், இவர்க்கு இதை கொடுக்கக் கூடாது என எண்ணிப்பார்க்கும் அறிவின்றி எவர்க்கும் எதையும் கொடுக்கும் கொடைத் தொழில் உடையவர்களை நோக்கி ஆராயும் போது அத்தகைய பண்பு உடையவர்களுக்கு உவமையாக பெருஞ்சேரல் இரும்பொறையினை கூறமுடிகின்றது.

**“உரவோர் எண்ணினும் மடவோர் எண்ணினும்**
**பிறர்க்கு நீவாயின் அல்லது நினக்குப்**
**பிறர் உவமம் ஆகா ஒருபெரு வேந்தே” (பதி. 73; 1-3)**

இவனுக்கு நிகராகக் கூறக்கூடிய தன்மை உடையவர் ஒருவரும் இலர் எனக்கூறி, பெருஞ்சேரல் இரும்பொறையின் அறிவும், கொடையும் ஒருங்கு தோன்ற இப்பாடலடிகளில் புகழ்கின்றார் அரிசில்கிழார். இவ்வாறு புகழ்வதனால் பெருஞ்சேரல் இரும்பொறையின் கொடைக்குணத்தினை உணர முடிகின்றது.

__வீரம்__

அதியமான் நெடுமான் அஞ்சி மீது பெருஞ்சேரல் இரும்பொறை படையெடுத்துச் சென்று அவ்வூர்க்கோட்டையை முற்றுகையிட்டு அழிக்கலாயினான். இதனை,

**“பல்வேல் தானை அதிகமானோடு**
**இருபெரு வேந்தரையும் உடனிலை வென்று**
**முரசும் குடையும் கலனும் கொண்டு**
**உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்**
**துகள்தீர் மகளிர் இரங்கத் துப்பு அறுத்துத்**
**தகடூர் எறிந்து நொச்சி தந்து எய்திய**
**அருந்திறல் ஒள் இசைப் பெருஞ்சேரல் இரும்பொறை” (பதி.பதி. 8;4-10)**

என்ற பாடலடிகள் வழி உணரமுடிகின்றது. பெருஞ்சேரல் இரும்பொறை பல வேற்படைகளை உடைய அதியமான் நெடுமான் அஞ்சியோடு சோழ பாண்டியர்களாகிய இரு பெரு வேந்தரையும் ஒரு சேர வென்றான். அவ்வாறு வென்றதனால் அவ்வரசர்களின் முரசினையும் குடையினையும் முடியினையும் கைப்பற்றி புகழ்மிக்க சிறப்பினை உடையப் போர்க்களத்தில் களவேள்வி செய்தான். அதியமானின் வலிமையை ஒழித்து அவனது தகடூரை அழித்து அதன் மதிலையும் கைப்பற்றி தனதாக்கிக் கொண்டான்.

பெருஞ்சேரல் இரும்பொறை மீது பகை கொண்ட பகைவர்கள் அவனது போர் வலிமையை ஆராயாமல் அவன் மீது படையெடுக்க துணிந்தால்,

**"இகல் பெருமையின் படைகோள் அஞ்சார்**
**சூழாது துணிதல் அல்லது வறிது உடன்**
**காவல் எதிரார் கறுத்தோர் நாடு" (பதி.72; 1-3)**

என்ற நிலையில் அவதியுறுவர்.

அப்பகைவர் தம்முள் பலர் ஒன்று கூடினும் உன் வீரத்தின் முன்பு தம் நாட்டினைச் சிறிதும் காத்துக் கொள்ள மாட்டார்கள். ஏனெனில் பெருஞ்சேரல் இரும்பொறை பகைவர் நாட்டின் மீது போர் புரிந்தாலே அது அவனது நாடாகிவிடும் என்பது உறுதி.

இதற்குச் சான்று அவன் கழுவுள் என்பவனைப் தனக்குக் கீழ் பணியவைத்தது ஆகும். கழுவுள் என்பவன் ஓர் ஆயர்குலத் தலைவன். அவன் பேரரசரோடு பகை கொண்டு போர்புரியும் இயல்பினை உடையவன். கழுவுளின் ஆணவத்தினை அறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை,

**"குண்டுகண் அகழிய குறுந்தாள் ஞாயில்**
**ஆர் எயில் தோட்டி வௌவினை ஏறொடு**
**கன்றுடை ஆயம் தரீஇப் புகல் சிறந்து**
**புலவுவில் இளையற் அங்கை விடுப்ப**
**மத்துக்கயிறு ஆடா வைகற்பொழுது நினையூஉ**
**ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்க" (பதி.71; 12-17)**

என்று தன் படைவீரரைக் கொண்டு அவனைப் பணியவைக்க விரும்பினான். பெருஞ்சேரல் இரும்பொறையின் படை கழுவுளின் அரணைத் தாக்கி அவன் நாட்டு ஆயர்கள் பலருக்கும் உரிய ஆநிரைகள் பலவற்றைக் கைப்பற்றிக் கொண்டான். கழுவுள் அப்படையை எதிர்த்து நிற்க முடியாமல் அஞ்சி ஓடி ஒளிந்து கொண்டான் என்றும் கழுவுள் தனது நாட்டின் ஆநிரைகளை மீட்க பெருஞ்சேரல் இரும்பொறையின் அடியினை சரண் அடைந்த பின்பே அவன் நாட்டு ஆநிரைகளை விடுவித்தான் என அரிசில் கிழார் குறிப்பிடுவதனால் பெருஞ்சேரல் இரும்பொறையின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை அறியலாகின்றது.

## இளஞ்சேரல் இரும்பொறை

பதிற்றுப்பத்தின் ஒன்பதாவது பத்தின் பாட்டுடைத்தலைவனாக இளஞ்சேரல் இரும்பொறையைப் பாடியவர் பெருஞ்குன்றூர்கிழார் ஆவார். இவன் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் மகனான குட்டுவன் இரும்பொறைக்கும், வேண்மாள் அந்துவஞ்செள்ளைக்கும் பிறந்தவன் ஆவான். இதனை,

**“குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழாஅன்**
**வேண்மாள் அந்துவஞ்செள்ளை ஈன்ற மகன்”** **(பதி.பதி. 9; 1-2)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

இவனுக்கு பாண்டியர், சோழர், குறுநிலமன்னர் எனப் பல முனைகளில் எதிர்ப்புகள் இருந்தபோதும் அவற்றைச் சமாளித்து பதினாறு ஆண்டுகள் ஆட்சி புரிந்துள்ளான்.

## கொடை

இளஞ்சேரல் இரும்பொறை தன் அரண்மனை வாயில் வந்து வாழ்த்துரைத்து நிற்கும் புலவர் பெருமக்களுக்குப் பொருள் அளித்துப் போற்றும் பண்பினன். இதனை,

**"மாற்று அருந் தெய்வத்துக் கூட்டம் முன்னிய**
**புனல் மலி பேரியாறு இழிதந்தாங்கு**
**வருநர் வரையாச் செழும் பல் தாரம்**
**கொளக் கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப" (பதி.88; 24-27)**

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. துர்க்கையென்னும் தெய்வம் வாழ்கின்ற அயிரை மலையில் தோன்றிய நீர்மிக்க பேரியாறு பூமியில் இறங்கினாற் போல, இளஞ்சேரல் இரும்பொறையிடம் இரத்தற் பொருட்டு வருவோர்க்கு அவன் எல்லை இல்லாது கொடுப்பான்.

பல பண்டங்கள் நிறைந்த இரும்பொறையின் அரண்மனையில் பொருட்கள் கொடுக்க கொடுக்கக் குறையாமல் இடந்தோறும் மிகுந்து நிற்கின்றன. நல்ல புகழை நிலைநாட்டும் பொருட்டு பரந்து விரிந்த இடத்தை உடைய உலகத்தில் பொருள் இல்லாதவர்களின் துன்பத்தை அடியோடு நீக்கும்படி பொருளைக் கொடுப்பன் இரும்பொறை ஆகிய செய்திகளைப் பின்வரும் பாடல் வரிகள் காட்டுகின்றன.

**"நல்இசை நிலைஇய நனந்தலை உலகத்து**
**இல்லோர் புன்கண் தீர நல்கும்**
**நாடல் சான்ற நயனுடைய நெஞ்சின்**
**பாடுநர் புரவலன் ஆடு நடை அண்ணல்" (பதி. 86; 5-8)**

தருமத்தையே எண்ணி மிகுந்த அன்புடைய மனத்தொடு தம்மை நாடிவரும் புவலர், பாணர் ஆகியோரைப் பாதுகாத்தலில் வல்லவனாகத் திகழ்கின்றான் இளஞ்சேரல் இரும்பொறை என்று பெருங்குன்றூர் கிழார் கூறுகின்ற முறையினால் இளஞ்சேரலின் கொடைக் குணத்தை அறிய முடிகின்றது.

**வீரம்**

இளஞ்சேரல் இரும்பொறையின் போர் வலிமையை அறியாது எதிர்த்துப் போர் புரிந்தமையால் பகைவர்கள் தான் தோற்றதோடு தன் வலிமையையும் இழப்பார்கள். இதனை அறிந்து அஞ்சித் தூங்காத பகையரசர் தம்

அரண்களைப் பாதுகாப்பானதாக எண்ணித் தூங்கினாலும், அவை உனது பெருந்தோள்களுக்கு விருந்தாக அமையும். இதனை,

**"முனைகைவிட்டு முன்னிலைச் செல்லாது**
**தூஎதிர்த்து பெறாஅத்தா இல்மள்ளரொடு**
**தொல்மருங்கு அறுத்தல் அஞ்சி அரண் கொண்டு**
**துஞ்சா வேந்தரும் துஞ்சுக" (பதி. 81; 33-36)**

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன.

மாறாக அப்பகைவர் நின்னொடு மாறுபட்டுப் போர்செய்யப் புறப்பட்டால்,

**"வார்முகில் முழக்கின் மழகளிறு மிகீஇதன்**
**கால்முளை மூங்கில் கவர் கிளை போல**
**உய்தல் யாவது" (பதி.84; 11-13)**

என்றபடி நீண்ட மேகத்தின் முழக்கத்தைப் போன்ற இளைய ஆண் யானையின் காலில் மிதிபட்டு முளைத்த மூங்கிலின் கிளைபோல அழிவதல்லாமல் உயிர் தப்புதல் அரிது என்கிறார்.

பகைவர் அஞ்சத்தக்கப் படையோடு புறப்பட்ட இளஞ்சேரல் இரும்பொறை,

**"வெருவரு தானையொடு வெய்துறச் செய்து சென்று**
**இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ**
**அருமிளைக் கல்லகத்து ஐந்துஎயில் எறிந்து**
**பொத்திலாண்ட பெருஞ் சோழனையும்**
**வித்தை ஆண்ட இளம் பழையன் மாறனையும்**
**வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று" (பதி. பதி. 9; 3-8)**

என்ற நிலையில் போரிட்டான்.

சோழனும் பாண்டியனுமாகிய இருபெரு வேந்தரும் விச்சி என்னும் குறுநில மன்னனும் இளஞ்சேரல் இரும்பொறையுடன் போரிட்டனர். இப்போரில் இளஞ்சேரல் இரும்பொறை பகைவர்களின் காவற்காட்டை உடைய மலையிடத்து அமைந்த ஐந்து மதில்களை அழித்து அவர்களை வென்றான். இவன் பொத்தி என்னும் புலவரை ஆதரித்த இளம்பழையன் மாறன் என்னும் பாண்டியனையும், அவர்களிடம் தான் கூறிய சபதம் நிறைவேறும்படி வென்றான் என்பதனால் இளஞ்சேரல் இரும்பொறையின் வீரம் குறித்த ஆளுமைப் பண்பினைக் காணமுடிகின்றது.

**ஒள்வாட்கோப்பெருஞ்சேரல் இரும்பொறை**

கருவூர் ஏறிய கோப்பெருஞ்சேரல் இரும்பொறையும், சேரருள் இரும்பொறை என்ற மரபில் வந்தவன் ஆவான். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்ற மன்னனும் ஒருவன் இருத்தலின் அவனின் வேறு இவன் என அறிதற்குக் கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் என இவன் அழைக்கப்படுகின்றான். இரும்பொறை மரபினர் தொண்டி, மாந்தை போன்ற ஊர்களால் சிறப்புற்ற கடற்கரை நாட்டினை ஆண்டு வந்தனர். இவனும் தனக்குரிய நாட்டோடு அமையானாய்க் கொங்கு நாட்டில் உள்ளதும், சேரருள் மற்றொரு கிளையினர்க்கு உரியதுமாகிய கருவூரையும் கைப்பற்றி, அந்நகரத்தின் கண்ணே அரசு கட்டில் ஏறி, முடி சூடிக்கொண்ட சிறப்புடையோனாக திகழ்ந்தான்.

**அறிவுரை கேட்கும் பண்பு**

ஒள்வாட்கோப்பெருஞ் சேரல் இரும்பொறையிடம் சென்று அவன் அளித்த பரிசில் பொருட்களைக் கண்டு வியந்த நரிவெரூஉத் தலையார் தனக்கு அளித்தது போன்று பிறருக்கும் பரிசில் நல்க வேண்டும் என்பதற்காக,

**“நீஓர் ஆகலின் நின் ஒன்று மொழிவல்**
**அருளும் அன்பும் நீக்கி நீங்கா**
**நிரயம் கொள்பவரோடு ஒன்றாது காவல்**
**குழவி கொள்பவரின் ஓம்புமதி” (புறம். 5; 4-7)**

என்று பாடினார்.

உன் பகைவர் அணுகுவதற்கு அரிதான பெருஞ்செல்வத்தை உடையவனே, உனக்கு நான் ஒரு செய்தி கூறுவேன் கேட்டருள்வாயாக. அருளையும் அன்பையும் நீக்கி பாவஞ்செய்தாரை நீங்காத நரகத்தை தமக்கு உரிய இடமாகக் கொள்பவரோடு சேராது, உன்னால் காக்கப்படும் நாட்டையும், நாட்டு மக்களை குழந்தைகளை வளர்ப்போர் அக்குழந்தைகளைப் பாதுகாப்பது போன்று பாதுகாப்பாயாக என்று நரிவெரூஉத் தலையார் கூறுவதனால் ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையின் அறிவுரை கேட்கும் பண்பினை அறியலாகின்றது.

**பாலைபாடிய பெருங்கடுங்கோ**

பெருஞ்கடுங்கோ முடிவேந்தர் மூவருள் ஒருவனாக விளங்கியது மட்டுமின்றி நல்லிசைச் செய்யுள் பாடும் சான்றோர் கூட்டத்திலும் ஒருவனாகவும் திகழ்கின்றான். இவன் பாடிய பாட்டுகளுள் பல பாலைத் திணைப் பாடல்களாக உள்ளன. அது மட்டும் இன்றி கலித்தொகையில் பாலைக்கலி பாடியமையாலும் இவனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்றும் அழைக்கின்றனர். இவர் பாடிய பாடல்களனைத்தும் இலக்கியவளமும் அறவுணர்வும், நல்லிசை மாண்பும் உடையவனாகத் திகழ்கின்றன.

**வீரம்**

பாலைப் பாடிய பெருங்கடுங்கோ பகைவர் வெல்வதற்கு அரியது எனப் பெருமை பேசும் அரசர்களுடைய அரண்கள் பலவற்றை அழிக்கக் கூடியவன் என்பதை,

**“விண்பொரு புகழ் விறல் வஞ்சி**
**பாடல்சான்ற விறல்வேந்தனும்மே**
**வெப்பு உடைய அரண்கடந்து”** **(புறம். 11; 6-8)**

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

பாலை பாடிய பெருங்கடுங்கோ வானை முட்டும் அளவிற்குப் புகழினையும், வெற்றியையும் உடையக் கருவூரின் கண் இருந்து அரசாட்சி புரிந்தவன். இவன் தன்னை எதிர்த்து போரிட்டோரின் வெம்மையான அரண்களை அழித்து, தம்மை வலிமையுடன் எதிர்த்து நின்றவர்கள் புறங்காட்டி ஓடச் செய்தவன் என்று பேய்மகள் இளவெயினி கூறுவதன் மூலம் பெருங்கடுக்கோவின் வீரம் குறித்த சிறப்பு நன்கு விளங்குகின்றது.

## கொடை

குரலில் (இசையளவு) வந்து பொருந்தும்படி பாடவல்ல பாணன் பெருங்கடுக்கோவிடம் சென்றதால்,

**"ஒள்அழல் புரிந்த தாமரை**
**வெள்ளி நாரால் பூப்பெற்றிசினே" (புறம். 11; 17-18)**

ஒளி பொருந்திய நெருப்பினால் உண்டான பொன்னாலாகிய செயற்கையான இதழ்களைக் கொண்ட தாமரைப்பூவை வெள்ளி நாரில் தொடுக்கப் பெற்ற மாலையைப் பெற்றான் என்பதன் வாயிலாக பெருங்கடுங்கோவின் கொடைத்தன்மை தொடர்பான ஆளுமைப் பண்பினை அறியமுடிகிறது.

## கவித்திறம்

பெருங்கடுக்கோ குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து திணைகளுள் பாலைத் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களை நன்கு உணர்ந்து, உயர்ந்தோர் போற்றும்படி பாடியுள்ள சிறப்பால், பாலைப் பாடிய பெருங்கடுங்கோ என்று போற்றப்பெறுகிறான். ஒரு பேரரசர் மரபில் வந்தாலும், தாமும் ஒரு அரசராய் நாடாண்டு நலம்பல கண்டதாலும், அக்கால அரசர்களின் இயல்புகளை அறிந்து கொண்டதாலும் தாம் அறிந்த அரசியல் நுட்பங்களை தாம் பாடிய பாடல்களின் இடையிடையே ஏற்ற இடந்தேடி படைத்துச் சென்றுள்ளதை காணமுடிகின்றது.

கொடுங்கோல் ஆட்சி புரியும் மன்னர் நாட்டில் வாழ்வதை விடப், புலி வாழும் காட்டில் வாழ்வது மேல் என மக்கள் எண்ணி விடக் கூடாது என்பதனை,

**“ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோல்**
**பாழ்பட்ட முகத்தோடு பைதல் கொண்டு அமைவாளோ” (கலி. 5; 12-13)**

என்ற பாடலடிகள் வழி உணரமுடிகின்றது.

ஒரு நாட்டை ஆளுகின்ற அரசன், தாம் பின்னர்க் கலக்கம் அடையும்படி அவரால் அலைத்தலைப் பெற்ற நாடு பாழ்பட்டாற்போல, தலைவனைப் பிரிந்த தலைவி அழகு கெட்ட முகத்தோடு துன்பத்தைத் தாங்கி ஆற்றியிருப்பாளோ என்ற செய்தியுடன் ஒப்பிடுகின்றான். இதனை சூரியன் கடுகிக் காய்கின்ற கதிர்களைச் செலுத்திச் சுடுதல் போல,

**“நடுவு இகந்து ஒரீஇ நயன் இல்லான் வினைவாங்கக்**
**கொடிது ஓர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு**
**கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின்” (கலி. 8; 1-3)**

என்ற வழி உணரமுடிகின்றது.

ஒரு நாட்டு ஆட்சியின் தன்மை அந்நாட்டின் அரசனைக் காட்டிலும் அந்நாட்டு அமைச்சனைப் பொறுத்து அமையும், அமைச்சன் நல்லனாயின் அரசனும் நல்லவனாகத் திகழ்வான். ஆட்சியும் நன்றாக அமையும், அவன் தீயவன் ஆயின் நல்லரசும் தீதாம். தான் எண்ணிய காரியத்தைப் புலப்படுத்துவதால் அரசனது செங்கோலானது கொடுந்தொழிலைச் செய்வதால் நாட்டுமக்களுக்குக் கொடுங்கோல் போலச் சுடும் என்று கூறுகின்றதால் பெருங்கடுக்கோவின் கவித்திறம் தொடர்பான ஆளுமைப் பண்பினைக் காணமுடிகின்றது.

**<u>கோக்கோதை மார்பன்</u>**

சேரமான் கோக்கோதை மார்பன் தொண்டியென்னும் நகரை தலைநகராகக் கொண்டு ஆண்ட சேரவேந்தன் ஆவான். இம்மன்னன் பொய்கையார் முதலிய புலவர் பெருமக்களை ஆதரித்து அவர்களால் பாடப்பெற்ற சிறப்புடையவன். கோதைமார்பன் பாண்டியரோடு பகை கொண்டு வாழ்ந்தான் என்பதை,

**"நெடுந்தேர்**
**இழையணி யானைப் பழையன் மாறன்**
**மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்**
**வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த**
**கிள்ளி வளவன் நல் அமர் சாஅய்க்**
**கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி**
**ஏதில் மன்னர் ஊர்கொளக்**
**கோதை மார்பன் உவகையிற் பெரிதே" (அகம், 346; 18-25)**

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

கிள்ளி வளவன் என்னும் சோழ அரசன் வெள்ளம் போன்ற பெரும்படையுடன் பாண்டியர்க்குரிய கூடல் நகரை அடைந்து அங்கு வாழ்ந்திருந்த பாண்டியர் படைத் தலைவனான பழையனை வென்று, களிறு புரவி முதலியவற்றைக் கணக்கில் அடங்காது கைப்பற்றிக் கொண்டான் எனக் கேட்டு பெரிதும் மகிழ்ந்தான் கோக்கோதை மார்பன் என்று நக்கீரர் அகநானூற்றுப் பாடலில் இவன் பற்றிய குறிப்பினைப் பதிவு செய்கிறார்.

**<u>ஆட்சிச் சிறப்பு</u>**

கோக்கோதை மார்பன் ஆட்சிபுரிந்த நாடு மலையும் மலை சார்ந்த இடங்களைப் பெற்ற குறிஞ்சி நிலமும், வயலும் வயல் சார்ந்த இடங்களைப் பெற்று மருதநிலமும், கடலும் கடல்சார்ந்த இடங்களைப் பெற்று விளங்கும், நெய்தல் நிலமும் உடையதாக விளங்கும் பெருநாடாகும். கோக்கோதை

மார்பனைப் பாராட்டிய புலவர்களுள் ஒருவரான பொய்கையார், இம்மன்னன் நாடு பல்வேறு வளங்களைப் பெற்று விளங்கும் பெருநாடு என்பதை அறிந்து,

**"நாடன் என்கோ? ஊரன் என்கோ?**
**பாடு இமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ?**
**யாங்கனம் மொழிகோ? ஓங்குவாட் கோதையைப்**
**புனவர் தட்டை புடைப்பின் அயலது**
**இறங்கு கதிர் அலமரு கழனியும்**
**பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள் ஒருங்கு எழுமே" (புறம். 49; 1-6)**

என்று பாடுகிறார்.

கோக்கோதை மார்பனின் நாட்டில் உள்ள குறிஞ்சி நில குறமகளிர் தனது திணைப்புணத்தில் உள்ள திணைகளை உண்ண வரும் பறவைகளை கிளிகடி என்ற கருவி மூலம் ஒலியெழுப்பி விரட்டுகின்றாள். இவ்வொலினைக் கேட்டு முற்றிலும் கதிர்கள் நிறைந்த கழனியில் இருந்த பறவைகளும், கடலைச் சார்ந்த உப்பங்கழிகளில் வாழ்ந்த பறவைகளும் அஞ்சி ஓடுகின்ற காரணத்தினால், கோக்கோதை மார்பனை குறிஞ்சி நிலத் தலைவனைக் குறிக்கும் நாடன் என்று பெயரிட்டு அழைப்பேனா? மருதநிலத் தலைவனைக் குறிக்கும் ஊரன் என்ற பெயரிட்டு அழைப்பேனா? என்று பாராட்டுவதன் மூலம் கோக்கோதை மார்பன் என்பான் தன் நாட்டில் அனைத்து வளங்களும் திகழ ஆட்சி புரிந்துள்ளான் என்ற முறைமையால் இம்மன்னனது நிர்வாகம் தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

**குடக்கோச் சேரல் இரும்பொறை**

குடநாட்டுத் தலைவனாய் சேரநாடு முழுதும் தனக்குரியதாகப் பெற்று சிறப்புற்றிருந்த சேர வேந்தர்களுள் குடக்கோச் சேரல் இரும்பொறையும் ஒருவன் ஆவான். இவனது தம்பி குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை எனப்பட்டான். இம்மன்னன் முடியுடை வேந்தனாய், செல்வக் குறைபாடு இல்லாதவனாய், புலவரைப் போற்றும் வேந்தரின் வழித்தோன்றலாய்

விளங்கினான்.இவனைப் பற்றி புறநானூற்றில் பாடாண்திணையில் இரண்டு பாடல்களில் பெருங்குன்றூர்கிழார் பாடியுள்ளார்.

**"………… நிற் கறுத்தோர்**

**அருங்கடி முனை அரண் போல" (புறம். 210; 13-14)**

என்ற பாடல் வரிகளில் குடக்கோச் சேரல் இரும்பொறை தன்னிடம் பகைகொண்ட பகைவர்கள் அணுகமுடியாத அளவிற்குக் காவலை உடைய அரணைப் போன்றவன் என்று கூறுவதனால் இம்மன்னன் பகைவர்களை தன் நாட்டின் எல்லைக்குள் நுழைய அனுமதிக்காத வீரத்தின் தன்மை விளங்குகின்றது.

**<u>திருக்குட்டுவன்</u>**

திருக்குட்டுவன் சேரநாட்டின் ஒரு பகுதியாகிய குட்டநாட்டு அரசர் குடியில் தோன்றியவன். குட்டநாட்டு வேந்தரைக் குட்டுவர் என்று அழைப்பது வழக்கமாக இருந்துள்ளது. சேரவேந்தர் பலர் செங்குட்டுவன், வேல்கெழுகுட்டுவன், சேரமான் குட்டுவன், கோதை எனவும் அழைக்கப்படுகின்றனர். ஆகையால் இத்திருக்குட்டுவன் தன் குடிமுன்னோர் பெயரையே தனக்குச் சிறப்புப் பெயராக கொண்டுள்ளான் என்பதை உணரமுடிகின்றது. இவனைப் பாடிய கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் என்பவர்,

**"வள்ளியன் ஆதல் வையகம் புகழினும்" (புறம். 394; 4)**

என்று இவனை அடையாளப் படுத்துகிறார்.

பெருங்கொடைப் பண்பை உடையவன் என வையகம் புகழ்வதினால், இவன் தன்னிடம் வந்த பரிசிலர்க்கு அவர் வேண்டும் அளவிற்கு அதிகமாகவே புரந்து புலவர்களைப் பாதுகாத்தள்ளான் என்பதன் மூலம் இவனது கொடைப் பண்பினை வெளியிடுவதன் வழியாகவும்,

**"வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்" (புறம். 394: 3)**

என்றவழி குறி தப்பாத வாளை ஏந்தும் திருக்குட்டுவன் எனக் கூறுவதால் போர்க்களத்தில் பகைவர்கள் இவன் வாளின் குறியில் இருந்து தப்புதல் அரிதான செயல் எனக் கொள்வதன் மூலமும் இம்மன்னனின் வீரத்தினை அறிந்து கொள்ள இயலுகின்றது.

**<u>வஞ்சன்</u>**

சேரமன்னர் வழி வந்தவர்களுள் வஞ்சனும் ஒருவன் ஆவான். இவன் வள்ளன்மையிற் சிறந்து விளங்கியவன். 'பாயல்' என்னும் மலைப்பகுதியின் தலைவன். இவனைப் பாடிய திருத்தாமனார் என்னும் புலவர் காட்டும் 'வாய்மொழி வஞ்சன்' என்னும் சொற்கள் இவன் தன் சொற்களைப் பேணுகின்ற செயலில் வஞ்சங் கொண்டவனாக (தளராத உறுதி கொண்டவனாக) விளங்கியவன் என்பதைக் காட்டுகின்றது. இவன் இயற் பெயர் என்ன என்பது தெரியவில்லை.

**<u>இரு வேறு பண்புகள்</u>**

சேரமான் வஞ்சனிடம் இரு வேறு பண்புகள் நிறைந்துள்ளன என்பதை, திருத்தாமனார்,

**"நகைவர் குறுகின் அல்லது பகைவர்க்குப்**
**புலியினம் மடிந்த கல் அளைபோல" (புறம். 398: 9-10)**

என்று குறிக்கிறார்.

இச்சேரமானை நண்பர்களே நெருங்குவர் அன்றி, பகைவர்களுக்கு இவன் புலியினம் கிடந்து உறங்கும் கல்முழைஞ்சு போல நெருங்க முடியாதவன் என்பதன் மூலம் சேரமான் வஞ்சன் என்பவன் தனது நண்பர்களிடம் நெருக்கமாகவும் அன்பாகவும் பழகக் கூடியவன் என்பதும், மேலும் பகைவர்களுக்கு அவன் புலியினம் போன்று துன்பம் அளிக்கக் கூடியவன்

என்று குறிப்பிடுவதால் இம்மன்னன் புலிகள் ஒன்று திரண்ட அளவிற்கு வீரம் மிக்கவன் என்பது அறியலாகின்றது.

**<u>கொடை</u>**

வஞ்சன் கொடையும் கொற்றமும் ஒருங்கே உடையவன். தன் மூதூர் மன்றத்தே பரிசிலரை வரவேற்க அமைத்த நல்ல மனம் நாறும், பந்தர்க்கீழ் இருந்து வருவார் தம் வரிசையறிந்து வழங்கும் வள்ளியோன் என்பதை திருத்தாமனார்,

**“துரும்பு படு சிதாஅர் நீக்கி தன்அரைப்**
**புகைவிரிந்து அன்ன பொங்குதுகில் உடீஇ” (புறம். 398; 19-20)**

என்று பாடுகிறார்.

என் இடையில் சிதைந்து நார்நாராய்க் கிழிந்திருந்த உடையை நீக்கி தன் இடையில் உடுத்தியிருந்த புகை விரித்தாற் போன்ற உயர்ந்த உடையைத் தந்து என்னை உடுத்தச் செய்தான். தான் உண்ணும் உண்கலத்தில் இருந்த துண்டித்த மானிறைச்சி ஆகிய வறுத்த பொரிக்கறிகளையும், கொக்கின் நகம் போன்ற முகம் முறியாத நெல்லரிசிச் சோற்றையும் என் சுற்றத்தார் வயிறு ஆர உண்ணும்படி செய்தவன் எனக் கூறுவதன் மூலம், சேரமான் வஞ்சன் தனது அவைக்கு வந்த புலவர்களுக்கு நல்ல உயரிய ஆடையினையும், உண்ண உணவினையும் அளித்து அவர்களைக் காத்தான் என்பதிலிருந்து அவனது கொடைத் தன்மையினை அறிந்து கொள்ளமுடிகின்றது.

சேர மன்னர்கள் உதியஞ்சேரலாதன், இமயவரம்பன் நெடுஞ்சேரலான், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை, ஒள்வாட்கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, பாலைபாடிய பெருங்கடுங்கோ, கோக்கோதை மார்பன், குடக்கோச் சேரல் இரும்பொறை, திருக்குட்டுவன், வஞ்சன் ஆகியோரது பண்பு நலன்கள், ஆட்சிச் சிறப்பு,

பரிசிலருக்குப் பொருள் வழங்குதல், பெருஞ்சோறு அளித்தல், தென்புலக் கடன் ஆற்றுதல், கொடைக்குணம், பொய்கூறாப்பண்பு, அறிவுரை கேட்கும் பண்பு, நட்புணர்வு, பக்தி, வீரம் ஆகியவற்றால் ஆளுமைப் பண்பினை புலவர்கள் வெளிப்படுத்துகின்றனர்.

**சோழ வேந்தர்கள்**

சங்க இலக்கியங்களை ஆராய்ந்து பார்த்தால், சோழ அரசர்களைப் பற்றிய பரம்பரையினை, அவர்களின் ஆட்சி முறைச் சிறப்பினை அறிந்து கொள்ள முடிகின்றது. சோழ மன்னர் பரம்பரையிலேயே ஒன்பது தாயாதிகள் இருந்துள்ளனர். தாயாதிகள் முடி மன்னனாகிய சோழ அரசனுக்குக் கீழ் அடங்கிச் சிற்சில நாடுகளை அரசாண்டு வந்துள்ளனர். ஆனால், அடிக்கடி தாயாதிகள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு இருந்தார்கள். மேலும், ஒன்பதுதாயாதிகளும், சமயம் நேர்ந்த போதெல்லாம் முடியரசனுடன் போர் செய்து, உள்நாட்டுக் கலகத்தினை ஏற்படுத்தியுள்ளனர். இதனை, கரிகாற்சோழன் அரசு கட்டில் ஏறியபோது ஒன்பதுதாயாதிகளும், அவனுக்கு எதிராகக் கலகம் செய்து போரிட்டார்கள் எனும் குறிப்பினால் அறியமுடிகின்றது. கரிகாற்சோழன், ஒன்பது தாயாதிகளையும் போரில் வென்று அடக்கிய பின்னர்தான் முடிசூடியுள்ளான். மேலும், கரிகாற்சோழன் இறந்த பிறகு அவன் மகனான கிள்ளிவளவன் சிம்மாசனம் ஏறிய போதும் ஒன்பது தாயாதிகளும் கலகம் செய்து போரிட்டுள்ளார்கள். அப்போது செங்குட்டுவன் சோழரின் உள்நாட்டுப் போரில் தலையிட்டுப் போர் செய்து தன் மைத்துனனான கிள்ளிவளவனைச் சிம்மாசனம் ஏற்றியுள்ளான் என்ற குறிப்பினை கானமுடிகின்றது. “சோழநாட்டில் தாயாதிப் போர் ஒரு புறமிருக்க, சோழ அரசர்களில் அண்ணன் தம்பிகளும் (நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி) ஒருவருக்கு ஒருவர் போர்செய்துள்ளனர். மேலும், தகப்பனும் (தந்தை) மகனும் கூட தங்களுக்குள் போர் செய்து கொண்டதைச் சங்க இலக்கியங்களில் காணலகின்றது.”[41]என்று மயிலை சீனிவேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார்.

[41].மயிலை சீனிவேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன்

பழமையும் பெருமையும் பெற்று விளங்கிய மூவேந்தருள், இடையில் வைத்துப் போற்றப்படும் சோழ மன்னர்கள் கிள்ளிவளவன், செம்பியன், சென்னி என்னும் சொற்களாலும் அழைக்கப்பட்டுள்ளனர். இப்பெயர்களுள் கிள்ளிவளவன் என்பதில் கிள்ளி என்பது தோண்டுதல் எனப் பொருள்தரும் 'கிள்' என்ற சொல்லடியாகவும், வளவன் என்பது, காடு கொன்று நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கியோர் அல்லது வளம்மிக்க நாட்டை ஆள்வோர் என்ற பொருளிலும் குறிக்கப்படுகின்றது. கிள்ளி, சென்னி எனச் சோழர் இருபிரிவினராக உறந்தை, ஆவூர் என்னுமிடங்களில் இருந்து ஆட்சி புரிந்தனர் என்றும், ஆனால் இன்னார்க்குப் பின் இன்னார் ஆட்சி உரிமை பெற்றனர் என்பதற்கான சான்றுகள் கிடைக்கப்பெறாமல் உள்ளது. பின்நாட்களில் கிள்ளி மரபினரே இரண்டு இடங்களிலும் ஆட்சி புரிந்து உள்ளனர். அவர்களும் ஒற்றுமையின்றி போரிட்டுக்கொண்டுள்ளனர். மேலும், சேரர், பாண்டியர் போலன்றிச் சோழர் பல குழுக்களாகப் பிரிந்து நின்று ஒருவருடன் ஒருவர் போரிட்ட நிலையினைக் காணமுடிகின்றது. சோழ மன்னர்களைப் பற்றி ஆராய்ந்து நூல் எழுதிய மா.இராசமாணிக்கனார், 'நமக்குள் துன்பம்' என்னும் தலைப்பில் பின்வருமாறு எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நமக்குக் கிடைத்துள்ள சங்க செய்யுட்களைக் கொண்டு சோழர் அரச மரபினர், மன்னவர் எனக் கூறலாமே தவிர, இந்த அரசர்க்குப் பின் இந்த அரசர் பட்டம் பெற்றனர் என்று தக்க உதாரணங்களுடன் கூறக்கூடிய வசதி இல்லை. "சங்க செய்யுட்களைப் பலபட ஆராய்ந்து அரசர் முறை வைப்பை அரும்பாடு பட்டு அமைக்க முயன்ற பலர் செய்து உள்ள பிழைகள் பலவாகும். ஆதலின் முடியாத இந்த வேலையை மேற்கொண்டு இடர் வராமல் நன்றாகத் தெரிந்தாரைப் பற்றி மட்டும் விளக்கமாகக் கூறிப், பிறரைச் சங்கப் பாடல்கள் கூறுமாறே, கூறிச் சங்ககாலச் சோழர் வரலாற்றை ஒருவாறு எழுதி முடித்த நாவலர் பண்டிதர் நாட்டார் அவர்களும், பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்களும் நமது பாராட்டுக்கு உரியவரே ஆவார்கள். தக்கச் சான்றுகள் கிடைக்கும் வரை இப்பேரறிஞர்கள் கொண்டுள்ள முறையே சிறந்ததாகும்

என்பது சாத்திரீய ஆராய்ச்சி உணர்வுடையார்க்கு ஒப்ப முடிந்த ஒன்றாகும்”[42]என்று குறிப்பிடுவதும் இங்கு எண்ணத்தக்கது.

தென்னாட்டின் நெற்களஞ்சியம் (சோழநாடு) தஞ்சாவூர் என்ற சிறப்பினை இன்று பெற்றிருப்பது போலவே, சங்க காலத்திலும் சோழநாடு நெல் விளைச்சலில் சிறப்புப் பெற்றிருந்ததை, பின்வரும் பாடலடிகளில் காணமுடிகின்றது.

**“சாலி நெல்லின் சிறைகொள் வேலி**
**ஆயிரம் விளையுட்டு ஆகக்**
**காவிரி புரக்கும் நாடு” (பொரு: 246-248)**

ஒரு வேலி நிலமானது ஆயிரங்கல் நெல் விளையும்படி வளம் கொழிக்கும் காவிரியாற்றால் பாதுகாக்கப்படுகின்ற சோழநாடு என்று முடத்தாமக் கண்ணியார் பொருநர் ஆற்றுப்படையில் குறிப்பிடுகின்றார்.

**சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி**

“நெய்தலங்கானல் என்பது கடற்கரைப் பகுதியைச் சார்ந்த ஓர் ஊர் ஆகும். நெய்தலங்கானல் என்னும் இவ்வூரோடு ஏதேனும் ஒரு வகையில் தொடர்புகொண்டிருந்த காரணத்தினால் இவ்விளஞ்சேட் சென்னி, நெய்தலங் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி என்று அழைக்கப்பெற்றுள்ளான்”.[43] மேலும், இளஞ்சேட் சென்னியின் பெயர் சேரமான் பாமளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி என்றும் அழைக்கப்படுவதனால் இவன் சேரனுக்குரிய பாமளூரை வென்றவன் என்பதை அறிய முடிகின்றது.

**எண்ணியது முடிக்கும் ஆற்றல்**

நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியானவன், தான் ஒரு செயலை செய்து முடிக்க எண்ணினால், அதனை அவன் எண்ணியவாறே செய்து காட்டும் ஆற்றலுடையவன் என்பதை,

---

[42].மா. இராச மாணிக்கனார், சோழர் வரலாறு.

[43].கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை.

**“ஒன்னார்**

**ஆரெயில் அவர்கட்டாகவும் நுமது எனப்**

**பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்” (புறம். 203; 9-11)**

என்னும் ஊன்பொதி பசுங்குடையாரின் பாடலடி வழியாக அறிய முடிகின்றது. நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியானவன் தனது பகைவர் நாட்டின் மீது படையெடுக்க எண்ணினாலே, அப்பகைவர் நாடாட்டினை தம்மை நாடி வரும் பாணர்களுக்கு பரிசளிக்க எண்ணியான் போர்புரியும் நாடு இனிமேல் நும்முடையதாகும் என்று வெற்றி பெறுவதற்கு முன்பே கூறுவான். இளஞ்சேட் சென்னிதான் கூறியது போன்றே வலிமை மிக்க பகைவரின் காவல் அரண்களை வென்று பாணர்களுக்கு பரிசளித்து எண்ணியதை எண்ணியாங்கு கெய்தும் தன்மை உடையவன் என்று ஊன்பொதி பசுங்குடையார் கூறுவதனால், இளஞ்சேட் சென்னி எந்த ஒருசெயலையும் ஒழுங்காக திட்டமிட்டுச் செயல்படும் ஆளுமைப் பண்புடையவன் என்பது புலனாகின்றது.

<u>**ஆராய்ந்து அறியும் பண்பு நலன்**</u>

சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி பொருள் வேண்டி தன்னிடம் வந்து இரந்து நிற்பாற்கு, அவர்களின் தேவையறிந்து விரைந்து உதவிபுரிபவன் ஆவான். மேலும், ஒருவர் பிறரைப் பற்றிக் குறைகூறும் வார்த்தைகளில் உள்ள உண்மைத் தன்மையினையும், அவர் கூறுவதில் உள்ள பொய்யான தகவலையும் எளிதாக அறிந்துவிடக் கூடியவன் என்பதனை,

**“பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே**

**நீமெய் கண்ட தீமை காணின்**

**ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி**

**வந்து அடி பொருந்தி முந்தை நிற்பின்**

**தண்டமும் தணிதி” (புறம். 10; 2-6)**

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. நெய்தலங்கானல் இளஞ்செட் சென்னி சான்றோர்களால் ஆராய்ந்து தவறான செயல் என்று முடிவு கூறப்பட்ட செயல்களை, ஒருவன் செய்தால் அவனுக்கு நீ அறநூல்களில் கூறப்பட்டுள்ள

முறைமைகளை ஆராய்ந்து அச்செயலுக்குரிய தண்டணையினை வழங்குவான். மேலும், தங்களது செயலுக்காக வருந்தி இளஞ்சேட்சென்னியைச் சரணடைந்தால் அவர்பால் நீ கொண்ட அன்பினால் அவருக்குத் தண்டனையைக் குறைக்கவும் முற்படுவாய் என்று கூறிச் செல்வதால் சூழ்நிலைக்கு ஏற்றவாறு ஆராய்ந்து செயல்படும் ஆளுமைப் பண்பினை தன்னகத்தே கொண்டவன் இளஞ்சேட்சென்னி என அறிய முடிகின்றது.

**முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி**

பெருநற்கிள்ளி என்னும் பெயரை உடையஇம்மன்னன், முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி என்றும் அழைக்கப்பட்டுள்ளான். பெருநற்கிள்ளி காலத்தில் வஞ்சிநாட்டினை ஆண்டு வந்தவன் அந்துவஞ்சேரல் ஆவான். அந்துவனோடு பெருநற்கிள்ளி பகை கொண்டு விளங்கியமையால் அந்துவனின் வஞ்சிநகரை முற்றுகையிட்டான். அச்சமயம் இவன் ஏறி அமர்ந்த களிறு மதங்கொண்டு கட்டுக்கடங்காது, சென்று வஞ்சி நகர் அடைந்ததைக் கண்ட அந்துவன் சினங்கொண்டான். எனினும் அந்துவன் பெருநற்கிள்ளி நிலையினை அறிந்து அவனை யானையிடம் இருந்து காப்பாற்றினான். அந்துவன் பகைவனாயினும் அவனுக்கு அவனுக்கு ஆபத்தில் உதவக்கூடிய பண்புடையவன் என்பதைக் கண்டு, தனது செயலுக்காக நாணி. அவனொடு நட்புக் கொண்டு வாழ்ந்து வந்தான் பெருநற்கிள்ளி.

**வீரம்**

முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, வளம் நிறைந்த நாடாண்டதோடு, பெருவீரனுமாவான் என்பதை,

**"புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய**
**எய்கணை கிழித்த பகட்டு எழில் மார்பின்" (புறம். 13; 2-3)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன . புலியின் தோலால் செய்யப்பட்ட கவசத்தில் காணப்படும் புள்ளிகளானது சிதையுமாறு பகைவர்களால் ஏவப்பட்ட அம்புகளினால் பிளந்த மார்பினை உடையவன் பெருநற்கிள்ளி. மேலும்,

முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி பல போர்க்களம் கண்டவன் என்பதையும், அவனுடையபகைவர் எய்திய அம்பு தன் மார்பில் பட்டபோதும், அதனை ஒரு பொருட்டாக கருதாமல் பகைவரோடு போர்புரியும் ஆற்றல் உடையவனாகத் திகழ்ந்துள்ளான் என்று ஏணிச்சேரி முடமோசியார் கூறுவதனால், முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளியின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

<u>நலங்கிள்ளி</u>

சோழர்குல மன்னருள் தமிழ்ப்புலமை மிகுந்து கவி இயற்றுவதில் வல்லவனாக சோழன் நலங்கிள்ளி திகழ்ந்துள்ளான். நலங்கிள்ளி பாண்டிய நாட்டில் இருந்த ஏழு அரண்களையும் அழித்து, அவற்றைக் கைப்பற்றி அதனில் தனது புலிக் கொடியினை நாட்டிய வெற்றி வீரன் ஆவான். மேலும், போர் செய்து வெற்றி பெறுவதினையே குறிக்கோளாகக் கொண்டிருந்த நலங்கிள்ளி உறையூர் முதுகண்ணன் சாத்தனார் அவர்களின் அறிவுரை கேட்டு போர் செய்தலை தவிர்த்து அறச் செயல்களை மேற்கொண்டான் என்பர். சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கோவூர்கிழார், ஆலத்தூர்கிழார் முதலான புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர்.

<u>வீரம் குறித்த கவித்திறம்</u>

சோழன் நலங்கிள்ளி பகைவருடன் போர் புரியக் கூடிய ஆற்றல் உடையவன் மட்டும் அல்லாது கேட்போர் இனிது எனக் கூறும் பாடல்கள் இயற்றுவதிலும் வல்லவனாக திகழ்ந்துள்ளான். நலங்கிள்ளி தனது பகைவர்கள் மெல்ல வந்து, தன்னிடம் தனக்கு வேண்டியவற்றைப் பெற தாழ்ந்து நிற்பாற்றாயின், அவர்களுக்குத் தனது அரசாட்சியையோ அல்லது தனது உயிரையோ கொடுத்து இன்புறுவான். மாறாகத் தன்னை பகைத்து போரிட்டால், உறங்குகின்ற புலியை அறியாமல் குருடன் இடறினால் பிழைத்துப் போதல் எவ்வாறு அரியச் செயலோ. அதே போன்று பகைவர் நலங்கிள்ளி வீரத்தின் முன், யானையினது காலில் அகப்பட்ட மூங்கிலின் நீண்ட முளை அழிவது போல் அழிவர். என்பதனை,

**"துஞ்சுபுலி இடறிய சிதடன் போல**

**உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைக்**

**கழைதின் யானைக் கால் அகப்பட்ட**

**வன் திணி நீள்முளை போல"     (புறம். 73; 7-10)**

புலவர் மேற்காணும் பாடல் அடிகளில் குறிப்பிடுகின்றார் .

**அரசுரிமை குறித்த கவித்திறம்**

சோழன் நலங்கிள்ளி நன்கு ஆற்றலும் அறிவும் உடையவரே, அரசுரிமை பெற்று அரசாள வேண்டும். மாறாக பெரும் போரைக் கண்டு அஞ்சம், மனவெழுச்சியுடையோன் அரசுரிமை பெறல் கூடாது என்பதை, கிழ்க்காணும் பாடல் அடிகளில் குறிப்பிடுகின்றார்,

**"விழுமியோன் பெறுகுவன் ஆயின் தாழ்நீர்**

**அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை**

**என்றூழ் வாடுவறல் போல"                (புறம். 75; 7-9)**

நீர் வற்றிய குளத்தில் சிறிய நீரில் உள்ள வெளிய நெட்டி மலரின்தண்டாணதுகோடைக் காலத்தில் காய்ந்துவிடும். அதேபோன்று போரைக் கண்டு அஞ்சம், மனவெழுச்சியுடையோன் நாட்டின் மக்களும், வளங்களும் துன்பப்படுவர் என்று நலங்கிள்ளி கூறுகையினால் நலங்கிள்ளியின் கவித்திறம் குறித்த ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

**வீரம்**

நலங்கிள்ளியானவன் தனது ஊரின் கண் உள்ள மாளிகையில் தங்க விரும்பாது போர் பாசறையிலே தங்கும் விருப்பம் உடையவனாகத் திகழ்ந்துள்ளான். சிறப்பின் காரணமாக பொருளும், இன்பமும், அறத்தின் பின்னே தோன்றும் காட்சி போலச் சேரர், பாண்டியருடைய இரண்டு குடையும் கீழிருக்க, நலங்கிள்ளியின் வெண் கொற்றக்குடையானது திங்கள் போல ஓங்கி நின்று சோழனின் வீரத்தினை பறைசாற்றுகின்றது என்பதை,

**“இரு குடை பின்பட ஓங்கிய ஒரு குடை**

**உரு கெழு மதியின் நிவந்து சேண் விளங்க**

**நல் இசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்**

**பாசறை அல்லது நீ ஒல்லாயே” (புறம். 31; 3-6)**

என்ற கோவூர்கிழாரின் பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன.

**<u>பிறரை மகிழ்வித்து மகிழும் பண்பு</u>**

சோழன் நலங்கிள்ளி தனது அரண்மனையின் முற்றத்தில் நின்று கிணைப் பறையினை இசைக்கும் இரவலனது கிணை ஓசையினைக்கேட்டவுடன், மகிழ்ச்சி அடைவான். பாணனன் மீது கொண்ட அருள் குறையாமல், அப்பாணனின் பழைய சிதைந்த, அழுக்குடைய உடையை அவனது உடலில் இருந்து நீக்கி, மிகப்பெருஞ்சிறப்பினை உடைய புத்தாடையினை பாணனன் உடுக்கும்படி செய்தான். நலங்கிள்ளி பாணனுக்கு தான் அளித்த புது உடையில் அவனது முக மலர்ச்சியைக் கண்டு மகிழும்தன்மையுடையவனாக திகழ்ந்ததை,

**“கலிங்கம் அளித்திட்டு என்அரை நோக்கி**

**நார்அரி நறவின் நாள்மகிழ் தூங்குந்து” (புறம். 400; 13-14)**

மேற்காணும் பாடலடிகளில் கோவூர்கிழார் குறிப்பிடுவதன் மூலம், நலங்கிள்ளியானவன் தன்னிடம் வரும் இரவலர்களை மகிழ்வித்து அவர்களின் மகிழ்ச்சி பொருந்திய முகத்தினைக் கண்டு மகிழக் கூடிய பண்பு நலன் உடையோனாக நலங்கிள்ளி விளங்கியுள்ளான் என்பதை அறியமுடிகின்றது.

**<u>வீரம்</u>**

நலங்கிள்ளி பல போர்களில் வெற்றி பெற்றவன். நலங்கிள்ளியின் பகைவர்கள் நலங்கிள்ளியது பெயரினைக் கேட்டாலே அஞ்சுவர் என்பதனை,

**“கிடைக்காழ் அன்ன தெண்கண் மாக்கிணை**

**கண்அகத்து யாத்த நுண்அரிச் சிறுகோல்**

**எறிதொறும் நுடங்கி யாங்குநின் பகைஞர்**

**கேட்டொறும் நடுங்க"                    (புறம். 382; 18-21)**

மேற்காணும் பாடலடி வழியாக அறிய முடிகின்றது. தடாரிப் பறையில் கட்டப்பட்டிற்கும் கிணையை சிறுகோல் கொண்டு அடிக்கும் தோறும், கிணை அதிர்வது போன்று சோழன் நலங்கிள்ளியின் பெயரினை கேட்டாலே, நலங்கிள்ளியது பகைவர்கள் அவனது வீரத்தின் ஆற்றலை எண்ணி தங்கள் மனதில் அச்சம் கொண்டு காணப்படுவர் என்று கோவூர்கிழார் குறிப்பிட்டுள்ளார். மேலும், தூக்கணாங்குருவியின் கூட்டைத் தொங்க விட்டாற் போன்று, ஒரு பக்கத்தில் வலமாகத் திரிந்த சங்கின் ஒளி நலங்கிள்ளியின் பள்ளி எழுச்சிக்காக முழங்கினும், இவ்வோசையைக் கேட்டு நலங்கிள்ளி போர் முழக்கம் எனக் கருதுவானோ, எனப் பகைவர் அஞ்சும் அளவிற்கு வீரம் மிக்கவன் நலங்கிள்ளி என்று ஆலத்தூர் கிழார் நலங்கிள்ளியின் வீரத்தின் தன்மையினை குறிப்பிடுகின்றார்.

**கொடை**

சோழன் நலங்கிள்ளி தன்னிடம் பரிசில் பெறவரும் இரவலர்களுக்கு முதலில், அவர்களின் உடல் களைப்பினையும், பசித்துன்பத்தினையும், போக்க அவனது அரண்மனையில் உள்ள சமையற் களங்களில் எப்போதும் உணவு நிறைந்திருக்குமாறு பார்த்துக் கொள்வான். பின், நெடிய கொடியாகப் பூவாத வஞ்சி என்று அழைக்கப்படும் கருவூரையும் தருவான், ஒளி பொருந்திய விறலியர்களுக்கு மாடங்கள் நிறைந்த மதுரையையும் வென்று பரிசிலாகநல்கும் விதத்தினை,

**"கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங் கொடிப்**
**பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ**
**………………………………**
**ஒள்நுதல் விறலியர் பூவிலை பெறுக! என**
**மாடமதுரையும் தருகுவன்" (புறம். 32; 1-5)**

புலவர் மேற்காணும் பாடல் அடிகளில் குறிப்பிடுவதனைக் காணமுடிகின்றது.

குழந்தையைப் பெற்ற தாயின் மார்பு தன் குழந்தைக்காகப் பால் சுரப்பது போன்று,சோழன் நலங்கிள்ளி தன்னிடம் பரிசில் நாடி வரும் இரவலர்களுக்குப் பரிசில் வழங்கிக் காத்துவருகின்றான் என்பதனை, பின்வரும் பாடலடிகளில் கோவூர்கிழார்குறிப்பிடுகின்றார்.

**“புனிறு தீர் குழவிக்கு இலிற்றுமுலை போலச்**
**சுரந்த காவிரி மரம் கொல்மலி நீர்**
**மன்பதை புரக்கும் நல்நாட்டுப் பொருநன்” (புறம்.68; 8-10)**

மிகுதியான நீரினால் கரையின் இரு பக்கங்களில் உள்ள மரங்களைச் சாய்க்கும் அளவு வெள்ளத்தை உடைய காவிரியாறு, உலக உயிர்களைக் காப்பது போன்று, நலங்கிள்ளியும் தன்னிடம் பரிசில் நாடி வரும் இரவலர்களுக்குப் பரிசில் வழங்கிக்காத்து வருகின்றான் என்பதனால் நலங்கிள்ளியின் கொடைதொடர்பான ஆளுமைப் பண்பினைக் காணமுடிகின்றது.

**குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்**

திருமாவளவன் ஆட்சிக்குப் பின்னர் சோழநாடு இரண்டு கூறாக பிரிந்து, இருதிறத்தாரால் ஆளப்பட்டு வந்தது. அவற்றில் ஒன்றின் தலைநகராக புகாரும், மற்றொன்றின் தலைநகர் உறையூராகவும் திகழ்ந்துள்ளது. உறையூரை ஆண்ட சோழ அரசர்களுள் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் சிறந்து விளங்கிய அரசன் ஆவான். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் புலவர் போற்றும் புகழ் மிக்கவனாகவும், செய்யுள் இயற்றுதலில் வல்லவனாகவும் விளங்கியுள்ளான். ஆலந்தூர்கிழார், மாறோக்கத்து நப்பசலையார், ஆவூர்மூலங்கிழார், இடைக்காடனார், ஆடுதுறை மாசாத்தனார், ஐயூர்முடவனார், கோவூர்கிழார், நல்லிறையனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், வெள்ளைக்குடிநாகனார் முதலிய புலவர்கள் பலர் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனது, கொடையாண்மை, படையாண்மை, சொல்லாண்மை ஆகிய மூன்றானும் சிறப்புற்று சிறந்து விளங்கிய தன்மையினை புகழ்ந்து பாடியுள்ளனர்.

## கவித்திறம்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் தான் ஒரு அரசனாக இருந்தபோதும். பண்ணனிடத்தில் பரிசில் பெறச் செல்லும் பாணன் ஒருவன், பரிசில் பெற்று வரும் பாணரைக் கண்டு வினவுவது போன்று ஒரு பாடலைபாடியுள்ளார். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்தான் உயிர் வாழும் நாளையும் பெற்றுக்கொண்டு பண்ணன் நீடுழி வாழ்வானாக எனக் கூறுவதன் மூலம், பண்ணன் என்பவன் தன்னிடம் வருகின்ற இரவலர்களின் சுற்றத்தின் வறுமையை போக்குக்கூடியவன் என்பதனை,.

**“பசிப்பிணி மருத்துவன் இல்லம்**
**அணித்தோ சேய்த்தோ” (புறம். 173; 11-12)**

மேற்காணும் பாடலடிகள் குறிப்பிடுவதனை அறியமுடிகின்றது.

பசி என்னும் கொடிய நோயினை தனது கொடைத்திறத்தினால் போக்கும் மருத்துவனான பண்ணன் இல்லம் அருகில் உள்ளதோ அல்லது வெகு தொலைவில் உள்ளதோ என்று வினவுமாறு பாடியுள்ளார். இவரது பாடலின் மூலம்,குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுடைய ஆட்சிக் காலத்தில் பண்ணன் என்னும் குறுநில மன்னன் புலவர்களின் வறுமை நிலையினை போக்கக் கூடியவனாக இருந்துள்ளான். என்பதனால்,குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பண்ணனை பசிப்பிணி மருத்துவர் என்று கூறி பண்ணன் தொடர்பாகவே ஒரு பாடலினை புனைந்துள்ளார்.

## எண்ணியதை எண்ணியவாறே முடிக்கும் ஆற்றல்

சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் எண்ணியதை எண்ணியவாறே முடிக்கும் ஆற்றல் உடையவன். என்பதை அறிந்த ஆவூர் மூலங்கிழார் பின்வரும் பாடலடிகளில் குறிப்பிடுவதனை அறியமுடிகின்றது,

**“செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும்**
**வெண் திங்களுள் வெயில் வேண்டினும்**
**வேண்டியது விளைக்கும் ஆற்றலை ஆகலின்” (புறம். 38; 7-9)**

குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பார்ப்பதற்கு மலைபோன்று தோற்றமளிக்கும் யானையின் மீது அமர்ந்து வானினைத் தடவுவது போன்ற கொடிகள் அசைந்தாடும், வெற்றி படையை உடையதலைவன். நீ ஒரு இடத்தினை கடும் சினத்துடன் நோக்கினால், அவ்விடமானது தீப்பற்றி எரியும். அதுவே, அவ்விடத்தை அருளுடன் நீ பார்த்தால், குளிர்ச்சி பொருந்திய மழை பொழியும் இடத்தினை போல அது திகழும். நீ செம்மையான கதிரவனில் நிலவின் குளிர்ச்சியை உண்டாக்க எண்ணினாலும், அல்லது வெண்மையான நிலவின் ஒளியில் கதிரவனின் வெப்பத்தை உண்டாக்க எண்ணினாலும் எண்ணியதை எண்ணியவாறே செய்து முடிக்கும் ஆளுமைப்பண்பினை கிள்ளி வளவனிடம் காணமுடிகின்றது.

**வீரம்**

மனிதர்களின் உயிரைப் பறிக்கும் தொழிலைப் புரியும் காலனும், ஒருவனின் உயிரைப் பறிக்க உரியக் காலம் வரும்வரை காத்திருப்பான். ஆனால், நீயோ காலம் கருதாது பகைவரை நீ அழிக்க நினைத்தால் ,வேற்படை வீரர்கள் நிறைந்த படையுடைய பகைவரைப் போரில் கொன்று வெல்லும் தன்மை உடையன் என்று கோவூர்கிழார் கூறுவதனை,

**“காலனும் காலம் பார்க்கும் பாராது**
**வேல் ஈண்டு தானை விழுமியோர் தொலைய**
**வேண்டு இடத்து அடூஉம் வெல் போர் வேந்தே” (புறம். 41; 1-3)**

என்ற மேற்காணும் பாடலடிகள் சுட்டுகின்றன. மேலும், உனது பகைவர்களால் காக்கப்பெற்றதும், வீரம் நிலைபெற்றதும், ஆகிய மதில்களை நீ பாதுகாக்காது எதிர்த்து அழித்து, உன்னுடைய பகைவரைக் கொன்றாய், கொன்றதன் அடையாளமாக அப்பகைவரின் பொன்னால் செய்யப்பெற்றதும், அழகு நிறைந்ததுமாக விளங்கிய பகைவரின் தலையினை அலங்கரித்த மணிமுடியினை கவர்ந்து, நீ உனது கால்களில் கழல்களாக மாற்றி அணிந்து கொள்ளும் வலிமை உடைய வெற்றி வேந்தனே! உன்னை பழித்துப்பேசும் பகைவர்கள். தங்களது தலை சாய்த்து உன்னை வணங்கி நிற்கச் செய்யும் படி

அவர்களைப் போரில் வெல்லக் கூடிய வீரன் கிள்ளி வளவன் என்னும் குறிப்பினை,

**“நின் இகழ் பாடுவோர் எருத்து அடங்க” (புறம். 40; 6)**

என்னும், மேற்காணும் பாடல்வரியின் வாயிலாக புலவர் கிள்ளிவளவனின் வீரத்தின் ஆளுமைப்பண்பினை வெளிப்படுத்துகின்றார்.

**ஆட்சிச் சிறப்பு**

குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளிவளவன் நாடு போற்றும் நல்லாட்சி புரிந்துள்ளான். ஆகையினால், குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளிவளவன் ஆட்சிச் சிறப்பினை, நாட்டில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை நிகழ்வுகளின் மூலமாக இடைக்காடனார் பின்வருமாறு விளக்குகின்றார்.

**“…….. அறைநர்**
**கரும்பில் கொண்ட தேனும் பெருந்துறை**
**நீர் தரு மகளிர் குற்ற குவளையும்**
**வன்புலக் கேளிர்க்கு வரு விருந்து அயரும்**
**மென்புல வைப்பின் நல் நாட்டுப் பொருந” (புறம். 42; 14-18)**

என்ற பாடலடிகளின் இப்பொருளை அறிந்து கொள்ள முடிகின்றது. பெரும் சிறப்புப் பொருந்திய புதிய வருவாய்களை தன்னகத்தே கொண்டதாகத் திகழ்வது குளமுற்றத்துச்துஞ்சிய கிள்ளிவளவனின் நாடு ஆகும். அந்நாட்டினில், நெற்கதிரை அறுப்போர் நீர்வரும் கடை மடையில் பிடித்த வாளை மீனினையும், கரும்பு வெட்டுவோர் கரும்பிலிருந்து எடுத்த தேனையும் நீர்த்துறையில் நீரை முகக்கும் பெண்கள் பறித்த செங்கழு நீர் மலர்களையும் தங்களிடம் விருந்தினராகப் பிற ஊர்களில் இருந்து வரும் சுற்றத்தினர்க்கு விருந்தாக அவைகளை அளிப்பர். இவ்வாறு வளங்கள் நிறைந்து விளங்குமாறு மென்மையான நிலங்களை தன்னகத்தே கொண்ட நாட்டை உடைய தலைவன் குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளிவளவன் என்று கூறுவதன் மூலம் இம்மன்னனின்

ஆட்சிச்சிறப்பு மற்றும் நிர்வாகம் தொடர்பான ஆளுமைப்பண்பு குறித்து அறியலாகின்றது.

**அறிவுரை கேட்கும் பண்பு**

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் மலையமான் குழந்தைகளைச் சிறு குழந்தைகள் என்றும் நினையாது, தனது பகைவன் மலையமானினை பழிவாங்க எண்ணி மலையமான் குழந்தைகளையானையின் கால்களில் இட்டுக் கொல்ல முடிவெடுத்தான். இதனை அறிந்த கோவூர்க்கிழார் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் ஆகிய நீ தன்னிடம் அடைக்கலமாக வந்த புறாவின் துன்பம் துடைக்க தனது தொடையின் சதையினை அறுத்து அளித்து. புறாவின் உயிரைக் காத்தது மட்டுமன்றி பிற உயிரினங்களின் துன்பங்களினையும் தீர்த்து வைத்த சோழ மன்னர்களின் வழித்தோன்றலாக வந்தவன். இக்குழந்தைகளோ தன்னிடம் வரும் இரவலர்களுக்கு இருப்பதைப் பகுத்து அளித்து, அவர்களின் வறுமையைத் தீர்க்கும் மரபில் வந்தவர்கள். இக்குழந்தைகள் தம்மைக் கொல்ல வரும் யானையைக் கண்டதும் தனது அழுகையினை மறந்தனர். பலரும் கூடி நிற்கும் பொது மன்றத்தினைப் பார்த்து சிறிது வருத்தமும் அடைந்துள்ளனர் என்று கூறுவதனை, பின்வரும் கோவூர்க்கிழார் பாடல் காட்டுகிறது.

**“நீயே புறவின் அல்லல் அன்றியும் பிறவும்**
**இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை**
**இவரெ புலன் உழுது உண்மார் புன்கண் அஞ்சி**
**தமது பகுத்து உண்ணும் தண் நிழல் வாழ்நர்**
**களிறு கண்டு அழுஉம் அழாஅல் மறந்த**
**புன் தலைச் சிறாஅர்” (புறம். 46; 1-6)**

முன்னோர் குலப்பெருமையை, கோவூர்கிழார் வாய்வழி கேட்டஅளவில், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் குழந்தைகளை விடுவித்தான் என்பதில் இருந்து புலவர் கூறும் அறிவுரைகளின் தன்மையை

பொறுத்து அதனைப் போற்றும் தன்மை உடையவன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என அறியமுடிகின்றது.

<u>கொடைப்பண்பு</u>

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்பால் பாணனே நீ சென்றாய் ஆனால், கிள்ளி வளவன் வாயிலில் அதிக நேரம் தன்னிடம் வந்த இரவலரைத் தங்கவைக்காமல், அவர் சென்ற சிறிது நேரத்திலே தன்னையடையந்த இரவலர்க்குத் தேரினை அழித்து இன்புறும் பண்புடையவன் என்பதை,

**“கிள்ளி வளவற் படர்குவை ஆயின்**
**நெடுங் கடை நிற்றலும் இலையே கடும் பகல்**
**தேர்வீசு இருக்கை ஆர நோக்கி**
**நீ அவற் கண்ட பின்றை பூவின்**
**ஆடு வண்டு இமிராத் தாமரை**
**சூடாயாதல் அதனினும் இலையே” (புறம். 69; 16-21)**

என்ற பாடல்வரிகளால் அறியமுடிகின்றது.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பரிசில்கள் வழங்குவதை உண்கண்களினாலே காண்பாய். இம்மன்னின் வாயிலில் நெடிது நேரம் இரவலர் காத்து நிற்பது எவ்வாறு இல்லையோ, அதே போன்று அவனிடம் சென்ற இரவலர் பொன்னால் ஆன தாமரை மலரைக் சூடாமல் செல்வதில்லை என்று ஆலத்தூர் கிழார் கூறுவதன் மூலம் இவனது கொடைத்திறத்தினை அறியமுடிகின்றது.

<u>குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்</u>

“திருமாவளவன் என்னும் பெயர் கரிகாற் பெருவளத்தானுக்கே உரித்து. ஆதலின் இவ்வரசன் அவனின் வேறு என அறிந்து கொள்வதற்கு குராப்பள்ளித்

துஞ்சிய பெருந்திருமாவளவன் என அழைக்கப் பெற்றுள்ளான்”[44]. குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியோடு நட்புடையவன். குராப்பள்ளி என்னும் இடத்தில் உயிர் துறந்ததனால் இவனைகுராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவன் என்று புலவர்கள்அழைத்துள்ளனர்.

**வீரம்**

குராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவன் போர்க்களம் பல கண்டு வெற்றிவாகை சூடியுள்ளான். பெருந்திருமாவளவனின் முரசானது அவன் போரில் பெற்ற வெற்றியை உலகிற்குப் பறைசாற்றும் வெற்றி முரசாக விளங்குவதற்கு அவனது கையில் உள்ள பகைவரை தப்பவிடாத வாளே காரணமாக அமைகின்றது என்பதை, கிழ்க்காணும் பாடல் அடிகளில்

**“வலன் இரங்கு முரசின் வாய்வாள் வளவன்” (புறம். 60; 10)**

உறையூர் மருத்துவன் தாமோதரனார் கூறுவதன் மூலம் குராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவனின் வீரத்தின் தன்மையினை அறியமுடிகின்றது.

கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பெருந்திருமாவளவன் வீரம் பற்றிபின்வரும் பாடலடிகளில் குறிப்பிட்டுள்ளார்,

**“உரும் உரற்றன்ன உட்குவரு முரசமொடு**
**செருமேம் படூஉம் வென்றியர் எனா” (புறம். 197; 5-6)**

இடி முழங்குதல் போன்று கேட்போர் அஞ்சும் வகையில் முரசின் ஒலி கேட்கும். அவ்வொலியானது பெருந்திருமாவளவன் போரில் பெற்ற வெற்றியின் மேம்பாட்டினை கூறுவதற்காக எழுப்பப்பட்டது. பெருந்திருமாவளவன் நிலவுலகம் முழுதும் பரவிக் காணப்படும் பெரும்படையை உடையவன் என்று கூறுவதன் வாயிலாக, அவன் பகைவர் மீது போர் தொடுத்த நாடுகளை எல்லாம் வென்று தனதாக்கிக் கொண்டான்

[44].கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை

எனகூறிச்செல்வதால், பெருந்திருமாவளவனின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

## கோப்பெருஞ்சோழன்

கோப்பெருஞ்சோழன் உறையூரிலிருந்து ஆட்சி நடத்திய சோழ மன்னர்களுள் ஒருவன் ஆவான். இம்மன்னன் புலவர்களோடு மிக நட்புரிமை கொண்டு பழகிய பெருந்தகையாளனாகவும், மறமாண்பும், தமிழ்ச்செறிவும், கொடைப் பண்பும் கொண்டவனாகத் திகழ்ந்துள்ளான். கோப்பெருஞ்சோழனின் புதல்வர்களே பகைவராயினர் என்பதால், அவர்களைப் பொருது அழிக்கமுனைந்தவனைச் சான்றோர் தடுத்துத் துறவு நெறிக்குச் செலுத்த முயன்றனர். ஆயின்,கோப்பெருஞ்சோழனோ வடக்கிருந்து உயிர் விடத் துணிந்தான். இதனை அறிந்த பிசிராந்தையர் என்னும் பாண்டிய நாட்டுப் புலவர் தானும் பாண்டிய நாட்டிலிருந்து புறப்பட்டு வந்து கோப்பெருஞ்சோழனுடன் உடனமர்ந்து உயிர் நீத்தார். கோப்பெருஞ்சோழனைப் பற்றிய செய்திகள் புறநானூற்று பாடாண்திணையில் இரண்டு பாடல்களில் குறிப்பிடப்படுகின்றன.

## நட்பிற்காக கொடையளித்தல்

பிசிராந்தையர் என்னும் பாண்டிய நாட்டுப் புலவர் தனது உணவாகிய அயிரை மீனைப் பிடித்து உண்ணும் அன்னச் சேவலிடம், நீ இமயமலையிலிருந்து குமரியாறு வரை செல்லும்பொழுது, இவற்றிற்கு இடைப்பட்ட சோழநாட்டில் உள்ள உறையூர் நகருக்கு செல்வாயானால், மாடங்களை உடைய வாயிலில் வாயிற் காவலர்களிடம் அனுமதி பெறாமலே, உள்ளே சென்று கோப்பெருஞ்சோழனிடம் பிசிர் என்னும் ஊரில் உள்ள ஆந்தையாரால் அனுப்பப்பெற்றுள்ளேன். என்று நீ கூறினால், கோப்பெருஞ்சோழன் என்மீது கொண்ட நட்பின் காரணமாக உன்னை ஒரு பறவை என்று கூட எண்ணாது, அழகு பொருந்திய உனது பேடை அணிந்து கொள்ளத் தான் விருப்பங்கொண்ட நல்ல அணிகலன்களை நினக்கு அளிப்பான்என்பதை,

**“பெருங் கோக் கிள்ளி கேட்க இரும் பிசிர்**
**ஆந்தை அடியுறை எனினே மாண்டநின்**
**இன்புறு பேடை அணியத் தன்**
**அன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே” (புறம். 67; 11-14)**

என்னும் பாடலடிகளில் பிசிராந்தையார் குறிப்பிடப்பட்டுள்ளமையினைக் கொண்டு, கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாரிடம் கொண்டுள்ள நட்பின் தன்மையினை அறியலாகின்றது.

**அறிவுரைக் கேட்கும் பண்பு**

கோப்பெருஞ்சோழன் தனது மகன்கள் மீது போர் எடுத்துச் செல்ல இருப்பதை அறிந்த, புல்லாற்றூர் எயிற்றியனார் என்னும் புலவர் போரில் உன்னை நெருங்கி வந்த பகைவர்களை கொன்று, இப்பரந்த உலகினை உனது வெண் கொற்றக் குடையினால் பாதுகாக்கும் வெற்றி பொருந்திய அரசே! கடலால் சூழப்பட்ட பரந்த இடத்தினை உடைய உலகில் உன்னை எதிர்த்துப் போர்புரிய வந்துள்ளவர்கள் சேரமன்னரோ, பாண்டிய மன்னரோ அல்ல. நின்னுடைய புதல்வர்களே என்று புல்லாற்றூர் எயிற்றியனார் பின்வரும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**“இளையோர் தோற்பின்**
**நின்பெருஞ் செல்வம் யார்க்கு எஞ்சுவையே**
**அமர்வெஞ் செல்வ நீஅவர்க்கு உலையின்**
**இகழுநர் உவப்பப் பழிஎஞ் சுவையே” (புறம். 213; 15-18)**

கோப்பெருஞ்சோழன் ஆகிய நீ, இவ்வுலகவாழ்க்கையினை நீங்கி தேவருலகை அடைந்த பின்பு, இவ்வரசவுரிமை அவர்களேயே சென்றடையும். உண்னை எதிர்த்துப் போர்புரியும் அறிவில்லாத நின் புதல்வர்கள் போரில் தோற்பின் உன்னுடைய பெருஞ்செல்வத்தை அவர்களுக்கு அளிக்க முடியதால் யாருக்கு அளிப்பாய்? அல்லது நீ உன் புதல்வர்களிடம் தோற்பாய் ஆயின் உன்னை இகழும் பகைவர் கூட்டம் மகிழும். ஆதலால், நீ உனது புதல்வர்களுடன் போர் புரியும் எண்ணத்தைக் கைவிடுக என்று கூறியதைக்

கேட்ட கோப்பெருஞ்சோழன். புலவரின் வார்த்தைகளில் உள்ள உண்மையின் தன்மையினை அறிந்து, போர் புரியும் எண்ணத்தைக் கைவிட்ட காரணத்தினால், கோப்பெருஞ்சோழன் பிறரது நல் அறிவுரைகளை மதிக்கும் பண்புடையவன் என்பதை அறியமுடிகின்றது.

**<u>கவித்திறம்</u>**

கோப்பெருஞ்சோழன் போரால் பிறரை வெல்லும் ஆற்றல் மட்டும் அல்லாது இனிய கவிநயத்தாலும் அதனைப் படிப்போர் மனதை வெல்லும் ஆற்றல் உடையவன். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறக்க எண்ணியபோது உடனிருந்தவர்களிடம் கூறுவதாக இரண்டு பாடல்கள் பாடியுள்ளான்.

> **“பேதைச் சோழன் என்றும் சிறந்த**
> **காதற் கிழமையும் உடையவன் அதன்தலை**
> **இன்னது ஓர் காலை நில்லான்**
> **இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே”** **(புறம். 216; 9-12)**

மேற்காணும் பாடலடிகளில் பிசிராந்தையார் குறித்துபாடுகின்றார் கோப்பெருஞ்சோழன்.

பிசிராந்தையார் பாடும்பொழும், தனது பெயரைப் பிறருக்கு கூறும் பொழுதும்என் பெயர் பேதைமையை உடையச் சோழனென்று என் பெயரை தனக்குப் பெயராக கூறுவான். பிசிராந்தையார் நான் செல்வ நிலையில் இருந்த போது என்னைத் வந்து பாராது இருந்தாலும், யான் துயரமுறுங்காலத்து என்னைத் தேடி வருவான். ஆகவே பிசிராந்தையாருக்கு எனது அருகில் இடம் ஒதுக்குக என்று பாடுகின்றான் கோப்பெருஞ்சோழன்.

**<u>உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி</u>**

“சங்க இலக்கிய நூல்களால் அறியப் பெற்ற சோழ அரசர்களுள் காலத்தால் முதற்கண் வைத்துச் சிறப்பிக்கப் பெறுவோன் உருவப் பல்தேர்

இளஞ்சேட் சென்னி என்று கூறின் அது பொருந்தும்”[45]. உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி கரிகாற் பெருவளத்தானைப் பெற்றுப் புகழ் கொண்டவன் ஆவான் என்பதைப், பொருநராற்றுப்படையின் ஆசிரியர் முடத்தாமக் கண்ணியார் கரிகாலைனை 'உருவப்பஃறேர் இளையோன் சிறுவன்' எனப் பாடுவதால் தெரிந்து கொள்ள முடிகின்றது. இவன் வீரத்திலும் கொடையிலும் சிறந்து விளங்கிவன். இளஞ்சேட் சென்னி அழகிய பல தேர்களைக் கொண்டிருந்தான் என்பதை அவன் பெயரைக் கொண்டே அறியமுடிகின்றது. இளஞ்சேட் சென்னி பற்றி புறநானூற்றுப் பாடாண் திணையில் ஒரு பாடலில் கூறப்பட்டுள்ளது.

**ஆட்சிச் சிறப்பு**

உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி தன்னுடைய நாட்டினை சிறந்த வளங்களை தன்னகத்தே கொண்ட நாடாக விளங்குமாறு எவ்வாறு ஆட்சிபுரிந்தான் என்பதை பெருங்குன்றூர் கிழார்,

**“கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக ஏற்றை**
**நாகு இள வளையொடு பகல் மணம் புகூஉம்**
**நீர்திகழ் கழனி நாடு கெழு பெருவிறல்**
**வான் தோய் நீள்குடை வயமான் சென்னி” (புறம். 266; 4-7)**

என்னும் பாடலடிகள் வாயிலாக குறிப்பிடுகின்றார்.

கதிர்போலுங் கோட்டையும், சுரிமுகத்தையம் உடைய நத்தையின் ஏற்றானது, பெண்ணாகிய இளைய சங்குடனே பகற்காலத்திலே கூடும் நீர் நிறைந்து விளங்கும் வயல்வெளிகளை உடைய நாட்டினை தன்னகத்தே கொண்டவன். மேலும், வெற்றிச்சிறப்பையும் உடையோனாகவும், வானளவு உயர்ந்த குடையினையும், வலிமைமிக்க குதிரையினையும் உடையச் சென்னி எனபெருங்குன்றூர் கிழார் கூறுவதன் வாயிலாக, உருவப்பல்தேர் இளஞ்சேட்

[45].கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை.

சென்னியின் ஆட்சிச் சிறப்பு, வெற்றி, புகழ் முதலிய ஆளுமைப் பண்புகள் குறித்து அறிய முடிகின்றது.

**<u>இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி</u>**

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி சங்ககாலச் சோழ அரசர்களுள் காலத்தால் பிற்பட்டவன் ஆவான். பெருநற்கிள்ளி போர் புரிதலில் வல்லமை பெற்றுதிகழ்ந்துள்ளான். தேர்வண்மலையன் என்பவனைத்துணையாகக் கொண்டு சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்பவனுடன் போரிட்டு அம்மன்னனை வென்றுள்ளான்.

பேரரசுகள் பலவற்றை அழித்து வெற்றிகொண்டு பெருமை கொண்டோரே, இராசசூய வேள்வி இயற்றுதல் கூடும் என்பர். இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று அழைக்கப்படுவதால் இவன் பல போர் புரிந்து வெற்றி பெற்றவன் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது. பெருநற்கிள்ளி குறித்த ஒரு பாடல் புறநானூற்றுப் பாடாண்திணையில் உள்ளது.

**<u>கொடைப்பண்பு</u>**

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்பவனுடைய கொடைத்தன்மை குறித்து உலோச்சனார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

**“மலைபயந்த மணியும் கடறுபயந்த பொன்னும்**
**கடல்பயந்த கதிர்முத்தமும்**
**வேறுபட்ட உடையும் சேறுபட்ட தசும்பும்**
**கனவில் கண்டாங்கு வருந்தாது நிற்ப” (புறம். 377; 16-19)**

பெருநற்கிள்ளி தம்மிடம் வருகைபரியும் இரவலர்களுக்கு, மலையிலிருந்து பெறப்பட்ட மணிகளையும், காட்டில் இருந்து பெற்ற பொன்னையும், கடலில் இருந்து கிடைத்த ஒளி படைத்த முத்துக்களையும், பல்வேறு வகைகளான ஆடைகளையும், கட் குடங்களையும் அளித்து இனி வறுமைத் துன்பத்தில் வருந்தாமல் செல்வ நிலையுடனே திகழும் நிலையினை

தான் கனவில் கண்டது போன்று நனவு வாழ்விலே வழங்கினான் என்று பெருநற்கிள்ளியின் கொடைத்தன்மை குறித்து உலோச்சனார் விளக்குகிறார்.

**<u>செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி</u>**

"வேளிர்க்கு உரிய ஊர்களுள் பாழி என்பதும் ஒன்று. சேர நாட்டைச் சேர்ந்ததாக இருந்தது இப்பாழி, அவ்வேளிருட் சிறந்தோனாகிய நன்னன் என்பவனுக்கு உரியதாய் இருந்தது. எழில் மலையை அடுத்திருந்த பாழி இயற்கையாகவும், செயற்கையாகவும் இருவகை அரண்களை பெற்றிருந்தது"[46]. என்ற குறிப்பு இம்மலையின் வளத்தைக் காட்டுவதாக உள்ளது. அரண்களையும், பெரும் பொருட்களையும் தன்னகத்து கொண்டு பாழி சிறந்து விளங்கிய காரணத்தால், அதைக் கைப்பற்றி தமதாக்கி கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அன்றைய காலக்கட்ட அரசர்கள் அனைவரிடமும் காணப்பட்டது. பாழி பலரும் கூடிப் போர்புரியும் பெரும் போர்க்களமாக காட்சியளித்ததினால், புலவர்கள் இப்பாழியைப் போர் நிறைந்த பாழி என்னும் பொருள் விளங்குமாறு, செருப்பாழி எனச் சிறப்புப் பெயரிட்டு அழைத்தனர். சோழரும் பாழியை கைப்பற்ற எண்ணி அரும்பாடுபட்டனர். அவர்களது எண்ணம் இளஞ்சேட் சென்னியின் காலத்திலே நிறைவேறியதால் இவன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி என்று அழைக்கப்பட்டான்.

**<u>வீரம்</u>**

இளஞ்சேட் சென்னி என்னும் இச்சோழ மன்னன் பாழி நகரைக் கைப்பற்றி தனதாக்கிக் கொண்டிருந்த வடுகர்களை வென்ற திறத்தினை ஊன்பொதி பசுங்குடையார், கீழ்க்கண்ட பாடலடிகளில் குறிப்பிடுகின்றார்.

**"தென்பரதவர் மிடல்சாய**
**வடவடுகர் வாள்ஓட்டிய**
**தொடை அமை கண்ணி திருந்துவேற் தடக்கை" (புறம். 378; 1-3)**

[46].கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை.

இளஞ்சேட் சென்னி தென்னாட்டில் வாழ்ந்து வந்த பரதவருடைய வலிமை இழக்கச் செய்து அவர்களை ஒடுக்கினான். மேலும், வட நாட்டினைச் சார்ந்த வடுகர்களுடைய வாட்படையினையும் தோற்கடித்தனால், கட்டுதல் அமைந்த தலைமாலையும், திருந்திய வேலேந்திய பெரிய கைகளையும் உடையவன் இளஞ்சேட் சென்னி என்று ஊன்பொதி பசுங்குடையார் கூறுவதன் மூலம் இளஞ்சேட் சென்னியின் வீரம் தொடர்பான ஆளுமைப்பண்பு வெளிப்படுகின்றது

**<u>கொடை</u>**

இளஞ்சேட் சென்னியின் கொடைத்திறம் பற்றி ஊன்பொதி பசுங்குடையார் கூறுகையில் இளஞ்சேட் சென்னி பரிசில் பெற வருகை தருவோர்க்கு வழங்குவதற்காகவே செய்யப்பட்ட மிகஉயரிய பொருட்களை வழங்குவான். மேலும், பெறுதற்கு அரிய அணிகலன்களையும், பிறபொருட்களையும் பரிசல்பெறுவோர் கையில் தாங்கமுடியாத அளவிற்கு வழங்கி அவர்களின் வறுமை நிலையினை ஓடச்செய்யும் இயல்புடையன். என்பதை,

**“எமக்குஎன வகுத்த அல்ல மிகப்பல**
**மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை**
**தாங்காது பொழிதந் தோனே” (புறம். 378; 10-12)**

என்ற பாடல்அடிகளில் குறிப்பிடப்படுவதனால், இளஞ்சேட் சென்னியின் கொடைப்பண்பு குறித்தஆளுமையினை அறியமுடிகின்றது.

**<u>கரிகால் பெருவளத்தான்</u>**

காவிரியின் குறுக்கே கல்லணை கட்டிய பெருமைக்கு உரியவன் கரிகால் பெருவளத்தான். உருவப்பஃறேர் இளஞ்சென்னி என்னும் அரசனின் மகன் கரிகால் பெருவளத்தான் என்பதை ’உருவப் பஃறே ரினையோன் சிறுவன்’ (பொரு. 120) பொருநராற்றுப் படை அடியால் அறியமுடிகின்றது. கரிகால் பெருவளத்தான் தாய் வயிற்றில் இருக்கும் போதே தந்தையான உருவப் பஃறேர்

இளஞ்சேட் சென்னி இறந்து விட்ட காரணத்தினால் கருவிலிருக்கும் காலத்திலே அரசுரிமை பெற்றவன் என்றும் பொருநராற்றுப்படை குறிப்பிடுகின்றது. இச்சோழ மன்னனின் இளம்பருவத்திலே பகைவர் இம்மன்னனை சிறையிட்டனர் என்பதையும், மேலும், அச்சிறைச்சாலைக்குப் பகைவர் தீயிட்டு கரிகால் பெருவளத்தானைக் கொல்லமுயன்றனர். அதில் இருந்து தப்பித்துச் செல்லும் போது இவனது கால்கள் தீயில் கருகியதால் கரிகால் பெருவளத்தான் என அழைக்கப்படுகின்றான் என்பதை,

**“முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்**
**இச்சக் கரமெ அளந்ததால் - செயச்செய**
**அரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புன்னீர் நாடன்**
**கரிகாலன் கானெருப் புற்று” (பொரு. வெண்பா)**

என்று பொருநராற்றுப்படையில் இறுதியில் அமைந்த வெண்பாபாடல் தெரிவிக்கின்றது. கரிகால் பெருவளத்தான் மேற்கொண்ட வடநாட்டுப்போரில் வெற்றிவாகை சூடி, வச்சிரநாட்டு அரசனிடம் இருந்து முத்துப் பந்தரும், மகத நாட்டு மன்னனிடம் இருந்து பட்டிமண்டபமும், அவந்திநாட்டு வேந்தனிடம் இருந்து வாயிற்தோரணமும் திறையாகப் பெற்று வந்தான் எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

கரிகால் பெருவளத்தான் தன்னிடம் வரும் இரவலர்களுக்கு, வாரி வழங்கும் இயல்புடையவனாகத் திகழ்ந்துள்ளான். மேலும், பட்டினப்பாலை என்னும் நூலைப் பாடிய புலவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார்க்கு பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் வழங்கிப் போற்றினான். என்பதை,

**“தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்**
**பத்தொடு ஆறுநூறு ஆயிரம் பெறப்**
**பண்டு பட்டினப்பாலை கொண்டதும்” (கலிங்கத்துப் பரணி, 200-202)**

மேற்கண்ட கலிங்கத்துப்பரணி பாடலால் அறியமுடிகின்றது.

**ஆட்சிச் சிறப்பு**

கரிகால் பெருவளத்தான் போர் களத்தில் வெற்றிவாகை சூடி மகிழ்வடையக் கூடியவன். தன்னுடைய நாட்டு மக்களின் நலன்களைக் கருத்திற்கொண்டு மக்களின் வாழ்வியல் நிலையினை உயரச் செய்யவேண்டும் என்ற நோக்குடன், கரிகால் பெருவளத்தான் செய்த முயற்சிகளாக கடியலூர் உருத்திரங்கண்ணனார் கீழ்க்கண்ட பாடலில் குறிப்பிடுகின்றார்.

**“காடுகொன்று நாடு ஆக்கிக்**
**குளம் தொட்டு வளம் பெருக்கிப்**
**பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்**
**கோயிலொடு குடி நிறீஇ”   (பட்டி: 283-86)**

கரிகால் பெருவளத்தான் சோழ நாட்டில் காடாக உள்ள இடங்களை அழித்து முன்பு என்றும் போல குடிமக்கள் தங்கும் பகுதிகளாக்கினான். நீர் வற்றிய பல நீர்நிலைகளைத் தோண்டி வளம்பெறச் செய்து குடிமக்களைப் பாதுகாத்துள்ளான். என்பதை கடியலூர் உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலை வாயிலாக கூறுவதன் மூலம் கரிகால் பெருவளத்தானின் நிர்வாகம் தொடர்பான ஆளுமைப்பண்பினை அறியமுடிகின்றது.

**விருந்தோம்பல் பண்பு**

கரிகால் பெருவளத்தான் தன்னிடம் பரிசில் பெறுவதற்காக வரும் இரவலர்களை (கலைஞர்களை) இரவலர்களாக எண்ணாது தண்ணிடம் வந்த விருந்தினர் என்ற எண்ணத்திலே அவர்களை அணுகுவான். தனக்கும் இரவலர்க்கும் இடையே அதிக இடைவெளி காணப்படக்கூடாது என்பதற்காக இரவலர்களுடைய பல நூல்களால் தைக்கப்பெற்ற நனைந்து பழைய ஆடையை அகற்றி, விலை மதிப்பான புத்தாடைகளை அணியச் செய்வான். மேலும், கண்டோர்முகிலோ என மயங்கும் கருநிறகூந்தலை உடைய மகளிரை, பொன்னாற் செய்தவட்டில் உணவினைப் படைக்கச்செய்து அதை இரவலர் உண்ணும்படி செய்வான் என்பதை,

**"ஈரும் பேனும் இருந்துஇறை கூடி**
**வேரொடு நனைந்து வேற்றுஇழை நுழைந்த**
**துன்னற் சிதாஅர் துவர நீக்கி**
**நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவு உரி அன்ன அறுவை நல்கி" (பொரு: 79-83)**

என்றவழியில், மேற்கண்ட பாடலில் முடத்தாமக்கண்ணியார் குறிப்பிடுகின்றார். உயர்குடிப் பிறந்தோர், நண்பர், பெரியோர் முதலியோரை வரவேற்கும் போதும், வழியனுப்பும் போதும், அவர்களை ஏழடி எதிர் சென்று வரவேற்றலும், ஏழடி பின் சென்று வழி அனுப்பி வைத்தலும் ஆகிய மரபினைப் பின்பற்றி கரிகால் பெருவளத்தானும் தம்மிடம் வரும் பரிசிலர்களை தம் விருந்தினராகவே கருதி, 'காலின் ஏழ்அடிப் பின்சென்று' (பொரு.166) ஏழடி பின் சென்று வழியனுப்புகின்றான் என்று பொருநராற்றுப்படையில் முடத்தாமக்கண்ணியார் கூறுவதன் வாயிலாக கரிகால்பெருவளத்தானிடம் நிலைபெற்று இருந்த விருந்தோம்பல்பண்பு காணலாகின்றது.

## கொடைப்பண்பு

கரிகால் பெருவளத்தான் தன்னிடம் வரும் இரவலர்களைக் (கலைஞர்கள்) கன்றை ஈன்ற பசு எப்படி தான் ஈன்ற கன்றை பார்க்குமோ அதே போன்று தம்மிடம் வருபவர்களை நோக்குவான். இரவலர்களுக்கு புத்தாடை வழங்கி இயற்கையாக, தனக்கு இதழ்கள் அற்ற பொற்றாமரை மலரை விறலியர் சூட வழங்குவான். மேலும்,உடுக்கை போன்ற அடியினை உடையக் கன்றோடு, களிற்று யானையையும் அதன் பிடியையும், நாங்கள் விரும்பிய ஆடை அணிகலன்களையும் பெற்றுக் கொள்ளுங்கள் எனத் தேவைக்கு அதிகமாகவே வழங்கி, இனிவரும் எந்தக் காலத்திலும் வறுமை நிலை எங்களை வந்தடையாதபடி பரிசில் நல்கினான் கரிகால் பெருவளத்தான் என்பதை,

**"துடிஅடி அன்ன தூங்குநடைக் குழவியொடு**
**பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்க! என**
**தன்அறி அளவையின் தரத்தர யானும்**

**என்அறி அளவையின் வேண்டுவ முகந்து கொண்டு**
**இன்மை தீர வந்தனென்"                (பொரு.125-29)**

இப்பாடலடிகளின் வாயிலாக முடத்தாமக்கண்ணியர் கூறுவதிலிருந்து, கரிகாலனின் கொடைப்பண்பினை அறியமுடிகின்றது.

**வீரம்**

பகைவர்களை அழித்து வென்ற வேலினையும், அழகும் அச்சமும் விளைவிக்கும் பல தேர்களையும் உடைய இளஞ்சேட்சென்னியின் மகனான கரிகால் பெருவளத்தான் தன் தாயின் வயிற்றுக் கருவில் இருக்கும் பொழுதே அரசுரிமைபெற்றவன் ஆவான். மேலும், சிங்கக்குட்டியின் குருளையானது தன்தாயிடம் பால் அருந்தும் இளமைப் பருவத்திலேயே, தனக்கு இரையாகப் பெரிய ஆண் யானையைக் கொன்றாற் போன்று, கரிகாற் பெருவளத்தான் வெண்ணி என்னும் போர்க்களத்தில் பனைமாலையும் வேப்பம்பூ மாலையும்சூடிய இருபெருவேந்தரையும் வென்றான். என்பதனை, பின்வருமாறு முடத்தாமக்கண்ணியர் குறிப்பிடுகின்றார்.

**"ஆளி நன்மான் அணங்குடைக் குருளை**
**மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி**
**முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரென**
**தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு"  (பொரு. 139-142)**

கரிகாற் பெருவளத்தான் இளமைப் பருவத்திலே சிங்கக் குருளைபோன்று செயல்பட்டான் என்று முடத்தாமக்கண்ணியர் கூறுவதிலிருந்து கரிகாலனின் வீரத்தின் தன்மை குறித்து அறிந்து கொள்ள முடிகின்றது.

சோழ மன்னர்கள் சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி, நலங்கிள்ளி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், கோப்பெருஞ்சோழன், உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி, உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி, கரிகால் பெருவளத்தான் ஆகியோரது

எண்ணியது முடிக்கும் ஆற்றல், ஆராய்ந்து அறியும் பண்பு நலன், வீரம், கவித்திறம், வீரம், பண்பு நலன்கள், ஆட்சிச் சிறப்பு, பிறரை மகிழ்வித்து மகிழும் பண்பு, ,பரிசிலருக்குப் பொருள் வழங்குதல், நட்பிற்காக கொடையளித்தல், விருந்தோம்பல் பண்பு ஆகியவற்றால் ஆளுமைப் பண்பினை புலவர்கள் வெளிப்படுத்துகின்றனர்.

**பாண்டிய வேந்தர்கள்**

சேர, சோழ வேந்தர்களின் தலைநகரங்களை விடப் பாண்டியரின் மதுரையும், கொற்கையும் சிறந்து பேசப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டுப் பேரூர்களில் மதுரையைப்போல் கொற்கையும் சிறப்புற்று விளங்கியுள்ளது. இக்கொற்கைப் பட்டினத்தை இலக்கியங்கள் பலவாறு சிறப்பித்துள்ளன. அறம் பிறழாது பாண்டியர் கொற்கையைக் காத்து வந்தனர் என்பதை,

**“மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்**
**கொற்கை” (அகம்: 27, 8-9)**

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகளால் அறியலாகின்றது.

“ஆதிகாவியமென வடமொழியினரால் போற்றப்படும் வால்மீகி இராமாயணத்தில் கூட சுக்ரீவன் வானரக் கூட்டங்களைப் பார்த்து முத்துக்களாலும், பொன்னாலும் அழகுடையதாக விளங்கும் பாண்டிய மன்னர்களின் வாயிற்கதவைப் போய் காண்பீர்”[47] என்று கூறுவதன் வாயிலாக இராமாயண காலத்திலேயே பாண்டிய மன்னர்கள் செல்வச் சிறப்புடன் வாழ்ந்து வந்தனர் என்பதை உணரமுடிகின்றது. பாண்டிய மன்னர்கள் வீரத்திலும் செல்வத்திலும் மட்டுமல்லாது சிறந்த கவி இயற்றும் தமிழ் புலமையிலும் சிறந்து விளங்கினர் என்பதைச் சங்க இலக்கியங்களின் வாயிலாகக் காணமுடிகின்றது.

பாண்டிநாட்டு மன்னர்களால் முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் ஆகிய மூன்று தமிழ்ச்சங்கங்களும் ஆதரிக்கப்பட்டு நடந்து வந்துள்ளன. அச்சங்கங்களில் பாண்டிய மன்னர்களும் புலவர்களாய் விளங்கியுள்ளனர்

---

[47]. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு.

என்பதைப் 'பாண்டியாநின் நாட்டுடைத்து நல்ல தமிழ்' என்ற ஔவை பிராட்டியார் திருவாக்கும், 'வீயாத் தமிழுடையான் பல்வேற் கடற்றானைப் பாண்டியன்' என்னும் பழம்பாடற் பகுதியும், 'தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின் மகிழ்நனை மறுகின் மதுரை' என்று சிறுபாணாற்றுப் படையில் பாண்டிய நாட்டில் தமிழ் மொழியும், அதனை இயற்றும் பாவலர்களும், சிறப்பாகப் போற்றப்பட்டுள்ளனர். புலவர்களுக்கு வேண்டியவற்றை வாரி வழங்கும் புரவலர்களாக பாண்டிய மன்னர்கள் திகழ்ந்துள்ளனர் என்று ஊகிக்க முடிகிறது.

பாண்டிய மன்னர்களின் அதிகாரத்தின் கீழ் இருந்த பாண்டிய மண்டலம் என்பது மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் ஆகிய மூன்று வள நாடுகள் புதுக்கோட்டையில் வெள்ளாற்றுக்குத் தெற்கிலுள்ள பகுதியையும் தன்னகத்தே கொண்ட நிலப்பகுதியாகும். மண்டலத்தின் உட்பிரிவுகளாக கூற்றங்களும், வளநாடுகளும் திகழ்ந்துள்ளன. "தென்பாண்டி நாட்டிலுள்ள கொற்கை பாண்டியரது முதன்மை வாய்ந்த துறைமுகப்பட்டினமாக விளங்கியதால் இளவரசர்கள் இந்நகரில் தங்கியிருத்தலே வழக்கமாக இருந்தது என்ற உண்மையை ஆரியப்படைக் கடந்த நெடுஞ்செழியன் உயிர் துறந்த பின்னர் கொற்கையிலிருந்த இளவரசனாகிய வெற்றிவேற் செழியன் மதுரை மாநகரத்திற்குச் சென்று முடிசூட்டிக் கொண்டான்"[48] என்று இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் உரைபெறுகட்டுரையில் கூறியுள்ளதன் மூலமாக அறியமுடிகின்றது.

மூவேந்தர்களுள் பாண்டியரே மிக நீண்ட காலம் ஆட்சி புரிந்த பெருமைக்குரியவர்களாகத் திகழ்கின்றனர். கி.பி.17ம் நூற்றாண்டின் தொடக்கம் வரை ஆட்சியினை நிலைநிறுத்திய பெருமை பாண்டியர்க்கு உண்டு. கி.பி.300 முதல் 600 வரை களப்பிரர் ஆட்சியிலும், கி.பி.850 முதல் 1250 வரை பிற்காலச் சோழர் ஆட்சியிலும் பாண்டியரின்செல்வாக்கு குறைந்து காணப்பட்டாலும் ஆட்சி உரிமையை இழக்கவில்லை. மதுரையை விட்டுத் திருநெல்வேலி முதலிய இடங்களுக்குத் தம் தலைநகரை மாற்றிக் கொண்டு

---

[48].டி.வி. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு.

குறுநிலமன்னர்கள் போல் ஆட்சி செய்து கொண்டே இருந்தனர். சேரர், சோழர் போன்று முற்றிலும் ஆட்சி உரிமையை இழக்கவில்லை. பதிமூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டியர், தொண்டைநாடு, சேரநாடு முதலியவற்றை வென்று நெல்லூர் வரை தமது ஆளுகையைப் பரப்பினர். கி.பி.மூன்றாம் நூற்றாண்டிளவில் சேரர் செல்வாக்கு இழந்து தம் பண்டைப் பெருமையையும் இழந்தனர். கரிகாலன் கிள்ளிவளவன் காலத்தில் சிறப்புற்றிருந்த சோழர் ஆட்சி, பல்லவர் காலத்தில் சிறப்புற்று இருந்து மீண்டும் கி.பி.800-1275 வரை சிறப்பாக ஆட்சி செலுத்தி முடிவு எய்தியுள்ளது.

பழங்காலத்தில் தொடங்கிய பாண்டியர் ஆட்சி பதினேழாம் நூற்றாண்டின் இறுதிவரை காணப்படுகின்றது. தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர் என்னும் பெருமைக்குரியோராகப் பாண்டியர் விளங்குகின்றனர்.“ உலக வரலாற்றில் இவ்வளவு நீண்ட காலம் தொடர்ந்து பதவி வகித்த மற்றொரு அரச மரபினைக் காண்பது அரிது”[49] எனக் கே.வி.இராமன் கூறுவது குறிப்பிடத்தக்கதாக உள்ளது. பாண்டிய வேந்தர் வடமொழி இலக்கியங்களில் கூடுதலாகச் சுட்டப்பெறும் தமிழ் வேந்தராவர். இராமபிரானின் பாட்டன் அரசன் போசனின் தங்கை இந்துமதியை மணத்தற்குரிய சுயம்வர நிகழ்ச்சியில் பாண்டிய வேந்தன் பங்கு கொண்டான் என்று கூறும் காளிதாசர், பாண்டிய வேந்தனின் ஆற்றல், நாட்டுவளம், குலகுரு அகத்தியர் பற்றியும், பாராட்டிப் பாடியிருத்தலை இரகுவம்சம் ஆறாம் சருக்கத்தில் காணமுடிகின்றது. பாண்டிய வேந்தருள் நிலத்தருதிருவிற் பாண்டியன் தொன்மை மிக்கவன். இவன் காலத்தவர் தொல்காப்பியர் என்பதை பணம்பாரனார் தொல்காப்பியத்திற்குப் பாடிய சிறப்புப்பாயிரத்தின் மூலம் அறியமுடிகின்றது. பாண்டிய மன்னர்கள் பலரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் உள்ளன.

[49].கே.வி. இராமன், பாண்டிய வரலாறு.

**கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி**

பாண்டிய நாட்டை ஆண்ட பேரரசருள் பெரும்வழுதி என்ற பெயருடையோர் பலர் உள்ளனர். ஆனால் பெரும்பெயர்வழுதி என்ற பெயருடையவன் இவன் ஒருவனே ஆவான். பெரும்பெயர் என்ற தொடர் மிக்கபுகழ் என்னும் பொருளுடையது என்பதால், பெரும்பெயர்வழுதி வழுதியர்குலத்து வந்தாருள் எல்லாம்நிறை உடையனாதலால் வேண்டும் என்பது தெளிவாகின்றது. பெரும்பெயர்வழுதி பெயருக்கு முன்னர் வழங்கும் கருங்கை ஒள்வாள் என்ற தொடருள் கருங்கை என்பது வாள் பிடித்துக் காழ்ப்பேறிய வலிய கையெனப் பொருள்படும். ஆகவே இவன் வாட்போர் வல்ல வீரன் என்பது நன்கு புலப்படுகின்றது. பெரும்பெயர்வழுதி தொடர்பான பாடல் ஒன்று புறநானூற்றுப் பாடாண்திணையில் இடம் பெற்றுள்ளது.

**வீரம்**

பாண்டியன் கருங்கை ஒள்வாட் பெரும்பெயர்வழுதியைப் புகழ்ந்து பாடிய இரும்பிடர் தலையார் இம்மன்னனின் வீரத்தின் தன்மையினை பற்றிக் குறிப்பிடுகையில், பெரும்பெயர்வழுதி பகைவர்கள் அணுகுவதற்கு அரிதான வலிமையுடையவன். மதநீர் வலியக்கூடியதும் கயிற்றால் பிணிக்கப்பட்டதும், பெரிய துதிக்கைகளையும், உடைய யானையினது கழுத்தின் மேல் அமர்ந்து ஒருவரது செயலுக்கு ஏற்ப பரிகராமில்லாது, கொலைத்தொழில் புரியும் கூற்றுவன் கையில் உள்ளது போன்று கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதியின் கையில் உள்ள வாள் ஒளி வீசுகின்றது என்று கூறுவதன் மூலம் இம்மன்னன் போர்க்களத்தில் தனது பகைவர்களுக்கு கூற்றுவன் போன்று காட்சியளித்து அவர்களை வெல்லக்கூடியன். என்பதை,

**"பெருங்கை யானை இரும்பிடர்த் தலைஇருந்து**
**மருந்து இல்கூற்றத்து அருந்தொழில் சாயாக்**
**கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி" (புறம். 3; 11-13)**

மேற்கண்ட பாடலடிகளில் இரும்பிடர்தலையார் கூறுவதன் வாயிலாக, பெரும்பெயர்வழுதியின் வீரம் தொடர்பான ஆளுமைப்பண்பு குறித்து அறிந்து கொள்ளமுடிகின்றது.

## கொடை

கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி தனது பெயர்க்கு ஏற்றார்போல் வீரத்தில் மட்டும் சிறந்து விளங்காமல் பிறர்க்கு கொடை அளித்தலிலும் சிறந்து விளங்கினான் என்பதை, இரும்பிடர் தலையார் பின்வறுமாறு குறிப்பிடுகின்றார்.

**“நின்நசை வேட்கையின் இரவலர் வருவர் அது**
**முன்னம் முகத்தின் உணர்ந்து அவர்**
**இன்மை தீர்த்தல் வன்மையானே”** **(புறம். 3; 25-27)**

பெரும்பெயர் வழுதி தன்னைப் பாடி வரும் இரவலர்கள் தங்களுக்கு வேண்டுவனவற்றை விளங்க உரைக்கும் முன்னரே அவர்களது உள்ள வேட்கையினை அறிந்து கொள்வான். இரவலரின் முகக்குறிப்பினை கொண்டே விரும்புவதனை அளித்து தன்னை நாடி வந்த இரவலரின் துன்பத்தை போக்கும் அறிவும், அருளும், ஒருங்கே உடையவன் என்று இரும்பிடத்தலையார் கூறுவது, மேயர்சு, பிரிக்சு அவர்களின் வினாக்களில் ஒன்றான மிகக் கவனத்துடனும், மனதிற்குப் பட்டவாறும், கொடையளிக்கும் ஆளுமைப் பண்பினை காண முடிகின்றது.

## பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

குடுமி, குடுமிக்கோமான், பல்யாகசாலைமுதுகுடுமி, என்றெல்லாம் அழைக்கப்படும் இப்பாண்டியன் இயற்பெயர் குடுமி என்பதாகும். இவன் வேள்விபல ஆற்றிய விழுச்சிறப்பும் விளங்கியபெருமையும் உடையவன் என்பதை, அறிந்த சான்றோர் இவனைப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என அழைத்துள்ளனர். மேலும்,

**"கொல்யானை பல ஓட்டிக்**

**கூடாமன்னர் குழாந்தவிர்த்த**

**பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி" (வேள்விக்குடிச் செப்பேடு).**

என்று வேள்விக்குடிச் செப்பேடு குறிப்பிடுகின்றது.

## <u>போரில் அறப் பண்பு</u>

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி தன்னை எதிர்த்த பகைவர் நாட்டில் போர்தொடுக்கும் முன்பு, அந்நாட்டிலுள்ள பசும், பசுவின் இயல்பினை ஒத்தவர்களாக விளங்கும் அந்தணர்களும், பெண்களும், நோயால் உடல்நிலை நலிவடைந்தோர்கள். இறந்த தங்களது முன்னோர்களுக்குச் செய்ய வேண்டிய அரிய சடங்கு முறைகளைப் பின்பற்றி செய்வோரும், பொன்போன்ற மக்கட் பேறு அடையாதவர்களும் எனப் பலரும் கேட்பீராக நான் எனது அம்புகளை விரைவாக இந்நாட்டின் மீது செலுத்த உள்ளேன். ஆகையால், நீங்கள் அனைவரும் உங்களுக்குப் பாதுகாப்பான இடத்தை நோக்கிச் சென்றடையுங்கள் என்று எச்சரிக்கை விடுத்த பின்பே பகைவர் நாட்டின் மீது போர் தொடுப்பான். என்பதை,

**"ஆவும் ஆன்இயற் பார்ப்பன மாக்களும்**

**பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்**

**தென்புல வாழ்நர்க்கு அருங் கடன் இறுக்கும்**

**பொன்போல் புதல்வர்ப் பெறாஅதீரும்**

**எம்அம்பு கடிவிடுதும், நும்அரண் சேர்மின்" (புறம். 9; 1-5)**

என்று நெட்டிமையார் கூறுவதன் மூலம் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போர் புரிதலில் கூட, அறத்தொடு செயல்படும் ஆளுமைக் குணத்தினை அறியமுடிகின்றது.

## <u>கொடைப் பண்பு</u>

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை காரிக்கிழார் இவ்வுலகின்மேல் குளிர்ந்த கதிர்களை உடைய நிலவு போன்று தன்னிடம் வரும்

இரவலர்களுக்குக் குளுர்ச்சி தரக்கூடியவன் என்கிறார். மேலும், நெட்டிமையார், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி தன்னிடம் வந்து தன் இசையால் மகிழ்வித்த பாணர்களுக்கு பரிசிலாக பொன்னாலாகிய தாமரை மலரைப் பூவாக சூட்டிவிட்டான். தன்னைப் பற்றி பாக்கள் இயற்றிய புலவர்களை பட்டமுடைய நெற்றியுடன் விளங்கும் யானையுடன் அலங்கரிக்கப்பெற்ற தேர்களுக்கு உரிமை உடையவர்களாக ஆக்குவான். இதனை,

**“பாணர் தாமரை மலையவும் புலவர்**
**பூநுதல் யானையொடு புனை தேர் பண்ணவும்” (புறம். 12; 1-2)**

மேற்கண்ட பாடலில் நெட்டிமையார் குறிப்பிடுவதால் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிவழுதியின் கொடைப்பண்பு நன்கு வெளிப்படுகின்றது.

**வீரம்**

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியோடு போரிட்டுத் தோற்ற மன்னர்கள் பலராவர் என்பதை, பின்வரும் பாடலில் நெட்டிமையார் குறிப்பிடுகின்றார்.

**“விளங்கு பொன் எறிந்த நலம்கிளர் பலகையொடு**
**நிழல் படுநெடு வேல் ஏந்தி ஒன்னார்**
**ஒண்படைக் கடுந்தார் முன்பு தலைக்கொண்மார்**
**நசைதர வந்தோர் நசை பிறக்கு ஒழிய” (புறம். 15; 12-15)**

இரும்பால் செய்யப்பட்டதும், ஆணியும், பட்டமும் இடப்பட்ட கேடயத்துடன், ஒளிவிடக் கூடிய நெடிய வேலினையும் ஏந்திய பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிவழுதியின்பகைவர்கள் ஒளி பொருந்திய படைக்கலங்களைக் கொண்டுள்ள தூசிப்படையுடன் போரிடுவர். அப்படையின் வீரத்தின் வலிமையை அழிக்குமாறு, தாம் ஆவல் கொண்டு வந்த உன் பகைவர்கள் அவ்வாவல் நீங்கி இகழ்ச்சியுடன் வாழ்பவர்கள் ஆயினர்

என்பதில் இருந்து முதுகுடுமிப் பெருவழுதியின் வீரத்தின் ஆளுமைப் பண்பினை நெட்டிமையார் கூற்றின் வாயிலாக அறியலாகின்றது.

**<u>இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்</u>**

இலவந்திகைப் பள்ளி என்பது நீரை வேண்டுமளவு நிறைத்துக் கொள்ளவும், அந்நீரைத் தேவையற்ற பொழுது வெளியேற்றிக் கொள்ளவும் வல்ல பொறிகள் அமைந்த வாலியை நடுவிடத்தே பெற்று நறுமணம் வீசும் பல்வேறு மலர்கள் நிறைந்த மரங்களால் மாண்புற்ற மலர்ப்பூஞ்சோலை ஆகும். நன்மாறன் என்ற இப்பாண்டிய மன்னனும் இத்தகைய இலவந்திகைப் பள்ளி ஒன்றில் இறந்த காரணத்தினால் இவன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்று அழைக்கப்படுகின்றான்.

**<u>அறிவுரை கேட்கும் பண்பு</u>**

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு தீயதகன்ற நற்கருத்தை அறிவுறுத்த எண்ணியதை மருதன் இளநாகனார் பின்வரும் பாடலடிகளில் குறிப்பிடுகின்றார்.

**"நமர் எனக் கோல் கோடாது**
**பிறர் எனக் குணம் கொல்லாது**
**ஞாயிற்று அன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத்து அன்ன வண்மையும்" (புறம். 55; 11-15)**

தவறு செய்த ஒருவன் தனக்கு மிகவும் வேண்டப்பட்டவன் என்பதற்காக, அவன் செய்த தவற்றினை பொறுத்துக் கொள்வது, தனது செங்கோலினை வளையச் செய்தல் போன்றது. ஒருவர் தனக்கு பிடிக்கவில்லை என்றாலும், அவரிடம் இடம் பெற்றுள்ள நற்குணங்களைப் போற்றாமல் இருக்கக்கூடாது. பகைவர்களிடம் ஞாயிற்றைப் போன்ற வெம்மையான ஆற்றலுடைய வீரமும், தம்மிடம் வருபவர்களுக்குத் திங்கள் போன்ற குளிர்ந்த பெரிய இடத்தையும் வானில் இருந்து பெய்யும் மலையானது எவ்வாறு தனக்கு வேண்டியர்,

வேண்டாதவர் எனக் கருதாது, அனைவருக்கும் பயன்படும் வகையில் பொழிதல் போன்று தன்னிடம் வருபவர்களைத் தனக்கு வேண்டியவர் வேண்டாதவர் எனக் கருதாது அவர்களின் வறுமை நிலையினை ஒழிக்கும் அளவிற்குக் கொடை அளிப்போனாக திகழ வேண்டும் என்று மருதன் இளநாகனார் கூறுவதனால், இளவந்திகை பள்ளித் துஞ்சிய நன்மாறனின் அறிவுரை கேட்கும் பண்பினை அறியமுடிகின்றது.

**<u>சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன்</u>**

வேந்தர்கள் இன்பம் துய்த்து மகிழ்ந்து வாழும் இடங்களான இலவந்திகைப் பள்ளி, வெள்ளியம்பலம் போலச் சித்திர மாடமும் ஒன்றாகும். சித்திரமாடம் என்பது ஓவியச்சாலை அல்லது ஓவியக்கூடம் ஆகும். பழந்தமிழ் அரசர்கள் காவிய வளர்ச்சியிலும் கருத்துடையவர்களாக விளங்கியதைப்போன்று, போன்றே ஓவிய வளர்ச்சியிலும் கருத்துடையராவர். நன்மாறன் ஓவியக்கூடம் ஒன்றில் இருந்து ஓவியத்தில் ஊன்றிய உள்ளம் உடையவனாய் அங்குள்ள ஓவியங்களின் உணர்வில் மகிழ்ந்து வாழ்ந்திருந்த காலத்தே மாண்டமையால் இவன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் என அழைக்கப் பெற்றுள்ளான்.

**<u>இருவேறு பண்புகள்</u>**

பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் தன்னிடம் வரும் இரவலர்களுக்குப் பரிசில்களை வாரி வழங்குவதில் வல்லவனாக இருந்தாலும், இம்மன்னனிடம் இருவேறு பண்புகள் காணப்படுவதாக மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்குறிபிட்டுள்ளதை,

> **“காய்சினம் தவிராது கடல் ஊர்பு எழுதரும்**
> **ஞாயிறு அனையை நின் பகைவர்க்கு**
> **திங்கள் அனையை எம்மனோர்க்கே”   (புறம். 59; 5-7)**

என்ற அடிகளில் காணமுடிகின்றது.

நன்மாறன் தனது பகைவர்களுக்கு வெப்பம் நீங்காது கடலிடத்தில் தோன்றும் கதிரவன் போன்று, துன்புறச் செய்யக் கூடியவனாகத் திகழ்ந்துள்ளான். நன்மாறன் இரவலர்களின் வறுமை என்னும் கொடிய நோயினை விரட்டியடித்து, அவர்களுக்கு வேண்டுவனவற்றை வாரி வழங்கி சந்திரனின் நிழலில் கிடைக்கும் குளிர்ச்சி போன்று நன்மாறன்தனது அரண்மனையை திகழச் செய்கின்ற காரணத்தினால் நன்மாறனின் நிர்வாகம் தொடர்பான ஆளுமைப்பண்பு வெளிப்படுகின்றது.

<u>அறிவுடை நம்பி</u>

பாண்டியன் அறிவுடைநம்பி என இவன் பெயர் ஏடுகளில் எழுதப் பெற்றுள்ள நிலை- இவன் பாண்டியர் வழிவந்தவன் என்பதை அறிவிக்கிறது. ஆடவரிற் சிறந்தானை நம்பி என்று கூறுவதும், பெண்டிரிற் சிறந்தாளை நங்கை என்று கூறுவதும், தமிழ்நூல் மரபு ஆகையால் அறிவுடை என்ற அடை இவன்பெயர் முன் இடப்பெற்றுள்ளமையால், பாண்டியன் அறிவுடை நம்பி ஆடவரிற் சிறந்தவன் என அறியலாகின்றது. இம்மன்னன் செந்தமிழ்ப் புலமை மிக்கவனாகவும், கேள்விச் செல்வம், பொருட்செல்வம் உடையவனாகவும், கொடை வள்ளலாகவும் அறிஞர் பலர் போற்றுதற்கேற்ற புகழ்மிக்கவனாகவும் திகழ்ந்துள்ளான். மேலும், அறிவுடை நம்பி நாட்டின் தேவையை நன்கு உணர்ந்த நல்லரசனாவான். நாட்டாட்சிக்கு வேண்டும் நல்லறிவை அறிந்தார் வாய்க்கேட்கும் அவாவுடையவனாகவும் விளங்கியுள்ளான்.

<u>நல் அறிவுரைகளை மதிக்கும் பண்பு</u>

பாண்டியன் அறிவுடைநம்பி தன் நாட்டின் குடிமக்களிடம் வரி வாங்கும் முறையை அறிவுறுத்த எண்ணிய பிசிராந்தையார்,

**“காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே**
**மாநிறைவு இல்லதும் பல் நாட்கு ஆகும்**
**நூறு செறு ஆயினும் தமித்துப் புக்கு உணினே**
**வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்**
**அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே**

**கோடி யாத்து நாடு பெரிது நந்தும்" (புறம். 184; 1-6)**

மேற்காணும் பாடல் மூலம் விளக்குகின்றார்.

ஒரு மாவிற்குக் குறைந்த நிலமாயினும், அதில் விளைந்த நெற்கதிரை அறுத்துக் கவளமாகத் திரட்டிக் கொள்ளின், யானைக்கும் பல நாட்களுக்கு உணவாக அது பயன்படும். நூறு வயல்களிடத்து விளைந்த நெற்கதிராயினும் யானை தானே தனித்துச் சென்று புகுந்து உண்ணுமாயின், அதன் வாயில் புகுந்த நெற்கதிர்களை காட்டிலும், அதன் காலடியில் பட்டு அழிந்த நெற்கதிர்கள் மிகுதியாக இருக்கும். அத்தன்மையால் அறிவுடைய அரசன் தாம் கொள்ளும், அரசிறையைக் கொள்ளும் நெறியறிந்து, குடிமக்களை வருத்தாது பெறுதல் வேண்டும். இவ்வாறு செய்யும் மன்னனின் நாடு கோடிப் பொருளினை ஈட்டிக் கொடுத்துச் செழிப்படையும். மாறாக மன்னன் தன் குடிமக்களை வருத்தி அரசிறை பெறும் நாடானது, யானை புகுந்த நிலம் போன்று பாழ்படும் என்ற செய்தியிலிருந்து பாண்டியன் அறிவுடை நம்பி என்பவன் பிறர் கூறும் நல்அறிவுரைகளை மதித்துப் போற்றும் பண்பு உடையவன் என்பதனை உணரமுடிகின்றது.

**கவித்திறம்**

பாண்டியன் அறிவுடை நம்பி தம் நாட்டினை நல்லமுறையில் ஆட்சி செய்ததோடு அல்லாமல் செந்தமிழில் அழகிய சில பாடல்கள் இயற்றும் கவித்திறம் மிக்கவராகவும் விளங்கியுள்ளான். மக்கட்பேறு சிறப்பு பற்றி அறிந்த பாண்டியன் அறிவுடை நம்பி, உலகில் படைக்கப்பட்ட பல செல்வங்களை தனக்கு உரிமையுடையனவாக கொண்டு பலரோடு அமர்ந்து உண்ணும் செல்வத்தை உடையவர்களாக இருந்தாலும், குறுககுறுக நடந்து வந்து தன்னுடைய சிறு கையினை நீட்டி உணவுக் கலத்தில் உள்ளனவற்றைத் தரையிலே இட்டும், பிசைந்து தோண்டியும், வாயில் கவ்வியும், கையால் துழாவியும், நெய்யால் செய்யப் பெற்றதாகிய சோற்றைத் தனது உடம்பில் சிதறியும், அறிவை இன்பத்தால் மயக்கும் புதல்வரைப் பெறாதவர்களுக்கு உயிர் வாழ்வதால் முடிக்கக்கூடிய பொருள் இல்லை என்பதை,

**“குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லை – தாம் வாழு நாளே” (புறம். 188; 3-7)**

என்ற பாடலின் மூலம் உலகோர் அறியும் வண்ணம், பாண்டியன் அறிவுடை நம்பி மக்கட்பேறு குறித்து பாடியுள்ளதால் அறிவுடைநம்பியின் கவித்திறம்குறித்த ஆளுமைப்பண்பு வெளிப்படுகின்றது.

**<u>தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்</u>**

“முடிகெழு வேந்தர் மூவருள்ளும் படை விளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோருள்”[50]. தலைசிறந்து விளங்கிய வேந்தன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆவான். பாண்டிய மன்னர்களில் நெடுஞ்செழியன் என்ற பெயருடையவர்கள், பிறரும் உள்ள காரணத்தினாலும் இவன் தலையாலங்கானம் என்னும் இடத்தில் முடிவேந்தர் இருவரும், வேளிராகிய குறுநில மன்னர் ஐவரும் ஆகிய ஏழு மன்னர்களை, தனது இளம்வயதிலேயே உலகம் வியக்க வென்று வெற்றி வாகை சூடியதால் இம்மன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் என்று அழைக்கப்படுகின்றான். நெடுஞ்செழியன் நல்லிசைப் புலவனாகவும், நல்லிசைப் புலவர்களை நன்கு மதித்துப் போற்றக் கூடியவனாகவும் விளங்கியுள்ளான்.மேலும், இவ்வேந்தனை மாங்குடி மருதனார் உள்ளிட்ட பல புலவர்கள் மனமுவந்து பாடியுள்ளனர். போரினால் புகழ்பெற்ற வேந்தர் எல்லோரிலும் தலை சிறந்தவன் இச்செழியன் என்பதை மதுரைக்காஞ்சி நன்கு விளக்கிக் குறிப்பிடுகின்றது.

---

[50].போ.வே. சோமசுந்தரனார், நெடுநல்வாடை.

## செந்தமிழ்ப் புலமை

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னுடைய இளம் வயதிலேயே அரசனாக முடிசூடிக் கொண்டதால்,இவன் பகைவர்கள் நெடுஞ்செழியன் நாட்டினை மிக உயர்வாக கருதிப் புகழும் புலவர்களின் செயல் நகைப்பிற்கு உரியதாகும் என தன்னுடைய மனம் வருந்துமாறு கூறியும், மேலும், நல்ல யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் படைக்கருவிகளையும் உடைய மறவர்கள் தங்களிடம் மிகுதியாக உள்ளனர் எனக் கருதி எனது வலிமையை அறியாது பகைவேந்தர்கள் சிறுமையான மொழிகளைக் கூறுகின்றனர். இதனை அறிந்த நெடுஞ்செழியன் பின்வரும் பாடலில் தனது உள்ளக்குறிப்பினை வெளிப்படுத்துகின்றார்.

**"சிறுசொல் சொல்லிய சினம் கெழு வேந்தரை**
**அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு**
**ஒருங்கு அகப்படே என் ஆயின் பொருந்திய**
**என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது**
**கொடியன் எம்இறை எனக் கண்ணீர் பரப்பி**
**குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக**
**ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவன் ஆக**
**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்**
**புலவர் பாடாது வரைகஎன் நிலவரை"     (புறம். 72; 7-16)**

என்ற பாடலடிகளின் வழியாக பாண்டியனின் சொல்வன்மையை அறிந்து கொள்ள முடிகின்றது.சினம் பொருந்திய அரசர்களை போரின்கண் வென்று, அவர்களது அதிரும் முரசத்தொடு கைப்பற்றிக் கொள்ளேன். இல்லையெனில், எனது குடை நிழலின்கீழ் வாழும் மக்கள் எம்மன்னன் கொடியோன் என்று கண்ணீர் பரப்பிப் பழிதூற்றும் கொடுங்கோலை உடையோன் ஆகுவேன். உயர்ந்த தலைமை உடனே மேம்பட்ட கேள்வியறிவு

உடைய மாங்குடி மருதன் உள்ளிட்ட புலவர்கள் என்னுடைய நாட்டினை பாடது விலகட்டும். என்னிடம் வந்து இரப்போர்க்கு அவர்களது வறுமைத் துயரத்தை விரட்டும் பொருட்களை கொடுக்க இயலாத வறுமை உடையோனாக நான்திகழ்வேன் என்று வஞ்சினத்துடன் கூறி கவிபுனையும் ஆளுமைப் பண்பினைக் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் காணமுடிகின்றது.

**<u>பொய்கூறாப் பண்பு நலன்</u>**

பாண்டியன் நெடுஞ்செழியன் தான் ஒரு பொய் கூறுவதனால் தனக்குப் பெரும்பேறு கிட்டுமே எனின் அத்தகைய பெரும் புகழையும், வெறுத்து ஒதுங்கி பொய்கூறாப் பண்புடன் வாழவே விரும்புவான் என்பதை,

**“உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்**
**பொய்சேண் நீங்கிய வாய் நட் பினையே”(மது. 197-98)**

என்ற பாடலடிகள் வாயிலாக மாங்குடி மருதனார் விளக்குகிறார்.

ஒரு பொய்யினைக் கூறுவதனால் உயர்ந்த தேவர் உலகத்தில் அருந்துகின்ற அமிழ்தத்தோடு, தேவர் உலகினைப் பெறுவதாயினும், அவற்றைத் தருகின்ற பொய்யினை நீ கைவிட்டு என்றும் மாறாத உண்மைத் தன்மையுடன் விளங்குகின்றாய் என்று, நெடுஞ்செழியனின் பொய் கூறாத ஆளுமைப் பண்பினை மாங்குடி மருதனார் குறிப்பிட்டுள்ளமையைக் காணமுடிகின்றது.

**<u>ஆட்சிச் சிறப்பு</u>**

பாண்டியன் நெடுஞ்செழின் தனது ஆட்சிக் காலத்தில் தன்னுடைய நாட்டில் வாழும் மக்களின் நலன்களில் அக்கறை கொண்டு, அவர்களது வாழ்வு சிறக்க பல குளங்களை வெட்டி, மழைநீரைச் சேமித்து உழவர்களின் விவசாய நிலங்களுக்கு பயன்படுத்திக் கொள்ளுமாறு செய்தான் என்பதை, நக்கீரர் கீழ்க்காணும் பாடலடிகளில் குறித்துள்ளார்.

**“கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்**
**படை மாண் பெருங்குள மடைநீர் விட்டென” (நற், 340; 2-3)**

கல்வி கற்காத யானையினையும், மிக விரைவாகச் செல்லக்கூடிய தேரினையும் உடையவன் பாண்டியன் நெடுஞ்செழியன். தனது ஆணையாலே செய்யப்பட்டதுமான பெரிய குளத்தில் அடைக்கப்பட்டிருந்த நீர் மடை திறந்து விடப்பட்டதால், வெளியேறியநீர் கால்வாய் வழியாகச் சேறுடைய வயலினைச் சென்றடையும். ஆகையினால், தனது நாட்டின் மக்கள் நல்வாழ்விற்காக நெடுஞ்செழியன் பல குளங்ககை வெட்டச் செய்தான் என்பது புலனாகின்றது. மேலும் மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனின் ஆட்சிச் சிறப்பு பற்றிக் கூறுகையில்,

**“நோய் இகந்து நோக்கு விளங்க**
**மேதக மிகப்பொலிந்த**
**ஓங்குநிலை வயக் களிறு**
**கண்டு தண்டாக் கட்கின் பத்து**
**உண்டு தண்டா மிகுவளத்தான்” (மது. 13-17)**

என்றும் பாராட்டுகிறார்.

பாண்டியன் நெடுஞ்செழியனின் நாட்டில் மக்கள் பசியும், பிணியும் நீங்கி அழகுடன் காணப்படுகின்றனர். மிகவும் பொலிவுடன் ஓங்கி உயர்ந்து காணப்படும் களிறானது ஓசையையெழுப்புதல் போன்று, வான் மேகமும் மழையைப் பொழிந்து நாட்டினை வளமுறச் செய்கின்றது. நோக்கி அமையாத கட்பொறியின் இனிமையினையும் மக்கள் தங்களது தேவைகளுக்கு அதிகமான உணவுப்பொருட்களை விளையச் செய்யும் செல்வவளத்துடன் காணப்படுவதாகக் கூறுவதனால் நெடுஞ்செழியனின் நிர்வாகம் தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்படுவதாகக் குறிப்பிடுகின்றார்.

கொடை

பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னிடம் வந்து வேடம் தாங்கி நடிப்பவர்களாகிய பொருநர்களுக்கு, பாரிசில் வழங்குதலை மாங்குடி மருதனார் பின்வரும் பாடலில் கூறியுள்ளார்,

**“முழவுத் தோள் முரண் பொருநர்க்கு**
**உருகெழு பெருஞ்சிறப்பின்**
**இருபெயர்ப் பேர் ஆயமொடு**
**இலங்கு மருப்பின் களிறு கொடுத்தும்**
**பொலந் தாமரைப் பூச் சூட்டியும்” (மது. 99-103)**

முழவு போன்ற தோள்களினை உடைய பொருநர்களுக்கு அச்சம் பொருந்திய பெரிய பிடியும், கன்றுடன் விளங்குகின்ற கொம்பினை உடைய களிற்று யானைகளைக் கொடுத்தான். பொருநரின் மனைவியர் சூட இயற்கையான இதழ்கள் அற்ற பொன்னாற் செய்த தாமரைப் பூவையும், விலையுயர்ந்த பல பேரணிகலன்களையும் கொடுத்து மகிழ்வான் பாண்டியன் நெடுஞ்செழியன். தனது அரண்மனை வாயிலை நாடி வருபவர்களைத் தடுத்து நிறுத்தாமல் பாணர் வருவாராக, பாடிணியர் வருவாராகச் செய்யுளாகிய புது வருவாயினை உடையப் புலவரோடு கூத்தரும் வருவாராக என்று அழைத்து மகிழும்பண்பினை,

**“வரையா வாயிற் செறாஅது இருந்து**
**பாணர் வருக பாட்டியர் வருக**
**யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக என**
**இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்**
**கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி” (மது. 748-752)**

என்று மாங்குடி மருதனார் எடுத்துரைப்பதன் மூலம், மேயர்சு, பிரிக்சு கூற்றுப்படி மேற்காணும் பாடலின்வழி நெடுஞ்செழியனிடம் இரக்கச் சுபாவம் உடைய ஆளுமைப் பண்பினைக் காணமுடிகின்றது.

## வீரம்

பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னொடு பகைத்தெழுந்த எழுவரையும் தனது அடிகளின் கீழ் அடங்கிக் கிடக்குமாறு வெற்றி பெற்ற தலையாலங்கானத்துப் போர்க்களத்தில் போரிட்டதனை,

**“கொய் சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்**
**ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப**
**சேரல் செம்பியன் சினம்கெழு திதியன்**
**போர்வல் யானைப் பொலம்பூண் எழினி**
**நார்அரி நறவின் எருமையூரன்**
**தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்**
**இருங்கோ வேண்மான் இயல் தேர்ப் பொருநன் என்று**
**எழுவர் நல்வலம் அடங்க’ (அகம். 36; 13-20)**

என்ற அகநானூற்றுப் பாடலில் நக்கிரர் எடுத்துரைக்கின்றார்.

தலையாலங்கானம் என்னும் ஊரின் பரந்துபட்ட இடமெல்லாம் இரத்தத்தால் சிவக்குமாறுபாண்டியன் நெடுஞ்செழியன்செய்தான். சேரன், சோழன், சினம் மிகுந்த திதியன், போரில் வல்ல யானைப் படைகளையுடைய எழினி, எருமையூர் தலைவன், தன் மார்பில் சந்தனத்தால் தேன் மணங்கமழும் இருங்கோ வேண்மான், விரைந்து செல்லும் தேரினை உடையவனா பொருநன் முதலிய எழுவரையும், அவர்களுடைய வலிமை எல்லாம் ஒருங்கே அடங்குமாறு ஒருநாள் ஒரு பகலிலே அவர்களது முரசோடு, வெண்கொற்றக் குடைகளையும் ஒரு சேர கைப்பற்றிக் கொண்டான் என்கிறார். மேலும் பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரம் குறித்து மருதன் இளநாகனர் பின்வரும் பாடலடியில் உவமையாக கூறுகின்றார்.

**“கொடுங் கேழ் இரும் புறம் நடுங்கக் குத்திப்**
**புலி விளையாடிய புலவு நாறு வேழத்தின்**
**தலை மருப்பு ஏய்ப்ப கடைமணி சிவந்தநின்**
**கண்ணே” (நற். 39; 4-7)**

வலிமையான புலி அஞ்சுமாறு, அதன் வளைந்த கரிய நிறம் வாய்ந்த வரிகளை குத்தி வீழ்த்தியதால், களிற்றின் தந்தத்தில் காணப்படும் குருதி போன்று, பகைவர் மீது கொண்ட சினத்தினால் நெடுஞ்செழியனின் கண்கள் சிவந்து காணப்படுகின்றன என்று மருதன் இளநாகனர் நெடுஞ்செழியனின் வீரம் குறித்த ஆளுமைப் பண்பினை வெளிப்படுத்துகின்றார்.

கல்லாடனார் பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரம் குறித்து குறிப்பிடுகையில், விண்மீன்கள் காணப்பட்ட வானத்தில் படர்ந்த இருளை அகற்ற ஞாயிறு தோன்றியது போன்று, குளிர்ச்சி பொருந்திய நிலவானது விண்ணைவிட்டு நிலவுலகில் சேர்தல் போன்று தோன்றக்கூடிய வேந்தர் இருவரும் உன்னைப் பகைத்து போரிட்டதனால் அவர்களிடம் வஞ்சினம் கூறி அவ்வேந்தர்களை வருத்துவதற்கரிய போரில் மடியச் செய்யக் கூடியவன். என்பதனை,

**"மீன் திகழ் விசும்பில் பாய் இருள் அகல**
**ஈண்டுசெலல் மரபின் தன் இயல் வழாஅது**
**உரவுச்சினம் திருகிய உருகெழு ஞாயிறு**
**நிலவுத் திகழ் மதியமொடு நிலம் சேர்ந்தாஅங்கு**
**உடல்அருந் துப்பின் ஒன்றுமொழி வேந்தரை" (புறம். 25; 1-5)**

என்ற பாடலடிகளின் வழிகல்லாடனார் குறிப்பிடுகின்றார்.

மாங்குடி மருதனார் பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரத்தின் தன்மையினை பின்வரும் பாடலடிகளில் கூறியுள்ளார்.

**"செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப**
**வியன்கண் முதுபொழில் மண்டிலம் முற்றி**
**…………………………..**
**குணமுதல் தோன்றிய ஆர்இருள் மதியின்**
**தேய்வன கெடுக நின் தெவ்வர் ஆக்கம்" (மது. 189-196)**

போர்க்களத்தில் போர்புரிந்த பகைவர்கள் போரில் தோற்றதனால் பாண்டியன் நெடுஞ்செழியன் ஏவல் கேட்டு நடப்பர். இதனால் பரந்து விரிந்த

பழைய நாவலந் தீவின்கண் அமைந்துள்ள சோழ மண்டலம், தொண்டை மண்டலம் என்னும் நிலப் பரப்புகளை தன்னுடைய நாட்டின் எல்லைகளாக ஆக்கிக் கொண்டான். இம்மன்னனானவன் இருளைப் போக்கும் மதியானது நாள்தோறும் தேய்வது போன்று தன்னுடைய பகைவர்களின் ஆற்றலை நாள்தோறும் இழக்கச் செய்யக் கூடியவன் என்று மாங்குடி மருதனார் கூறுவதில் இருந்து பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை அறிய முடிகின்றது.

பாண்டிய வேந்தர்கள் கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி, பல்யாக சாலைமுதுகுடுமிப் பெருவழுதி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், அறிவுடை நம்பி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆகியோரது வீரம், கொடைப்பண்பு, போரில் அறப் பண்பு, அறிவுரை கேட்கும் பண்பு, நல் அறிவுரைகளை மதிக்கும் பண்பு, கவித்திறம், செந்தமிழ்ப் புலமை பொய்கூறாப் பண்பு நலன், ஆட்சிச் சிறப்பு ஆகியவற்றால் ஆளுமைப் பண்பினை புலவர்கள் வெளிப்படுத்துகின்றனர்.

## தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் உள்ள புற நூல்களில் அமைந்துள்ள பாடாண்திணைப் பாடல்களில் மூவேந்தர்கள் பற்றிய வரலாறுகள் அவர்கள் அளித்த கொடைகள் அவர்களின் வீரச்சிறப்பும் வெளிப்பட்டு நிற்கின்றன.

மூவேந்தர்களின் வீரம் குறித்த ஆளுமைப் பண்பினை பகைவர்களுடன் புரிந்த போர்களின் மூலமும், வீரர்களை வழிநடத்திச் செல்லும் தலைமைப் பண்பின் அடிப்படையிலும், பகைவர் நாட்டினை போரின் மூலம் கைப்பற்ற புலவர்களால் கூறப்படும் உவமைகளின் மூலமும்அறியமுடிகின்றது.

சேர, சோழ, பாண்டியராகிய மூவேந்தர்களும் தங்களிடம் பரிசில் பெற வரும் புலவர்களுக்கும், இரவலர்களுக்கும், அவர்களின் தேவைக்கும் மிகுதியாகப் பொன்னையும் பொருளையும் கொடையாக வழங்கி புலவர் போற்றும் புரவலராக திகழ்ந்துள்ளனர்.

மூவேந்தர்கள் தங்களது நாட்டினை நன்முறையில் ஆட்சி செய்ததோடு செந்தமிழில் நல்ல பாக்கள் புனையும் பாவலர்களாகவும் விளங்கிய கவித்திறனை அறியலாகின்றது.

**சான்றெண் விளக்கம்**

26. முனைவர் ச. திருஞானசம்பந்தம் புறப்பொருள் வெண்பாமாலை, ப. 209
27. வித்துவான் ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 252
28. நாவலர். ச. சோமசுந்தர பாரதியார், தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை (புறத்திணையியல்), ப.173
29. ஆ. சிவலிங்கனார், (தொ.ஆ) தொல்காப்பியம், பொருளதிகாரம், (உரைவளம்), புறத்திணையியல், பகுதி - 2 ப. 166
30. மேலது, பக்.166-67
31. ஆர். ராம அய்யர், அசோகனுடைய சாசனங்கள், ப. 21
32. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை,சேரமன்னர் வரலாறு, ப. 19
33. வில்லிபாரதம், திரௌபதி மலையிட்டச் சருக்கம், ப. 45
34. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, சேரமன்னர் வரலாறு, ப. 26
35. மேலது, ப. 39
36. கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை, பக். 2-3
37. மேலது, ப. 81
38. மேலது, ப. 51
39. மேலது, ப. 36
40. மேலது, ப. 60
41. மயிலை சீனிவேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 2
42. மா. இராச மாணிக்கனார், சோழர் வரலாறு, பக்.15-16
43. கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை, ப. 201
44. மேலது, ப. 54
45. மேலது, ப. 119
46. மேலது, ப. 176
47. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.1
48. மேலது, ப. 115
49. கே.வி. இராமன், பாண்டிய வரலாறு, ப. 5
50. போ.வே. சோமசுந்தரனார், நெடுநல்வாடை, ப.9

# இயல் - 3

## வள்ளல்களின் ஆளுமை

உளவியலின் பல்வேறு பகுதிகளுள் ஆளுமையும் ஒரு பகுதியாக அமைகின்றது. இன்றைக்குப் பல்கிப் பெருகியுள்ள பல்வேறு துறைகளுள், சில ஆளுமை குறித்த சிந்தனைகளையும் தன்னுள் கொண்டு திகழ்கின்றது. ஆளுமை பற்றிய சிந்தனைகள் தமிழ் இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன. ஆளுமைத்திறன் பற்றிய கொள்கைகள், கருத்துகள் தற்காலத்தில் எழுச்சி பெற்றிருந்தாலும், தமிழின் பழமையான இலக்கியங்களில் ஆளுமையின் சிந்தனைப் போக்குகளைக் காணமுடிகின்றது.

சங்க இலக்கியங்களில் குறிப்பாக புறநானூற்றில் அமைந்துள்ள பாடாண் திணைப் பாடல்கள் சங்க கால மக்களின், மன்னர்களின் ஆளுமைகளை வெளிப்படுத்தும் போக்கில் படைக்கப்பெற்றுள்ளன. இந்நிலையில் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள பாடாண்திணையில் அமைந்துள்ள பாடல்களின் வழியாகப் பெறப்படும் வள்ளல்களின் ஆளுமைத்திறனை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

மேலும் வள்ளல்கள் பற்றிய குறிப்புகள் இடம்பெறும் பத்துப்பாட்டு இலக்கியங்கள் தரும் செய்திகளும் இவற்றுடன் இணைத்துத் தரப்பெற்று முழுமையான தகவல்களைப் பெறும் நிலையில் இவ்வியல் அமைக்கப்பெற்றுள்ளது.

**<u>வள்ளல்களின் சிறப்பு</u>**

வள்ளல் தன்மை உடையவர்கள் வள்ளல்கள் ஆவர். தம்மிடம் வந்து இரந்து நிற்கும், இரவலர்களுக்குப் பொன் பொருள் அளிப்பதினாலே இன்பம் கண்ட பெருமக்கள் வள்ளல்கள் ஆவர். வள்ளல்கள் தங்களின் செயல்களாலும், சிறப்பாலும், புலவர்கள் பாடும் புகழுடையவர்களாய் இருந்துள்ளனர்.

வள்ளல்கள் பலராக இருப்பினும் அவர்களை மூன்று வகையாக பாகுபடுத்திக் கூறுவது மரபு. அவை,

- தலையெழு வள்ளல்கள்
- இடையெழு வள்ளல்கள்
- கடையெழு வள்ளல்கள்

என்பனவாகும்.

“சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, விரான் முதலானோர் முதல் ஏழு வள்ளல்கள்.

அக்குரூரன், அந்திமான், கண்ணன், சந்தன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் இவர்கள் எழுவரும் இடையெழு வள்ளல்கள்.

எழினி, காரி, ஓரி, நள்ளி, பாரி, பேகன், ஆய் இவர்கள் எழுவரும் கடையெழு வள்ளல்கள்”[51] என்பர்.

தமிழக வரலாற்றில் தலை எழு வள்ளல்கள், இடை எழு வள்ளல்கள் பற்றிய குறிப்புகள் பெயரளவிற்கே கிடைக்கின்றன. கடையெழு வள்ளல்களில் ஓரி, காரி, அதியமான், ஆய் ஆகிய நால்வரும், கண்ணகி மதுரையை எரித்த பின்னரும் வாழ்ந்துள்ளமைக்கான சான்றுகள் உள்ளன. மற்றவர்கள் இக்காலத்தில் இருந்தமைக்கான சான்றுகள் கிடைக்கப்பெறவில்லை.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை எதிர்த்துத் தோற்று ஓடிவிட்ட இருபெரு வேந்தர், ஐம்பெரும் வேளிர்களில் ஒருவன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவான்.

பெருஞ்சேரல் இரும்பொறை அதியமானின் தகடூரினை அழித்தான். அன்னி மிஞிலி அதியமானைக் கொன்று அமலைக் கூத்தாடினான். இவன் ஆயை என்ற வள்ளளையும் கொன்றான் என்பர். ஓரி என்பவன் காரியைக் கொன்று அவனுடைய முள்ளூர் மலையைப் பெருஞ்சேரல் இரும்பொறைக்குக்

---

[51].ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி.

கொடுத்தான். எனவே சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளல்கள் தங்களுள் ஒற்றுமையின்றி ஒருவர் மீது ஒருவர் பகைமையால் போர்புரிந்து மாண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

**"எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்**
**விரிகடல் வேலி வியலகம் விளங்க**
**ஒருதான் தாங்கிய உரனுடை நோன்தாள்" (சிறுபாண். 113-115)**

கடையெழு வள்ளல்கள் பல போர்களைப் புரிந்த காரணத்தினால் திண்மையான தோள்களை உடையவர்களாகத் திகழ்ந்தனர். அத்தோள்களினால் இரவலர்களுக்கு உதவிபுரியும் கொடைப்பாரத்தினை சுமந்து கொண்டிருந்தனர். இவ்வெழுவர் சுமந்த செம்மையான கொடையாகிய நுகத்தடியைத் தான் ஒருவனாகத் தாங்கும் பெருமை உடையவன், ஒய்மாநாட்டு நல்லிங்கோடான் என இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள பாடான்திணைப் பாடல்களில் கடையெழு வள்ளல்கள் இடம் பெற்றுள்ளனர். மேலும், குமணன் என்ற வள்ளல் பற்றிய குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் காட்டப்பெற்றுள்ளது. இவர்களின் ஆளுமை என்பது பொருள் ஆளுமை (கொடை) ,அரசியல் ஆளுமை (வீரம்) எனப் பல நிலைகளில் சிறப்பதாக உள்ளது. குறிப்பாக கொடையும், வீரமும் வள்ளல்களின் தனித்திறன்களாகக் கொள்ளப்பெற்றுள்ளன. சங்க இலக்கியங்களில் சுட்டப்பெற்றுள்ள கடையெழு வள்ளல்களின் பொருள் ஆளுமை, அரசியல் ஆளுமை பற்றிய செய்திகள் இதன் பின்னிலையில் தொகுத்து ஆராயப்பெறுகின்றன.

<u>**கொடை ஆளுமை**</u>

கொடை என்பது பற்றி திருவள்ளுவர் கூறுகையில்,

**"வறியவர்க்கு ஒன்று ஈவதே ஈகை"[52] (குறள்: 221)**

---

[52].கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள், பரிமேலழகர் உரை.

தன்னிடம் ஒன்றும் இல்லாத ஏழை எளியோர்க்கு கேட்டதைக் கொடுப்பதே ஈகை என்று கூறுகின்றார். இது மிகச் சிறந்த பண்பாகப் போற்றப்படுகிறது.

## கொடையின் பெருமை

அறங்களில் எல்லாம் சிறந்த அறமாகக் கருதப்படுவது இரப்பவர்க்கு ஒன்று ஈதலே ஆகும். கொடை கொடுப்பதினால் மோட்ச உலகம் கிடைக்காது என்ற எண்ணம் ஏற்படுமானாலும், கொடை கொடுக்கும் அறத்தை மேற்கொள்ள வேண்டும் என்று திருவள்ளுவர் சிறப்பித்து,

**"………… மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று"[53] (குறள்: 222)**

என்ற கருத்தினை வலியுறுத்திக் கூறியுள்ளார்.

## கொடையின் முறைமை

வறியவர்கள் பொருள் வளம் பெற்ற செல்வர்களிடம் வந்து, 'யாம் வறியவர்கள்' என்று சொல்வதற்கு முன்பே குறிப்பால் உணர்ந்து தம்மிடத்திலுள்ள பொருட்செல்வத்தைக் கொடுக்க வேண்டிய அளவு ஈகை உள்ளத்தோடு கொடுக்க வேண்டும். அவ்வாறு செய்தலானது கொடை கொடுத்தலின் முறைமையினை அறிந்த செயலாகக் கருதப்படுகின்றது.

## கொடையால் வரும் இன்பம்

செல்வமுடைய மனிதர் ஒருவர் தம்மை வந்தடைந்த வறியவர்க்குத் தன்னுடைய செல்வங்களிலிருந்து கொடை கொடுத்தால், அதனைப் பெற்றவரும் இன்பம் அடைவர். அதனைக் கொடுத்தவரும் இன்பம் அடைவர். பொருளால் வறியவர் தாம் விரும்பிய பொருளைச் செல்வரிடம் சென்று கேட்கும் பொழுது, அச்செல்வம் படைத்தவரும் தம்மிடமுள்ளதை மறைக்காது மனமுவந்து கொடுத்து விடுவாரானால், வறியவர் தாம் கருதியது கிடைத்து விட்டதென்று, மனதில் தோன்றும் மகிழ்ச்சியினை முகத்திலேயே காட்டுவர்.

---

[53].கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள், பரிமேலழகர் உரை.

கொடைவழங்கியவர் இரவலரின் மகிழ்ச்சியினைக் கண்டு தானும் மகிழ்ச்சியடைவர். இதுவே பொருள்கொடுத்தாரும் பொருள்பெற்றாரும் எய்தும் இன்பம் ஆகும். இந்த இன்பநிகழ்வினை அறியாதவர்கள் இன்பம் என்னவென்று அறியாதவர்களேயாவர். இத்தகைய குணம் உடையவர்களுக்குச் செல்வம் ஒரு பாரமாக விளங்கும். தம்மிடம் உள்ள தனது தேவைக்கும் மிக அதிகமாகப் பொருள்களை, பொருட்கள் இல்லாமல் வாடும் வறியவர்களுக்கு மனமுவந்து கொடுக்காமல் வைத்திருந்து அவற்றைப் பின்பு ஏதேனும் ஒரு காரணத்தினால் இழந்து தவிப்பர். இத்தகைய பண்பு நலன்களை உடையோர் அறிவில்லாதவராகவும், அருளில்லாதவராகவும் திகழ்வர். பிறருக்குக் கொடுத்து உதவி அதனால் மகிழும் இன்பத்தை அறிந்திருக்கக் கூடியவர்கள், தாமும் அந்த இன்பத்தினை அடைய வேண்டும் என்று முயற்சி செய்வர். இக்கருத்தினையே திருவள்ளுவர்,

**“ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை**
**வைத்திழக்கும் வண்க ணவர்”[54] (குறள்: 228)**

என்ற குறளின் மூலம் காட்டுகிறார். மேலே, கூறியவற்றை ஒருங்கிணைத்துப் பார்க்கையில் வள்ளல்கள் தம்மிடம் வந்தடைந்தவர்களுக்கு வரையாது வழங்குதல் என்பது மிகச் சிறந்த ஆளுமையாகக் கருதப்பட்டுள்ளமை தெரியவருகிறது.

**வீரம்**

மனித இன வரலாற்றில் ஒவ்வொரு காலகட்டங்களிலும் ஒவ்வொரு திறமை சிறப்பாகப் போற்றப்பட்டுள்ளன. இவ்வியல்பினை அக்கால இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. சங்க காலத்தில் காதலும், வீரமும் முதன்மையாகப் போற்றப்பட்டுள்ளன.

---

[54].கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள், பரிமேலழகர் உரை.

அக்கால வீரத்தின் விளைநிலமாகப் போர்க்களமே அமைந்திருந்தன. மானஉணர்ச்சிக்காகவும், கொள்கைக்காகவும் போர் நடைபெற்றதாகிய குறிப்புகள் சங்க இலக்கிய பாடல்களுள் இடம் பெற்றுள்ளது.

போர் பற்றி டார்வின் குறிப்பிடும் பொழுது போரென்பது,

- தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் உணர்வு
- தகுதியுடையவை நிலைபெறுதல்

ஆகிய இரண்டு காரணங்களின் அடிப்படையில் நிகழும் என்பர்.

சிக்மண்ட் பிராய்டு என்ற உளவியலாளர் தன்னைத்தானே காத்துக் கொள்ள வேண்டும் (Instinct of self preservat)என்ற மன இயல்பே போருக்குக் காரணம் எனக் கூறுவர். மானிட சமூகவியலாளர்கள் போர் என்பது இயற்கையானது போரிடுவது மனிதர்களின் தொன்மையான பண்புகளில் ஒன்று என்றும், ஆனால் நாகரிகமடைந்த இனத்தில் இப்பண்பு கட்டுப்படுத்தப்படுகிறது என்றும் உரைப்பர். இதுபோல போர் பற்றிய கருத்துக்களை அறிஞர் பலரும் பலநிலையில் விளக்குகின்றனர்.

**வீரம் குறித்த அறிஞர்களின் கருத்துக்கள்**

“எதைக் கண்டும் அஞ்சாதவன், எதைக் கண்டும் குறைகூறாதவன், எப்பொழுதும் தளர்ந்து விட்டுக் கொடுக்காதவன் எவனோ அவனே வீரன்”[55] என்று அரவிந்தர் அன்னை குறிப்பிடுகிறார்.

“உண்மையான வீரம் எங்குள்ளதோ அங்கு உண்மையான அடக்கம் மிகுந்திருக்கும். அச்சம் எனும் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்த, வீரம் எனும் அணைக்கரைகளை ஓயாது நாம் எழுப்ப வேண்டும்”[56] என மார்டின் லூதர்கிங் கூறுகின்றார். வீரம் குறித்து மகாத்மா காந்தி குறிப்பிடுகையில் “கோழை,

---

[55].மது. ச. விமலானந்தம், அருமையும் பெருமையும்

[56].மேலது

தன்னுடன் பலர் சேரவேண்டும் என்று விரும்புவான். ஆனால் வீரனோ தனித்துப் போராடவே துணிவு கொள்வான்"[57] என்கிறார்.

"வீரமே, மனிதப் பண்புகளில் தலையாயது, அது இருந்து விட்டால் மற்ற எல்லாப் பண்புகளும் அமைவது உறுதி"[58] என்று சர் வின்ஸ்டன் சர்ச்சில் குறிப்பிடுகிறார்.

அறத்தை நிலைநாட்டப் போராடும் பண்பே வீரம். அறங்கள் அனைத்திற்கும் ஆதாரம் வீரம் என்று அறிஞர்பலர் கூறியுள்ளனர். மேலே குறிப்பிட்ட வீரத்தின் பண்புகளையும் உடையவர்களாக வள்ளல்கள் விளங்கினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## ஆய் அண்டிரன்

ஆய் அண்டிரன் என்ற வள்ளல் ஆய் எயினன், வேள்ஆய் எனப் பல பெயர்களால் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறுகிறான். பொதிகைமலையில் வாழ்ந்தகுடி ஆய்குடி ஆகும். இக்குடியில் பிறந்தவன் ஆய் அண்டிரன் ஆவார்.

**"வட திசையதுவே வான் தோய் இமயம்**
**தென்திசை ஆஅய் குடி" (புறம். 132; 7-8)**

என்றவாறு இவரின் குடி, வட திசையில் வானளவு உயர்ந்து விளங்கும் இமயமலையைப் போன்று தென்திசையில் சந்தன மரங்கள் நிறைந்து காணப்படுவதும், தென்றல் காற்று வீசுவதுமாகிய பொதிகை மலையில் ஆய்குடி சிறப்புற்றுத் திகழ்ந்தது என ஏணிச்சேரி முடமோசியார் சிறப்பித்துக் கூறுகின்றார். இந்நாட்டினை ஆண்டு வந்தவன்தான் ஆய் அண்டிரன் என்னும் வேளிர்குலத்தரசன் என்பதனை,

---

[57].மது. ச. விமலானந்தம், அருமையும் பெருமையும்.

[58].மேலது.

**“நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்”[59] (அகம். 69; 17)**

என உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார் குறிப்பிடுகிறார். இதன்மூலம் ஆய் அண்டிரன் பகைவர்களின் அரண்களை அழித்து அப்பகைவர்களிடம் இருந்து திறையாகப் பெறப்பட்ட பல நல்ல அணிகலன்களை இரவலர்களுக்கு வழங்கக் கூடியவன் என்பதால், வேளிருள் சிறந்தவன் என்று போற்றப் பெறுகின்றான்.

**“தெனா அது**
**ஆஅய் நல்நாட்டு அணங்குடைச் சிலம்பில்**
**கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்**
**ஏர்மலர் நிறைசுனை உறையும்**
**சூர் மகள்”[60] (அகம். 198: 13-17)**

என்று பரணர் பாடியுள்ளார்.

ஆய் என்பவனுக்கு உரிய ஆய்நாடு தெற்குத்திசையில் அமைந்திருந்தது. இம்மன்னனுக்கு உரியது பொதிகைமலை. இதன் அருகில் அமைந்துள்ள கவிரமலையில் உள்ள தெய்வம் அச்சத்தினைத் தரும். அதுபோல ஆய் என்பவனும் பகைவர்கள் கண்டு அச்சம்கொள்ளும் வலிமையுடையவனாக விளங்கினான் என்பது சங்க இலக்கியங்கள் தரும் செய்தியாகும்.

**நாட்டினை ஆளும் திறம்**

**“கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்**
**வேங்கையும் காந்தளும் நாறி”[61] (குறுந். 84: 3-4)**

என்று மோசிகீரனார் ஆய் அண்டிரனின் ஆட்சிச் சிறப்பினைக் காட்டுகிறார்.

---

[59]. அறிஞர் ச.வே. சுப்ரமணியன், சங்க இலக்கியம், எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3.

[60]. மேலது.

[61].பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை.

மேகங்கள் தவழும் பொதிகைமலைக்கு உரியவன் ஆய். இம்மன்னனது நாட்டில் வேங்கை மலர்களும், காந்தள் மலர்களும் மிகுதியாக மணம் பரப்பும் என்று கூறுவதில் இருந்து ஆய் என்பவன் அந்நாட்டின் வளங்களை ஆளுமை செய்த நிலையை அறியமுடிகின்றது.

**வீரம்**

ஆய் என்பவன் இரவலர்களுக்குக் கொடை வழங்குவது மட்டுமில்லாமல் வீரத்திலும் சிறந்து விளங்கியவன். அவன் தன்னை எதிர்த்துப் போர்புரிபவர்களை வென்று அப்பகைவர் நாட்டிலுள்ள செல்வ வளங்களைத் தன் நாட்டிற்குக் கொணர்ந்த வலிமையுடையவன் ஆவான்.

**“சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்” (சிறுபாண். 98)**

என்ற குறிப்பின்படி, இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் தன் சிறுபாணாற்றுப்படையில் வில்லினைத் தாங்கிய சந்தனம் பூசிய திண்மையான தோள்களை உடையவன் ஆய் என்ற செய்தியைப் பெறமுடிகின்றது.

முடமோசியார் ஆய் அண்டிரனின் வீரப்பண்பு குறித்துப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

**“கழல் தொடி ஆஅய் மழைதவழ் பொதியல்**
**ஆடுமகள் குறுகின் அல்லது**
**பீடு கெழு மன்னர் குறுகலோ அரிதே” (புறம். 128: 5-7)**

கழல் இடப்பட்ட வீரவாளை உடைய ஆய் அண்டிரனின், மழைமேகங்கள் தவழ்ந்து செல்லக் கூடிய பொதிகைமலைக்கு ஆடிப்பாடச் செல்லும் விறலியர் புகுந்து பரிசு பெறுதலுக்கே இயலுமே அன்றி, இம்மன்னன் மீது பகைகொண்ட வேற்றரசர்கள் அணுகுவதற்கு அரிது என்கிறார். மேலும்

**“கொங்கர்க்**
**குட கடல் ஓட்டிய ஞான்றைத்**
**தலைப் பெயர்த்திட்ட வேலினும் பலவே” (புறம். 130; 5-7)**

என்பதும் இங்கு எண்ணத்தக்கது.

ஆய் அண்டிரன் மேற்குகடற்கரையில் கொங்கர்கள் என்பவரும் போரிட்டு அவர்களைவென்று புறங்காட்டி ஓடச் செய்தான். அவ்வாறு புறங்காட்டி ஓடுகின்ற பொழுது கொங்கர்கள் போர்க்களத்திலே விட்டுச் சென்ற வேல்கள் பலவாம் எனக் கூறுவதன் வாயிலாக ஆயின் வீரம் எத்தகையது என அறிய முடிகின்றது.

**“அம்புடைக் கையர் அரண் பல நூறி**
**நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்**
**சுடர் மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்து”[62] (அகம். 69: 16-18)**

உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றானார் பாடியது இப்பாடல் ஆகும்.

ஆய் தனது பகைவர்களுடைய பாதுகாப்பு அரண்கள் பலவற்றையும் நொறுக்கியவன். மேலும் அப்பகைவர் நாட்டில் உள்ள விலைமதிப்புமிக்க அணிகலன்கள் அனைத்தையும் கொண்டுவந்து தரும் வலிமைமிக்க படைவீரர்களையும் கொண்டுள்ளான் என்று கூறுவதன் வாயிலாக ஆய் என்பவனின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினையும், வீரர்களை வழிநடத்திச் செல்லும் தலைமைப் பண்பின் ஆளுமை குறித்த செய்திகளையும் உணர முடிகின்றது.

<u>**கொடை**</u>

பிறரிடமிருந்து ஒன்றும் எதிர்பாராமல் உதவி புரிபவரே சிறந்தவர். எதிர்பார்த்துச் செய்வதும் உதவிதான் என்பது மறுக்க முடியாதெனினும் சிறந்ததாகாது. முன்னதை ஈகை என்றும் பின்னதைக் குறி எதிர்பார்த்துச் செய்யும் ஈகை என்றும் என்றும் பிரித்து உணர இயலும்.

**“வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்**
**குறிஎதிர்ப்பை நீரது உடைத்து”[63] (குறள்: 221)**

---

[62].அறிஞர்.ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம், எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி – 3.

என்பது வள்ளுவரின் கருத்தாகும். இதனடிப்படையில் ஆய் என்பவன் எதையும் எதிர்பார்க்காமல் கொடை வழங்குவதில் சிறந்தவன்.

**“இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்**
**புரவு எதிர்ந்து தொகுத்த யானை போல**
**உலகம் உவப்ப ஓது அரும்**
**வேறுபல் உருவின் ஏர்தரும் மழையே”[64] (நற். 237: 7-10)**

என்ற பாடலடிகளில் காரிக்கண்ணார் ஆய் அண்டிரனின் கொடைப்பண்பினைக் காட்டியுள்ளார்.

கார்காலத்தின் தொடக்கத்தில் உலகிலுள்ள உயிர்கள் எல்லாம் மேகத்திரள்களை கண்டு மகிழ்ச்சியடையும். அதுபோன்று, தனது அரண்மனைக்கு இரவலர் வருகையை எதிர்நோக்கிக் காத்திருக்க கூடியவன் ஆய் என்பவன். அம்மன்னனுக்குத் தன்னை நாடி வரும் இரவலர்களின் வருகையினை காண்பது மிகுந்த மகிழ்ச்சியினை அளிக்கும் எனக் கூறுவதிலிருந்து ஆயின் இரக்கப் பண்பு தொடர்பான ஆளுமைக் குணத்தினை அறிய முடிகின்றது.

**“இரவலர்க்கு ஈத்த யானையின் கரவு இன்று**
**வானம் மீன்பல பூப்பின் ஆனாது**
**ஒருவழிக் கருவழி இன்றிப்**
**பெரு வெள்ளென்னின் பிழையாது மன்னே” (புறம். 129: 6-10)**

என்ற பாடலடிகளில் இவனின் கொடைத்தன்மை வானளவு கொள்ளப்பெற்றுள்ளது.

ஆய் அண்டிரன் தன்னிடம் பரிசில் வேண்டி வந்தவர்களுக்கு அவன் வழங்கிய யானைகளைக் கணக்கிட்டு கூற முடியாது. ஏனெனில் மேகமானது மூடாமல் வான் முழுவதும் விண்மீன்கள் நிறைந்து காணப்பட்டால் அதன்

---

[63].கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள் பரிமேலழகர் உரை.

[64] .அ. நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை.

எண்ணிக்கை எவ்வளவு ஆகுமோ, அதுபோல இவன் தந்த யானைகளின் எண்ணிக்கையும் அமையும் என்று இப்புலவர் குறிப்பிட்டுள்ளார். இதன்வழி இரந்து வந்தோர்க்கு யானைகளையும், அதனை வளர்ப்பதற்கான பொருள்களையும், அதற்கு மேல் வந்தவரின் தகுதிஅறிந்து வழங்கும் வள்ளல் தன்மையும் உடையவன் ஆண் அண்டிரன் என்பது தெரியவருகிறது.

**"மாரி அன்ன வண்மைத்**
**தேர்வேள் ஆயைக் காணிய சென்மே" (புறம். 133: 6-7)**

என்ற பாடலடிகளில் மழையினைப் போன்று வாரிவாரி வழங்கும் கொடையாளனாகிய ஆய்வேளைக் காணச்செல்லுக என மூடமோசியார் கூறுவதன் மூலம் ஆய் அண்டிரனின் கொடைப் பண்பு தெரியவருகிறது.

**"நீலநாகம் நல்கிய கலிங்கம்**
**ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த**
**சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்**
**ஆர்வ நன்மொழி ஆயும்" (சிறுபாண்: 96-99)**

ஆய் அண்டின் தனக்கு ஒளிரும் நீலநாகம் கொடுத்த துணியைச் சிவபெருமானுக்கு மனமுவந்து கொடுத்தான் என்று மேற்காட்டிய சிறுபாணாற்றுப்படை அடிகள் காட்டுகின்றன.

இவ்வாறு சங்க இலக்கியப் பாடாண்திணைப் பாடல்களிலும், பத்துப் பாட்டிலும் ஆய் என்பவனின் சிறப்புகள் போற்றப்படுகின்றன. மேலும் அவனின் வீரம், கொடை முதலிய ஆளுமைப் பண்புகள் குறித்த செய்திகளும் எடுத்துரைக்கப்படுகின்றன.

**நள்ளி**

சங்கம் கண்டு முத்தமிழ் வளர்த்த நாடு பாண்டிய நாடு. அதன் தலைநகரம் மதுரை மாநகரம் ஆகும். அம்மாநகருக்குத் தெற்கே தோட்டி என்ற பெயருடைய மலையொன்று இருந்தது. தோட்டி மலையையும், அதனைச் சூழ்ந்திருந்த காடுகளையும் கொண்ட நாட்டுக்குக் கண்டீரநாடு என்பது பெயர்.

அந்நாட்டினைக் கடைச்சங்ககாலத்தில், நள்ளி என்னும் பெயருடைய சிற்றரசன் ஒருவன் ஆண்டு வந்தான்.

**“துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு**
**நளிமலை நாடன் நள்ளி” (சிறுபாண். 106-107)**

என்று இவனின் நாட்டை, மழை வளம் செறிந்த நாடு என்று குறிப்பிடுகிறது சிறுபாணாற்றுப்படை.

**“இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலனுடையான் கண்ணே உள”[65] (குறள்; 223)**

தன்னிடம் இரந்து வந்தவர்களுக்கு இல்லை என்னும் துன்பம் தரும் வார்த்தையைச் சொல்லாமல் கொடுப்பது உயர்குடிப் பிறந்தவர்களிடம் காணப்படும் பண்பு என்பார் வள்ளுவர். அதற்கேற்ப நள்ளி என்பவனிடம் சென்ற இரவர்கள் அவன் வழங்கிய கொடைப் பொருள்களால் அவர்கள் வாழ்வில் பின்பு வறுமை நிலையினை அடையா வண்ணம் வழங்கும் பண்புடையவனாக திகழ்ந்துள்ளான். வன்பரணரும் பெருஞ்சித்திரனாரும் கண்டீரக்கோ நள்ளி என்னும் இம்மன்னனைப் போற்றிப் பாடியுள்ளனர். கடையெழு வள்ளல்களிலே புகழும் வேண்டாத பெரும் வேந்தன் நள்ளி ஆவான்.

**வீரம்**

நள்ளி என்னும் மன்னன் வீரம் மிக்கவனாகத் திகழ்ந்தவன். இம்மன்னன் விற்போர் புரிவதிலும் வேட்டையாடுவதிலும் வல்லவன். இவன் குதிரைப் படையினையும் தேர்ப்படையினையும் தன்னகத்தே கொண்டவன். இவன் செல்வம் மற்றும் அருள் நிறைந்த வளமுடையவன். இவன் தனது பகைவர்களை வென்று துரத்தும் வாள்வலிமை பெற்றவன்.

கண்டீரக்கோப்பெருநள்ளி போர் முனையில் கொலைத் தொழிலை உடைய வலிய வில்லினை உடையவர்களாக விளங்கும் வீரர்களுக்குத்

[65].கௌமாரீஸ்வரி (ப.ஆ,), திருக்குறள் பரிமேலழகர் உரை.

தலைவனாக விளங்கக் கூடியவன். நள்ளியின் நாட்டின்கண் மழை பொழியும் மேகம் பொய்க்காது பெய்யும். காண்பவர்கள் வியக்கும்படி, ஒலிக்கும் வண்டுகள் தேன் உண்ணும்படி மலர்ந்த கடவுள் சூடுதற்குரிய காந்தள்மலர்கள், பல ஒன்று சேர்ந்து மணக்கும் தன்மை உடைய மலைநாட்டினை உடையவன் நள்ளி என்பதைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**“வல்வில் இளையர் பெருமகன் நள்ளி**
**சோலை அடுக்கத்துச் சுரும்பு உண விரிந்த**
**கடவுட் காந்தளுள்ளும்”[66] (அகம். 152: 15-17)**

என்று இதனைப் பரணர் பாடியுள்ளார். வலிமையான வில்லினை பெற்றுள்ளவன் நள்ளி என்பதிலிருந்து இவனின் போர்ச்சிறப்பு பற்றியும் போரின் மூலம் அவன் பெற்ற சிறப்பு குறித்த ஆளுமைப் பண்பினை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கொடை**

கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகவும், சேவை செய்தல் வேண்டும் என்னும் கொள்கையை உடையவனாகவும் கண்டீரக்கோப்பெரு நள்ளி விளங்கியுள்ளான். இவன் எதையும் பிறரிடம் இருந்து எதிர்பார்க்காமல் கொடை வழங்கும் பண்பினை உடையவன். இவன் தன்னை நாடிவரும் அனைவருக்கும் அவர்களது தேவைக்கு அதிகமாகவே பரிசில் வழங்கும் சிறப்பினை உடையவன்,

**“புரவுக் கடன் பூண்ட வண்மை யானே” (புறம். 149:5)**

என்ற இப்பாடலடிகளில், “பிறருக்குக் கொடுத்து உதவுதலைத் தனது கடமையாக மேற்கொண்ட கொடைத்தன்மை உடையவனே” என்று நள்ளியை வன்பரணர் குறிப்பிடுகின்றார்.

[66].அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் - எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி – 3.

கண்டீரக்கோப்பெரு நள்ளியின் நாட்டிடத்தில் அமைந்துள்ள காட்டில் ஒரு புலவன் தனது வறுமை நிலையின் காரணமாக தன்னால் மேலும் தொடர்ந்து நடக்க முடியாமல் ஒரு பலாமரத்தடியில் அமர்ந்தான். அப்போது அங்கு மன்னன் நள்ளி வருகைதர அதன்பின் நிகழ்ந்தவற்றைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"வல்லே**
**பெறுதற்கு அரிய வீறுசால் நன்கலம்**
**பிறிது ஒன்று இல்லை காட்டு நாட்டேம் என**
**மார்பில் பூண்ட வயங்கு காழ் ஆரம்**
**மடைசெறி முன்கைக் கடகமொடு ஈத்தனன்" (புறம். 150: 17-21)**

சோர்ந்திருந்த புலவர் இருந்த வழியாக, வேட்டைக்குச் சென்று வந்த நள்ளி தன் வேட்டையில் கிடைத்த மானிறைச்சியினை நெருப்பினில் சுட்டு அப்புலவனது பசித்துயரினைத் தானே தீர்த்தான். அப்புலவரின் பசிமயக்கம் தீர்ந்த பின்பு நான் இப்போது காட்டில் உள்ளேன் ஆகையால் தங்களுக்கு என்னால் வேறு பொருட்களை வழங்க இயலாது எனக்கூறித் தன் மார்பினில் அணிந்திருந்த முத்துமாலையைத் தனது கைகளில் அணிந்திருந்த கடகத்தோடு வழங்கினான். மேலும் அப்புலவன் இவனது பெயரையும் நாட்டையும் கேட்க அவன் சொல்லாமல் சென்று விடுகிறான்.

பின்னர் அப்புலவர், அவனைப் பற்றிப் பிறரிடம் கேட்டு அறிகிறார். அவர்கள் கொடுத்த குறிப்பின்படி, அவனது நாடு கண்டீரம் என்றும் அவனது மலை தோட்டிமலை யென்றும் அம்மன்னின் பெயர் கண்டீரக் கோப்பெருநள்ளி என்றும் அறிந்ததாக வன்பரணர் கூறுகின்றார். இவரது கூற்றால் கண்டீரக் கோப்பெருநள்ளி தனது பெயரைக் கூட அறிவிக்காது கொடை தருபவன், தன் பெயரால் வரும் புகழினையும் விரும்பாதவன் என்பதை அறிய முடிகின்றது.

**"மருந்தும் உடையையோ மற்றே இரப்போர்க்கு**
**இழையணி நெடுந்தேர் களிறொடு என்றும்**

**மழைசுரந் தன்ன ஈகை வண்மகிழ்**

**கழல்தொடித் தடக்கை கலிமான் நள்ளி”[67] (அகம். 238; 11-14)**

நள்ளி என்பவன் தன்னிடம் வந்த பாணர் முதலிய இரவலர்களுக்கு நல்ல அணிகலன்களையும் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேர்களையும், யானைகளையும் கொடையாக வழங்கும் பண்பினை உடையவன் என்பதை கபிலரின் மேற்பாடலடிகள் காட்டுகின்றன.

இவ்வாறு இம்மன்னன் இரவலர்களுக்குத் தரும் பரிசுப் பொருட்களுக்குக் கைம்மாறு ஏதும் கருதமாட்டான். என்ற செய்தியின் மூலம் இவன் புகழும் வேண்டாத பெரும் வள்ளல் என்பதையும், கொடை ஆளுமையில் உயர்வான பண்பினை உடையவன் என்பதையும் கபிலரின் பாடல் வழியாக அறிந்து கொள்ள முடிகின்றது.

வன்பரணர், பெருந்தலைச் சாத்தனார் மற்றும் பிற புலவராலும் பாராட்டப் பெற்ற நள்ளி புலவர்களின் மனதில் நீங்கா இடம்பெறும் சிறப்பினைப் பெற்றுள்ளான். இவ்வாறு சங்கஇலக்கியப் பாடாண்திணைப் பாடல்களில் கண்டீரக்கோப் பெருநள்ளியின் ஆளுமைத்திறன் போற்றப்படுகிறது.

<u>காரி</u>

மலையமான் திருமுடிக்காரி என்பவன் கடையெழு வள்ளல்களுள் ஒருவன் ஆவான். இவனுடைய குதிரை பெயரும் காரி என்பதாகும். சங்க காலப் புலவர்கள் இவனை மலையமான், மலையன், முள்ளூர் மன்னன் கோவற்கோமான், மலையமான் திருமுடிக்காரி எனவும் அழைத்தார்கள்.

காரியின் நாட்டில் மலைகள் அதிகமாக இருந்ததால் மலையமான், மலையன் என அழைக்கப்படுகின்றான். முள்ளூர் என்பது வளங்கள் நிறைந்த மலையாகும். இம்மலை அழகுடையதாகவும், நறுமணம் வீசுவதாகவும், இருள்

[67]. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் - எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி – 3.

நிறைந்ததும் ஆகிய காட்டினை உடையது. சந்தன மரங்கள் அதிகமாக இருந்தது. இதையே,

**"முரண்கொள் துப்பின் செவ்வேல் மலையன்**
**முள்ளூர்க் கானம் நாற"[68] (குறுந். 312: 2-3)**

என்ற குறுந்தொகைப் பாடலடிகள் காட்டுகின்றன.

இத்தகைய மலையின் இடையில் அமைந்த நாட்டை முன்னொருகாலத்தில் மலையமான்கள் என்னும் வீரக்குடியினர் ஆண்டு வந்தனர். இவர்கள் ஆண்டு வந்ததால் இந்நாடு மலையமான் நாடு என்று பெயர் பெற்றது. பிற்காலத்தில் இது மலநாடு என மாறி வழங்கலாயிற்று.

காரியின் தலைநகர் தற்காலத்தில், தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள திருக்கோவலூர் என்னும் தலைநகராகும். இந்நகரிலிருந்து, காரி மலையமான் நாட்டை ஆண்டு வந்தான்.

இவன் பல போர்களில் மூவேந்தர்களுக்கு உறுதுணையாக விளங்கினான். மூவேந்தர்களும் தமக்கு எதிரானத் தனித்தனி போர்களில் வெற்றிவாகை சூட இவன் உதவினான். மூவேந்தர் மூவரும் சண்டையின்றி ஒன்றாகக் கூடிய ஒரு வேளையில் மூவரும் தனித்தனியாக காரியின் பெருமைகளை கூறி வியந்து காரிக்கு சிறப்பளிப்பதற்காக அவர்கள் சூடிய முடியை, மாலையை அவனுக்கும் சூட்ட விரும்பிச் சூட்டினர்.

இந்நிகழ்விற்கு முன்புவரை, மலையமான் காரி என அழைக்கப்பட்ட இம்மன்னன், இந்நிகழ்விற்குப் பிறகு அதாவது முடி பெற்றபின், திருமுடிக்காரி என்று அழைக்கப்பட்டான். இவன் தனது வீரம், கொடை முதலிய பண்புகளால் புலவர் பலரால் போற்றப்படுகின்றான்.

---

[68].பெ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ) குறுந்தொகை.

## வீரம்

செஞ்தீச்சுடரைப் போல ஒளிவிடக்கூடியதும், காண்பவர்களுக்கு அச்சம் தரக்கூடியதுமான நெடிய வேலினையும், வீரக்கழல் அணியப் பெற்ற தடக்கைகளையும் உடையவன் காரி மன்னன் என்பதை,

**"நெடுவேல்**
**கழல்தொடித் தடக்கைக் காரி" (சிறுபாண். 94-95)**

எனச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. இவன் சிறந்தவீரன், குதிரை ஏற்றம், தேர்ஏற்றம், விற்பயிற்சி முதலியவை நன்கு பயின்றவன் என்பதைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"உடலுநர் ஊக்கார்**
**கழல்புனை திருந்து அடிக்காரி நின்நாடே**
**அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே**
**வீயாத் திருவின் விறல்கெழு தானை**
**மூவருள் ஒருவன் 'துப்பு ஆகியர்' என**
**ஏத்தினர் தரூஉம் கூழே" (புறம். 122: 1-6)**

என்ற கபிலரின் பாடல் காரியின் பண்புநலன்களைச் சுட்டுவதாக உள்ளது.

வீரக்கழல்களினால் சிறந்து விளங்கும் அடிகளை உடைய காரியே! உனது வீரத்தின் தன்மையினை அறிந்த பகைவர்கள் உன் நாட்டின் மீது துணிந்து படையெடுத்து வரமாட்டார்கள். அழியாத செல்வத்தையும் பல போர்க்களங்களில் வெற்றியைக் கைக்கொண்ட படையை தன்னுடையதாக கொண்ட மூவேந்தர்களுள் ஒருவன் காரியை தனது படைக்கு துணையாக ஆவாயாக, என்று கூறுவதன் வாயிலாகக் காரியின் வீரத்தின் ஆளுமைப் பண்பினை அறிந்து கொள்ள முடிகின்றது.

**“குன்றத்து அன்ன களிறு பெயரக்**

**கடந்து அட்டு வென்றோனும் நிற்கூறும்மே**

**வெலீஇயோன் இவன் எனக்**

**கழல் அணிப் பொலிந்த சேவடி நிலம்கவர்பு**

**விரைந்து வந்து சமம்தாங்கிய**

**வல்வேல் மலையன் அல்லன் ஆயின்**

**நல்அமர் கடத்தல் எளிதுமன் நமக்கு எனத்**

**தோற்றோன் தானும் நிற்கூறும்மே” (புறம். 125: 9-16)**

என்ற பாடலின் வழி, மலையினை போன்று உயர்ந்ததாகக் காட்சியளிக்கும் யானை இறக்கும்படி அதனை எதிர்நின்று கொன்று வென்றவனும், நம்மை வெல்லச்செய்பவனும் இவனே. தனது கால்களில் வீரக்கழல் அணிந்து தான் விரும்பிய நாட்டினை தனதாக்கிக் கொள்ளும் பொருட்டு விரைந்து வந்து போரைத் தாங்கிய வலிமை உடைய வேலைக் கொண்ட மலையமான் போர்க்களத்திற்கு வாராதிருந்தால் நாம் போரில் வெற்றியடைதல் எளிதாக இருந்திருக்கும் என்று தோற்றவனும், நம்மைத் தோற்கச் செய்தவன் இவனே என்று காரியாகிய உன்னையே கூறுவான் என மலையமான் திருமுடிக்காரியின் வீரம் குறித்து வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் குறிப்பிடுகிறார்.

**“துஞ்சாமுழவின் கோவற் கோமான்**

**நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்துறை” (அகம். 35: 14-15)**

முழவின் இன்னிசை முழக்குதலை உடைய கோவிலூர்க்குத் தலைவன் காரி என்று அகநானூறு காட்டுகிறது. இவன் பெரிய தேரினை உடையவன். இவனிடம் காரி என்னும் இவன் பெயரையே தனதாகக் கொண்ட குதிரை ஒன்று இருந்தது. அது கரியநிறம் பொருந்தியது. அக்குதிரையானது போர்க்களத்தில் திருமுடிக்காரியின் மனம்போலப் பாயும் இயல்புடையது என்ற கூற்றின் மூலம் காரியின் வீரத்தின் ஆளுமையை மேற்பாடலின் வழியே குறிப்பிடுகிறார் அம்மூவனார்.

## கொடை

காரி தன்னிடம் வரும் பரிசிலர்களுக்குத் தேரினை பரிசிலாக வழங்குவதுண்டு. மற்றைய அரசர்கள் நாட்காலைப் பொழுதிலே கள்ளை உண்ட மகிழ்ச்சியில் அரியணையில் அமர்ந்து கொண்டு பரிசிலர்க்குத் தேரினை பரிசிலாக வழங்குவர். அவ்வாறு பரிசில் வழங்குவது எல்லோருக்கும் எளிது. திருமுடிக்காரி அவ்வாறில்லை. நல்ல புகழ் எல்லா இடங்களிலும் கெடாது பரவி நிற்கும்படி வாழ்ந்த காரி என்பவன், கள் உண்டு களிக்காது வழங்கிய தேர்கள் எண்ணிக்கையற்றவை ஆகும். அவன் தனது பகைவர்களுடன் போரிட்டு போரில் வெற்றிபெற்ற பொன்அணிகள் பூண்ட உயர்ந்த தேரினையே வறியார்க்கு வழங்குவான். அவ்வாறு வழங்கப்பட்ட தேர்களின் எண்ணிக்கை மிகப்பல. வளம் நிறைந்த முள்ளூர் மலையுச்சியில் வீழ்ந்த மழைத்துளியினும் பலவாகும். எனவே ஏனையோர் கொடை செயற்கை, காரியின் கொடை இயற்கை என்று இவனின் கொடை மற்றவர்களிடமிருந்து வேறுபட்டு நிற்கிறது.

**"நாள் அன்று போகி புள்இடை தட்ப**
**பதன் அன்றுபுக்கு திறன்அன்று மொழியினும்**
**வறிது பெயர்குநர் அல்லர்" (புறம். 124: 1-3)**

திருமுடிக்காரியிடம் பரிசில் பெறச் செல்வோர் நாள் அல்லாத நாளில் சென்றாலும், செல்லும் இடத்து சகுனப் பறவைகள் அவர்களைத் தடுத்தாலும் கரியிடம் பக்குவம் அற்ற சொற்களைக் கூறினாலும் பொருள் பெறுவோர் பரிசு பெறாமல் திரும்ப மாட்டார்கள். எனக் கபிலர் மலையமான் திருமுடிக்காரியின் கொடைப் பண்பு பற்றி மேற்பாடலின் வழியே குறிப்பிடுகின்றார்.

**“முள்ளூர் மன்னன் கழல்தொடிக்காரி**
**செல்லா நல்இசை நிறுத்த வல்வில்**
**ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த”[69] (அகம். 209: 12-14)**

என்ற அகநானூற்றுப் பாடலின் வழியாகக் காரி என்னும் இம்மன்னன் போர்களத்தில் ஓரி என்பவனும் போரிட்டுப் போரில் அம்மன்னனைக் கொன்று அவனுக்குரியதாகத் திகழ்ந்த வளங்கள் நிறைந்த கொல்லிமலையை கைப்பற்றினான். அவ்வாறு அவன் கைப்பற்றிய அம்மலையை மூவேந்தர்களுள் ஒருவரான சேர மன்னனுக்குக் கொடையாக வழங்கினான். இதனால் இவனின் வீரச் சிறப்பும், சேர அரசருக்குக் கொடை அளித்த பெருமையும் தெரியவருகிறது.

**“பல்ஆ நெடுநிரை வில்லின் ஒய்யும்**
**தேர்வண் மலையன் முந்தைப் பேர் இசை”[70] (நற். 100: 8-9)**

என்ற நற்றிணைப் பாடலிலும் இவனின் வீரம் கொடை புகழப்பட்டுள்ளது.

காரி, தன்னுடைய பகைவர் நாட்டில் உள்ள பசுக் கூட்டங்களைக் கைப்பற்றித் தனதாக்கொண்டு வரும் தன் நாட்டு வீரர்களுக்குத் விலையுயர்ந்த அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்ட தேரினை பரிசாகக் கொடுத்துள்ளான். இதன்வழி காரியின் கொடைக்குணத்தை அறிய முடிகின்றது.

**“கறங்குமணி**
**வால்உளைப் புரவியொடு வையகம் மருள**
**ஈர நல்மொழி இரவலர்க்கு ஈந்த” (சிறுபாண். 91-93)**

திருமுடிக்காரி தன்னை நாடிவந்த இரவலர்களுக்கு, ஒலிக்கின்ற மணியும் வெண்மையான தலையாட்டமும் அணிந்த குதிரைகளைக் கொடையாகத் தந்துள்ளான். மேலும் அவன் உலகத்து உள்ளவர் கேட்டு வியக்கின்ற அளவுக்கு

---

[69]. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும்தெளிவுரையும்.தொகுதி – 3.

[70].அ. நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை.

அன்பு நிறைந்த சொற்களையும் சொல்லி அவன் அளவிடற்கரிய பொருள்களைக் கொடையாக வழங்கினான் என்ற செய்தி சிறுபாணாற்றுப்படை பாடலில் இடம்பெற்றுள்ளது.

இவற்றின் வழியாக மலையமான் திருமுடிக்காரி பகைவர்களை வென்ற வெற்றிச்சிறப்பும், மலை , குதிரை, யானை போன்ற பல பொருள்களைக் கொடையாக வழங்கினான் என்பதும் தெரியவருகிறது.

**<u>அறிவுரை கேட்கும் பண்பு</u>**

மலையமான் திருமுடிக்காரி தன்னிடம் பரிசில் பெறுவதற்காக வரும் புலவர்களின் வேறுபாடு காணாது, தன்னிடம் வரும் அனைவருக்கும் தன்னிடம் உள்ள செல்வங்களையும் தன் பகைவர்களிடம் இருந்து போரின் மூலம் பெற்ற செல்வங்களையும் வாரி வாரி வழங்கி வந்தான். இதனை அறிந்த கபிலர்,

**"பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே" (புறம். 121: 6)**

என்று பாடுகிறார்.

''அரசே! பிறருக்குக் கொடுத்தல் மிகவும் நன்று. ஆனால் வரிசை அறிந்து தருக. அரசே நீவீர் பொருள் வழங்குபவர்களின் வரிசை (தகுதியை) அறிந்து கொள்ளவேண்டும். நீ பரிசில் வழங்கும் புலவர்களிடம் வரிசை (தகுதி) கருதாது பொதுப்படையாக அனைவரையும் பார்த்தலைத் தவிர்ப்பாயாக" என்று கபிலர் குறிப்பிடுவதன் வாயிலாக திருமுடிக்காரி புலவர்களின் அறிவுரையினை கேட்கும் பண்புடையவன் என்பதும் வாரி வழங்கும் வள்ளன்மை மிக்கவன் என்பதும் புலனாகின்றது.

**<u>ஓரி</u>**

ஓரி என்னும் இவ்வரசன் வல்வில் ஓரி எனவும், ஆதன் ஓரி எனவும் அழைக்கப்படுகிறான். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் துறையூருக்கு அருகேயுள்ள வளமான மலைத்தொடர் கொல்லிமலையாகும். அந்த மலைநாட்டினை ஆண்டு வந்த மன்னர் மரபினர் ஓரியர் என்று

அழைக்கப்பட்டனர். அம்மன்னர் குடியில் சிறந்து விளங்கியவன் ஓரி என்னும் மன்னன் ஆவான். இவன் வில்லாற்றலில் வல்லவனாகத் திகழ்ந்தான்.

ஓரி மன்னன் வேட்டையாடும்போது தனது வில்லை வளைத்து ஒரு யானையின் மேல் அம்பை எய்தான். அவ்வம்பானது முதலில் யானையை வீழ்த்தியது. அந்த யானையின் மேல் பாய்வதற்காக இருந்து புலியின் வாயில் உள் நுழைந்து அதன் உடலையும் அது வீழ்த்தியது. அதன்பின் அங்கே நின்றிருந்த கலைமானை ஊடுருவி அதை உருட்டி பின் புற்றுக்குள்ளே இருந்த உடும்பைத் துளைத்து நின்றது. இத்தகைய வீரம் பொருந்தியவன் ஓரி என்பதால், வல்வில் ஓரி என்று அவன் புகழப்பட்டான்.

வல்வில் ஓரியிடம் ஓர் அருமையான குதிரை இருந்தது. அழகான பிடரிமயிரினை உடைய அந்தக் குதிரையின் பெயரும் ஓரி என்றே அழைக்கப்பட்டது. இக்குதிரை பிடரி மயிர் சிலிர்த்துப் பாயும் குதிரையும் ஓரியைப் போன்று புகழ் கொண்டது.

**“செவ்வேர்ப் பலவின் பயன்கெழு கொல்லி” (அகம். 209: 15)**

என்று கொல்லிமலையின் சிறப்பினை அகநானூறு பாடுகின்றது. கொல்லிமலை என்பது தென்னக மலைகளுள் தொன்மைமிக்கது. அம்மலை வேர்ப்பலாவின் பழங்கள் மிகுந்தது. அம்மலை முற்றிய தேன்உடையது. அது நாற்கோண வடிவாய் அமைந்தது. அது நான்குபுறமும் செங்குத்தான மலைச் சுவர்களைக் கொண்டது. இத்தகைய கொல்லி மலையையும், அதனைச் சூழ்ந்துள்ள சிறுநாட்டையும் வல்வில் ஓரி ஆண்டு வந்தான்.

**<u>வீரம்</u>**

ஓரி விற்போர் புரிவதிலும் வேட்டை ஆடுவதிலும் வல்லவன். ஓரி என்னும் தன் பெயர் படைத்த ஓரி என்னும் குதிரை மீது ஏறிச் சென்று போர் பல புரிந்து வெற்றி பெற்ற பெருவீரன் ஆவான்.

**“………………………… வெம்போர்**

**மழவர் பெருமகன் மாவள் ஓரி” (நற். 52: 8-9)**

என்ற நற்றிணைப் பாடலின் குறிப்பு அவன் கடுமையான போராற்ற வல்ல மழவர்கள் பலரைப் பெற்றிருந்தமையைக் காட்டுகிறது.

**“வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி**

**பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇ**

**புழல் தலைப் புகர்க்கலை உருட்டி உரல் தலைக்**

**கேழற் பன்றி வீழ அயலது**

**அழல் புற்றத்து உடும்பில் செற்றும்**

**வல்வில் வேட்டம் வலம்படுத்து இருந்தோன்” (புறம். 152: 1-6)**

ஓரி என்பான் தனது வில்லில் இருந்து செலுத்திய அம்பானது அவன் எதிரே நின்ற யானையைக் கொன்று வீழ்த்தியது. பின் அதனைத் தாக்க நோக்கிய பிளந்த வாயை உடையப் புலியின் வாயினுள் புகுந்து துளையை உடைய கொம்பைக் தனதாகக் கொண்ட புள்ளிமானில் ஊடுருவி அதனை உருளச் செய்து, உரல் போன்ற தலையை உடையப் பன்றியை விழச் செய்து, அருகில் இருந்த புற்றில் கிடந்த உடும்பைக் கொன்று அங்கு அவ்வம்பு நின்றது. இத்தகைய வலிமையான வில்லைச் செலுத்துபவன் ஓரியே என வன்பரணர் கூறுவதன் வாயிலாக ஓரியின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை அறியலாம்.

**“காரிக் குதிரைக் காரியொடு மலைந்த**

**ஓரிக் குதிரை ஓரி” (சிறுபாண். 110-111)**

மலையமான் திருமுடிக்காரி காரி என்னும் பெயர்க்கொண்ட குதிரையுடன் போர் புரிதலையே தனது தொழிலாகக் கொண்டவன். அம்மன்னனுடன் ஓரி போர்புரிந்தான் என நல்லூர்நத்தத்தனார் கூறுவதிலிருந்து தன்னைவிட வலிமை உடையோரிடத்தும் எதிர்த்துப் போர்புரியும் ஓரியின் ஆளுமைத்திறனைக் காணமுடிகின்றது.

## கொடை

ஓரி தன்னைப் பற்றி நேரில் புகழ்வதைக் கேட்க நாணும் உள்ளம் உடையவன். முகில்சூழ்ந்த கொல்லிமலைக்குத் தலைவனாகிய ஓரி முகப்பட்டம் முதலாகிய ஆபரணங்கள் அணிந்த யானைகளை இரப்போர்க்கு நாள்தோறும் அளித்து வந்தவன். அவன் 'போதும் போதும்' என்று சொல்லும் வரை கொடை வழங்கும் பண்பினை உடையவன்.

**"நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்**
**குறும்பொறை நல்நாடு கோடியர்க்கு ஈந்த" (சிறுபாண். 108-109)**

நெருங்கிய கிளைகளில் மணமிகுந்த மலர்கள் நெருக்கமாகப் பூத்திருந்த சுரபுன்னை மரங்கள் மிகுதியாக உள்ள மலை கொல்லிமலை ஆகும். பல சிறுமலைகளை உடைய நாட்டையே கூத்தாடுவோர்க்குக் கொடையாகக் கொடுத்தவன் ஓரி என்று சிறுபாணாற்றுப்படையில் நல்லூர் நத்தத்தனார் ஓரியின் கொடைப் பண்பினைக் காட்டுகிறார்.

**"மாரி வண்கொடை காணிய நன்றும்**
**சென்றதுமன் எம் கண்ணுளங் கடும்பே**
**பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை**
**வால்நார்த் தொடுத்த கண்ணியும் கலனும்**
**யானை இனத்தொடு பெற்றனர்" (புறம். 153: 5-9)**

பாடாண்திணைப் பாடலில் மழை போன்ற கொடைத்தன்மை உடையவன் ஓரி. நாங்கள் அம்மன்னனைக் காண விரும்பிச் சென்றோம். நீர் புக்காததும், மணி கலந்ததும் ஆகிய பொன்னால் செய்த வண்டுகள் மொய்க்காத குவளை மலரையும், வாடாத மலர்களைக் கொண்டு வெள்ளி நாரால் தொடுக்கப் பெற்ற மாலையையும், அணிகலன்களையும் கண்டோர் வியக்கும் யானைக் கூட்டத்தோடு எம்மவர் பெற்றனர் எனவும்,

**"…………… ஆரேற்றன்ன**
**மாரிவண் மகிழ் ஓரி கொல்லிக்" (நற். 265: 7-8)**

ஓரி தன்னிடம் வரும் இரவலர்களுக்கு வான் மேகத்திலிருந்து பெய்யும் மழைபோன்று வாரி வாரி பொன்னும் மணியும் வழங்கி அவர்களின் உடல் களைப்பு நீங்க கள்ளும், உணவையும் அளிக்கக் கூடியவன் என வன்பரணர் கூறுவதன் மூலம் ஓரியின் கொடை தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்பட்டு நிற்கிறது.

**“காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென**
**கடுங்கண் வேழத்துக்கோடு நொடுத்து உண்ணும்**
**வல்வில் ஓரி கொல்லிக் குடவரை”[71] (குறுந். 100; 3-5)**

கொல்லி மலையில் வசிக்கும் உழவர்கள் உணவில்லாமல் பசியால் வாடுகின்றபோது, காட்டில் தான் வேட்டையாடிக் கொன்ற யானைகளின் தந்தங்களை விற்று, அவர்களுக்கு உணவளித்தவன் ஓரி என்ற செய்தியிலிருந்து ஓரியின் இரக்கம் மிகுந்த தன்மையை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

இவ்வாறு ஓரியின் வீரம், கொடை சார்ந்த ஆளுமைப் பண்பின் சிறப்பினை சங்க இலக்கியப் பாடாண்திணைப்பாடல்களில் அறியமுடிகின்றது.

**பாரி**

பாரி வளம் மிக்க பறம்புமலையின் அரசன் ஆவான். பாரித்தவன், பருத்தவன், பெரியவன், பெருத்த ஆற்றலை உடையவன் என்றெல்லாம் பொருள்படும் நிலையில் மக்கள் பாரி என்று அவனை அழைத்தனர். மாவண்பாரி, மாவேள்பாரி, நெடுமாப்பாரி, பரந்தோங்கு சிறப்பிற்பாரி என்று கபிலர் முதலான புலவர்கள் இம்மன்னனைப் போற்றியுள்ளனர்.

இவனது நாடு பறம்புநாடு ஆகும். பறம்புமலை பாரியின் மலை. பெருங்குன்றம் என்றும், பிரான்மலை என்றும் அழைக்கப்பட்டது. இம்மலை சிவகங்கை மாவட்டம் சிங்கம்புணரிக்கு அண்மையில் உள்ளது. இந்நாட்டினைச் சுற்றி முந்நூறு ஊர்கள் இருந்தன.‘முந்நூறு ஊர்த்தே தன்பறம்பு நந்நாடு’ என்று கபிலர் குறிப்பிடும் நிலையில் இதனை அறியமுடிகின்றது.

---

[71].பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை.

**“பாரிபறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்**

**தைஇத்திங்கள் தண்ணிய தரினும்”[72] (குறுந். 196: 3-4)**

பாரியின் பறம்பு மலையில் உள்ள நீர் தை மாத்தில் குளிர்ச்சியுடன் தெளிவாக இருக்கும் என்று மிளைக்கந்தன் பாடியுள்ளார். இதன் மூலம் பாரியின் பறம்பு மலையின் சிறப்பினை அறிந்து கொள்ளமுடிகின்றது

**வீரம்**

பாரி கொடை வழங்குவதில் மட்டுமல்லாமல்லாமல் வீரத்திலும் சிறந்தவனாக விளங்கியுள்ளான் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்களின் மூலமாக அறியமுடிகின்றது. வலிமை பொருந்திய யானைப் படைகளையும், குதிரைப் படைகளையும் அவன் கொண்டிருந்தான் என்று இலக்கியங்கள் காட்டுகின்றன. இம்மன்னன் பகைவர்களை எதிர்த்துப் போர் புரியும் வல்லமை உடையவன் என்பது இங்குக் கொள்ளத்தக்கது.

**“மரம் தொறும் பிணித்த களிற்றினிர் ஆயினும்**

**புலம்தொறும் பரப்பிய தேரினிர் ஆயினும்**

**தாளின் கொள்ளலிர் வாளின் தாரலன்” (புறம்.109: 11-13)**

பாரியின் பறம்பு மலையில் உள்ள மரங்கள் தோறும் நீங்கள் உங்களது யானைகளைக் கட்டினாலும், இருக்கும் இடந்தோறும் உங்கள் தேர்களை நிறுத்தினாலும், உங்களது போர் வலிமை முழுதையும் காட்டினாலும் நீங்கள் பறம்பு மலையைப் பெறமுடியாது எனக் கபிலர் குறிப்பதால் பாரியின் வீரம் குறித்து அறியமுடிகின்றது.

**“கடந்துஅடு தானை மூவிரும் கூடி**

**உடன்றனிர் ஆயினும் பறம்பு கொளதற்கு அரிதே” (புறம். 110: 1-2)**

கபிலர் தேர் நின்று வெல்லவல்ல படைகளைக் கொண்டுள்ள வேந்தர்களாகிய நீங்கள் மூவரும் கூடி நின்று போரிட்டாலும், பாரியின் பறம்பு நாட்டினைக்

---

[72] .பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை.

கைப்பற்றுதல் இயலாது எனக் குறிப்பதன்வழி பேராண்மை மிக்கவன் பாரி என்பது தெரியவருகிறது.

**“ஏந்து கோட்டு யானை வேந்தர் ஓட்டிய**
**கடும் பரிப்புரவிக் கைவண் பாரி”[73] (அகம்.78: 21-22)**

வலிமை பொருந்திய யானைப் படையினைக் கொண்டுள்ள மூவேந்தர்களான சேர சோழ பாண்டியரை எதிர்த்து அவர்களுடன் போர் புரிந்து அவர்களைப் போர்க்களத்தில் இருந்து புறம் ஓடச் செய்தவன் பாரி என்று மதுரை நக்கீரனார் கூறுவதிலிருந்து பாரியின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை அறிய முடிகின்றது. மேலும், அவனிடம் விரைவாகச் செல்லும் குதிரைகள் இருந்திருக்கின்றன என்பதையும் அறிய முடிகின்றது.

## கொடை

பாரிவேள் வீரத்தில் சிறந்தவனாகவும், நற்பண்புகள் நிறைந்தவனாகவும், தமிழ்ப் புலவர்கள் இயற்றும் பாக்களின் சிறப்பினை அறிந்து கொள்வதில் கைதேர்ந்தவனாகவும், எல்லாவற்றிற்கும் மேலாகக் கொடையில் இணையற்றவனாகவும் விளங்கியுள்ளான். பாரி என்றவுடன் முதலில் அவனுடைய ஆட்சி நினைவுக்கு வருவதில்லை. அவன் வீரம் நினைவுக்கு வருவதில்லை. அவனுடைய வள்ளன்மைத் தன்மையே மக்களின் உள்ளத்தில் தோன்றும். அந்த அளவிற்குப் பாரியின் வள்ளல் தன்மை தொடர்ந்து தமிழக மக்களின் நெஞ்சில் நிலைத்துள்ளது.

பாரி தன்னிடம் வந்த அனைவருக்கும் கொடை வழங்கி மகிழ்வித்தான். நல்லவர் என்றும் தீயவர் என்றும் அவன் கொடை கொடுப்பதில் வேறுபாடு பார்ப்பதில்லை. நாடி வந்தோர் மனம் வருந்திச் செல்வதைப் பாரி விரும்புவதில்லை. அவன் தன்னால் முடிந்த உதவியினைச் செய்யும் குணம் உடையவன்.

[73].அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி - 3.

**“பறம்பு பாடினரதுவே அறம் பூண்டு**
**பாரியும் பரிசிலர் இரப்பின்**
**வாரேன் என்னான் அவர் வரையன்னே” (புறம்.108: 4-6)**

பாரி வாழும் பறம்புமலையைப் பாடி ஆடும் கூத்தர்கள் முழுவதும் பெற்றனர். பாரியும் தன்னிடம் பரிசு வேண்டுவோர் கேட்டால் கொடையறத்தைப் பாதுகாக்கும் பொருட்டுத் தன்னையே தந்து அவர்கள் ஆணை வழி நிற்பான் என இவனது கொடைத்திறம் பற்றி கபிலர் கூறுகின்றனர்.

**“மடவர் மெல்லியர் செல்லினும்**
**கடவன் பாரி கை வண்மையே” (புறம்.106: 4-5)**

அறிவில்லாதவராகவோ, வலிமையில்லாதவராகவோ இருந்தாலும் வேள்பாரியைக் காணச் சென்றால் அவன் தன் கொடைத் தன்மையில் இருந்து தவறமாட்டான் எனக் கூறுவதில் இருந்து பாரியிடம் பரிசில் வேண்டி எவர் சென்றாலும் பரிசில் பெறுவது உறுதி என்பதனை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

**“உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்**
**நிரை பறைக் குழீஇயினம் காலைப் போகி**
**முடங்கு புறச் செந்நெல் தரீஇயர் ஓராங்கு**
**இரைதேர் கொட்பின ஆகிப் பொழுது படப்**
**படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு”[74] (அகம். 303: 10-14)**

மேற்காட்டிய அகப்பாடலில் வள்ளல் பாரி தம்முடைய அறிவினையே மூலமாகக் கொண்டு பாடல் இயற்றி வரும் பரிசிலர்களுக்கு மலைபோன்று காட்சியளிக்கும் களிறுகள் பலவற்றுடன் நல்ல விலையுயர்ந்த ஒளிமிக்க அணிகலன்களையும் பரிசிலாகக் கொடுப்பான் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

---

[74].அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் தொகுதி 3.

பிறருக்குக் கொடுத்து உதவும் கை வண்மை செய்தலைத் தன் பிறவிக் கடமையாக கொண்டவன் எனப் பலரும் போற்றும் புகழினை உடையவன் என ஔவையார் பாரியின் கொடையுள்ளம் பற்றிக் குறிப்பது குறிப்பிடத்தக்கது.

பாரியின் கொடைத் தன்மை வெளிப்பட ஒரு நிகழ்ச்சி பெரிதும் துணை செய்தது. ஒரு முறை அவன் உலாவ வந்தபோது, பாரியின் கண்களில் பற்றுக் கோடின்றிப் பதைபதைத்து நிற்கும் முல்லைக் கொடி தென்பட்டது. எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்டும் பாரியின் உள்ளம் அக்காட்சியினைக் கண்டு பதைபதைத்தது. அதன் தளர்ச்சியினைக் கண்டு மனம் வருந்தி அதனை படரவிடப் பக்கத்தில் மரம் இல்லை என்று வருந்தி

**"நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்**
**சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய" (சிறுபாண். 88-89)**

தனது விலையுயர்ந்த தேரினை இழுத்து வந்த குதிரைகளை நீக்கி அத்தேரினை முல்லைக் கொடிக்கு அவனே பற்றுக் கோடாகக் கொடுத்துப் படரும்படி செய்தான் எனச் சிறுபாணாற்றுப்படை கூறுவதிலிருந்து, வேள்பாரி ஆறு அறிவு உடைய மக்கள் மீது மட்டும் அல்லாமல் ஓர் அறிவு உயிரான முல்லைக் கொடியின் மீது இரக்கம் கொள்ளும் பண்பினையும், எந்தவொரு செயலையும் எதிர்பார்க்காமல் செய்யும் ஆளுமையினையும் உடையவன் என்பதை அறிய முடிகின்றது.

**<u>அதியமான் நெடுமான் அஞ்சி</u>**

இவ்வரசன் பெயர் அஞ்சி. இவன் அதியர் மரபில் வந்தவன். அதனால் இவன் அதியன், அதிகன், அதியமான் நெடுமான், அஞ்சி, அதியமான், நெடுமான் அஞ்சி என அழைக்கப்படுகின்றான். இவனது குடிப்பெயர் எழினி. அதனால் இவன் எழினி எனவும் அழைக்கப்படுகிறான்.

இன்று தருமபுரியாகவும், சங்ககாலத்தில் தகடூராகவும் விளங்கிய பகுதி இவனின் தலைநகரமாகும். இதற்குப் பக்கத்தில் இன்றும் அதமன் கோட்டை என்ற ஒரு கோட்டை இடிபாடுடன் காணப்படுகிறது. அதிகமான் கோட்டை

என்பதுதான் இன்று மருவி அதமன்கோட்டை என்றாகியிருக்கிறது. சீவெல் என்ற ஆராய்சியாளரின் ”ஆண்டிக்யூட்டைஸ்” (Antiquities)என்ற நூல் அதமன் கோட்டையைப் பற்றிய பல விவரங்களைத் தருகிறது.

அதிகமான் நெடுமான்அஞ்சிச் சிறந்த வள்ளல். மேலும் அவன் பெருவீரன். அவன் புலவர்களிடையே இருந்து இனிதே பொழுது போக்குபவன். எதைச் செய்தாலும் அதில் ஈடுபாட்டுடன் செய்யவேண்டும் என்ற இயல்பினை உடையவன். அவன், பகைவருடனான போர் குறித்த ஆலோசனையில் ஈடுபடும் பொழுது வேறு எவை பற்றியும் தனது கவனத்தினைச் செலுத்தாமல் தன் அமைச்சர்களுடனும், படைத்தலைவர்களுடனும் அது பற்றிய பேச்சிலே ஈடுபட்டிருப்பான்.

ஔவையார், பரணர், பெருஞ்சித்திரனார், பொன்முடியார் ஆகிய பெரும்புலவர்கள் அவனது புகழைச் சிறப்பித்துள்ளனர். வேள்பாரிக்குக் கபிலர் போலவும், ஆய் அண்டிரனுக்கு மோசீகீரனார் போலவும் ஔவையார் அதியமானுக்குச் சிறந்த புலவராக அமைந்தார் என்பது இங்கு நோக்கத்தக்கது. ஆய்க்குக் நவீரமும், ஓரிக்குக் கொல்லியும், திருமுடிக்காரிக்கு முள்ளூரும், பாரிக்குப் பறம்பும், பேகனுக்குப் பொதினியும் உரிமை உடையது போன்று, அதியமான் நெடுமான்அஞ்சிக்குக் குதிரைமலை உரிமையுடையதாய் இருந்தது.

**வீரம்**

கொற்றவையின் வலிமையை தன்னகத்தே உடையதும், ஒளி திகழ்வதும் ஆகிய நெடிய வேலினை உடையவன் அதியமான் நெடுமான்அஞ்சி என்று சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது.

**“உரவுச் சின்னம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவக்கடல் தானை அதிகன்” (சிறுபாண். 102-103)**

தனது பகைவனான தொண்டைமான் மீது இரங்கிய அதியமான் நெடுமான் அஞ்சி ஔவையாரை அவனிடம் தூதாக அனுப்பினான். ஔவையார்

அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரம் பற்றி தொண்டைமானிடம் கூறுகின்றபோது,

**“பகைவர்க் குத்தி கோடு நுதி சிதைந்து**
**கொல்துறைக் குற்றில் மாதோ” (புறம்.95: 4-5)**

என்று குறிப்பிடுகிறார்.

அதியமான் நெடுமான்அஞ்சியின் படையில் உள்ள கூர்மையான வேல்கள் பகைவரை குத்தியதனால் வேலின் நுனி முறிந்து அதைச் சரி செய்வதற்காகக் கொல்லர் உலைக்களத்தில் உள்ளன. இதன்வழி அவனும் அவனின் படைகளும் போர்செய்து பழக்கமுடையன் என்று இவனின் போராற்றலை அவர் பாராட்டுகிறார்.

**“போர்க்கு உரைஇப் புகன்று கழித்தவாள்**
**உடன்றவர் காப்புடை மதில் அழித்தலின்**
**ஊன்உற மூழ்கி உருஇழந் தனவே**
**வேலே குறும்பு அடைந்த அரண்கடந்து அவர்**
**நறுங்கள்ளின் நாடு நைத்தலின்**
**சுரை தழீஇய இருங் காழொடு**
**மடை கலங்கி நிலை திரிந்தனவே**
**களிறே எழூஉத் தாங்கிய கதவம் மலைத்து அவர்**
**குழூஉக் களிற்றுக் குறும்பு உடைத்தலின்**
**பரூஉப் பிணிய தொடி கழிந் தனவே**
**மாவே பரந்து ஒருங்கு மலைந்த மறவர்**
**பொலம் பைந்தார் கெடப் பரிதலின்**
**களன் உழந்து அசைஇய மறுக் குளம்பினவே**
**அவன்தானும் நிலம் தரைக்கும் கடல்தானைப்**
**பொலந் தும்பைக் கழல் பாண்டில்**
**கணைபொருத துளைத் தோலன்னே” (புறம். 97: 1-16)**

என்ற இப்பாடலடிகளில், அதியமான் நெடுமான் அஞ்சி தனது பகைவர்களுடன் போர் புரிவதற்காகச் சுழன்று வாளைச்சுழற்றுவதில் வல்லவன் என்பது தெரியவருகிறது.

மேலும் அவனின் வாள் பகைவரின் காவல் அமைந்த மதிலை அழித்தது. அவ்வாள்கள் பகைவரின் குடரைக் கிழித்து, உடலில் புகுந்துக் குத்தித் தம் உருவத்தை இழந்தன.

அதியமானின் வேல்களோ சிறு செயல்கள் புரிவோரின் அரணைக் கடந்து பகைவர்களின் கள் மணம் பெருகும் நாட்டினையும் அழித்தன. இதன் காரணமாக, அவ்வேல்கள் பொருந்துவாயோடு அமைந்திருந்த வலிமையான தடியும், ஆணியும் தனது நிலைகளில் இருந்து மாறிக் காணப்படுகின்றன. யானைகளோ பகைவரின் கணைய மரம் தாங்கிய கதவினை மோதித் தாக்குவதனால் அவைகளின் தந்தங்களில் அணியப் பெற்ற பூண்கள் கழன்று விழுந்து காணப்பட்டன.

குதிரைகள், பகை வீரர்களின் மாலையணிந்த மார்பின் வடிவம் குலைய ஓடியதால் களத்தை அழித்துக் குருதிக்கறை கொண்டு குழம்பின. அதியமான் நெடுமான்அஞ்சி கடல் சூழ்ந்த நிலப்பரப்பைத் தன் வீரத்தால் காப்பவன் ஆவான். அவன் துளைகளை உடையக் கேடயத்தைக் கொண்டவன். இவ்வாறு ஔவையார் அதியமானின் வீரத்தைப் பல பட பாராட்டுகிறார்.

**“களம்புகல் ஓம்புமின் தெவ்விர் போர் எதிர்ந்து**
**எம்முள்ளும் உளன்ஒரு பொருநன் வைகல்**
**எண்தேர் செய்யும் தச்சன்**
**திங்கள் வலித்த கால் அன்னோனே”** **(புறம்.87: 1-4)**

என்ற புரநானூற்றுப் பாடாண்திணையில் அதியாமானின் சிறப்பு குறிக்கப்பட்டுள்ளது.

”பகைவர்களே! போர்க்களத்திற்குச் செல்லுதலை நீங்கள் தவிருங்கள். போரினை எதிர்கொள்ளும் ஆற்றலுடைய ஒரு வீரன் எம்மிடம் இருக்கின்றான்.

அவன் எப்படிப்பட்டவன் எனில் ஒரு நாளில் எட்டுத் தேர்களைச் செய்யும் வலிமை பொருந்திய தச்சனாவான். ஒருமாதகாலம் இருந்து செய்த தேர்க்காலிற்கு ஒப்பானவன்" என்று அதியமானின் வீரம் பற்றிக் குறிப்பிடுகின்றார் ஔவையார்.

<u>**கொடை**</u>

அதியமான் நெடுமான் அஞ்சி தன்னை நாடிவரும் இரவலர்களுக்கு இல்லை என்று கூறாமல் கொடை வழங்கும் தன்மையுடையவன்.

**"…………. ஒங்கு செலல்**
**கடும் பகட்டு யானை நெடுமான் அஞ்சி**
**ஈரு நெஞ்சமோடு இசை சேண் விளங்க**
**தேர் வீசு இருக்கை போல"[75] (நற்.381: 6-9)**

என்ற நற்றிணைப் பாடல் இவனின் கொடைத்திறத்தின் தன்மையைக் காட்டுவதாக உள்ளது.

தலையெடுத்து நிமிர நடக்கும் யானைப் படையையும், விரைந்து செல்லக் கூடியதுமான குதிரைப் படையையும் தன்னகத்தே கொண்ட அதியமான் நெடுமான்அஞ்சி என்பவன் தன்னை அடைந்த பரிசிலர்க்குத் தனது புகழ் நிலைத்து நிற்குமாறு விலையுயர்ந்த தேர்களை வழங்கினான் என்பதை மேற்பாடல் காட்டுகிறது.

அதியமானின் அரண்மனைக்குச் சென்றால் அங்கு நடக்கும் விருந்து புரக்கும் தன்மையைப் பின்வரும் பாடலில் பதிவு செய்கிறார் ஔவையார்.

**"ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ**
**இழைஅணி யானை இயல்தேர் அஞ்சி**

---

[75].முனைவர்.கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும்.

**அதியமான் பரிசில் பெறூஉம் காலம்**

**நீட்டினும் நீட்டாது ஆயினும் களிறுதான்**

**கோட்டுஇடை வைத்த கவளம் போலக்**

**கையகத்தது அது பொய் ஆ காதே" (புறம். 101: 1-8)**

அதியமான் நெடுமான் அஞ்சியிடம் பொருள் வேண்டி இரப்போர் ஒருநாள் போகலாம், இரண்டு நாள் போகலாம். பலநாள் பலரோடு தொடர்ந்து போனாலும் அவன் முதல் நாள் சென்றபோது, எவ்வாறு அன்புடையவனாக இருந்தானோ, அதே போன்று சிறிதும் குறையாத அன்புடனே பழகி உபசரிப்பான்.

யானைகளையும் தேர்களையும் உடையவன் அதியமான் நெடுமான் அஞ்சி. அவன் தன்னிடம் பரிசில் பெறவந்த இரவலர்களுக்குப் பரிசில் தருவதற்குச் சிறிது காலம் நீட்டித்தாலும், அதியமான் வழங்கும் பரிசிலானது யானையின் தந்தங்களுக்கு இடையே வைக்கப்பட்ட கவளமாகிய உணவு தப்பாது அதன் வாய்க்குள் சென்று சேர்ந்துவிடுவது போல் இரவலர் கையில் தப்பாது கிடைக்கும் என்று அதியமானின் கொடைப்பண்பு பற்றி ஔவையார் குறிப்பிடுகின்றார்.

**"ஓவாது ஈயும் மாரி வண்கைக்**

**கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி"[76] (குறுந். 91: 5-6)**

என்ற பாடலடிகளும் அவனின் கொடைப் பண்பினைக் காட்டுவனவாகும்.

ஔவையார், அதியமான் ஓயாமல் ஈயும் மாரிபோல கொடை வழங்கும் மனப்பான்மை உடையவன் என்றும், விரைந்து செல்லக்கூடிய யானைகளையும் தலையாட்டத்தினை உடைய குதிரைகளையும் தன்னிடம் வரும் இரவலர்களுக்குப்பயனேதும் எதிர்பாராமல் வழங்கக்கூடியவன் என்றும் குறிக்கிறார்.

---

[76].பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை.

அதியமான் நெடுமான்அஞ்சியின் கொடைப்பண்பு வெளிப்பட ஒரு நிகழ்ச்சி சான்றாக உள்ளது. இவனின் நாட்டில் கஞ்சமலை என்ற மலை ஒன்று உண்டு. பல அரிய மருந்துச் செடிகள் உள்ள மலை அதுவாகும். அம்மலை முனிவரும் சித்தரும் நாடிச்செல்லும் மருந்திற்குரிய மூலிகைகளைத் தேடிப்பெறும் சிறப்புடையது. அம்மலையில் ஓரிடத்தில் நெல்லிமரம் ஒன்று இருந்தது. அது வேறு எங்கும் காணப்படாத சிறப்பினை உடையது. அது பல ஆண்டுகளுக்கு ஒருமுறை காய்க்கும் தன்மை கொண்டது. அத்தகைய மரத்தில் காய்த்த ஒரே ஒரு நெல்லிக்கனி அதியமான் நெடுமான்அஞ்சிக்குக் கிடைத்தது.

அதியமான் நெடுமான்அஞ்சி தனக்குக் கிடைத்த அரிய நெல்லிக் கனியை தான் உண்டு பயனடையாமல், தனது அவைக்கு எதிர்பாரா வண்ணம் வந்த ஔவைக்கு வழங்கி மகிழ்ச்சி கொண்ட உயர்வான பண்பினை உடையவன் என்று சிறுபாணாற்றுப்படை பாடலடி உணர்த்துகிறது.

**“கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி**
**அமிழ்துவிளை *தீம்கனி* ஔவைக்கு ஈந்த” (சிறுபாண்: 100-101)**

என்று சிறுபாணாற்றுப்படை இவனின் கொடைத்தன்மைக்குச் சான்றாக விளங்கும் நிகழ்ச்சியைப் பதிவுசெய்துள்ளது

இதனடிப்படையில் அதியமான் நெடுமான்அஞ்சி விரைவாகச் செல்லும் குதிரைகளையும், பெரிய தேர்களையும் வழங்கும் கொடையுள்ளம் உடையவனாகவும், தன்னை எதிர்த்துப் போர் புரிபவர்களுக்குத் தோல்வியை பரிசிலாக அளிக்கும் வீரமுடையவனாகவும் விளங்கினான் என்பதை அறிய முடிகின்றது.

**பேகன்**

பொதினி மலைக்கு உரியவன் பேகன். இவன் ஆவியர் குலத்தவன். ஆவியர் குலம் என்பது குறுநில மன்னர்தம் குடிப்பெயர் ஆகும். அவர்கள் அரசாண்ட இடம் ஆதலால் ஆவிநன்குடி என்று அவர்கள் வாழும் ஊருக்குப் பெயர் வந்தது.

இவன் வையாவிக் கோப்பெரும்பேகன் எனவும் அழைக்கப்படுகின்றான். திருமுருகனின் ஆறுபடை வீடுகளில் ஒன்று பழநிமலை. சங்க காலத்தினர் இதனைப் பொதினிமலை என்றழைத்தார்கள். ஆவியர் என்ற வேளிர் குலத்தவர்கள் அம்மலையை ஆண்டு வந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ்ப் புலவர்களிடம் மிகவும் மதிப்பு வைத்துப் பழகியவன் பேகன். இம்மன்னன் விறலியன் ஆடல்கண்டு இரசித்ததை இவனது மனைவியான கண்ணகி தவறாக எண்ணியதால் இவன் அவளைப் பிரிந்து வாழ்ந்து வந்தான். கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் போன்ற புலவர்கள் வேண்ட தன் மனைவியுடன் இணைந்து வாழ்ந்து, தமிழ்ப்புலவர்களை வரவேற்று பரிசில் வழங்கி மகிழ்ந்தான்.

<u>**வீரம்**</u>

பேகன் முருகப்பெருமானைப் போல் நல்ல வெற்றிச்சிறப்பு மிக்கவன். இவன் வண்டு படிதலால் மலர்ந்த மலர்களாகிய கண்ணியினையும், ஒளி பொருந்தி வீரக்கழலினையும் உடையவன். இவன் அஞ்சத்தக்கக் குதிரைகளை உடைய மழவரைப் புறங்காட்டி ஓடச் செய்தவன். இவன் அறுத்துத் திருந்திய கோட்டினை உடைய களிறுகளைக் கொண்டவன். இதையே,

**"முருகன் நற்போர் நெடுவேள் ஆவி**
**அறு கோட்டு யானைப் பொதினி"[77] (அகம்.1: 3-4)**

என்ற பாடலடிகளும்,

**"முழுவு உறழ் திணிதோள் நெடுவேள் ஆவி**
**பொன்னுடை நெடுநகர்ப் பொதினி"[78] (அகம். 61: 15-16)**

---

[77]. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம்எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி - 3

[78]. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3

என்ற பாடலடிகளும் பொதினி மலையைப் பற்றிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

மாமூலனாரின் பாடல்களின் வழியே பொதினிமலை பேகனுக்கு உரியது என்றும், முருகனைப் போல் போர்த்திறம் உடையதால் ஆவியர் குடியில் சிறந்த ஆளுமைப் பண்புடையவனாக விளங்கினான் என்பதும் பெறப்படுகிறது.

'அடுபோர்ப் பேக' என்று அரிசில்கிழார் வெல்லும் ஆற்றல் உடையப் பேகனே என்று இவனின் வீரம் பற்றி கூறுகின்றார்.

**<u>கொடை</u>**

பேகன் சிறந்த கொடையாளி. இவன் தன்னிடம் வந்த புலவர்களுக்கு வாரிவாரி வழங்கும் வள்ளல். இவனை நோக்கி யாழை வாசித்துப்பாடும் பாணர்கள் வருவார்கள். அவர்கள் இவனின் அரண்மனையில் பல நாள் தங்குவார்கள். அவர்களுடைய இசையின்பத்தை நுகர்ந்து களிப்பான் பேகன். பிறகு பலவகைப் பரிசில்களை அவர்களுக்கு அவன் அளிப்பான்.

பேகன் பொன்னாலாகிய தாமரைப் பூவை அவர்கள் அணியும் படியாகத் தருவான். இம்மன்னன் பிறரின் வறுமை கருதியே கொடை வழங்குவான். பயன் கருதாது கொடை வழங்கும் பண்பும் இவனிடம் இருந்தது. 'ஈத்தல் நன்று மறுமை நோக்கியன்று பிறர் வறுமை நோக்கின்' என்ற பரணர் பாட்டு பேகனுக்குப் பொருந்தியிருப்பது குறிப்பிடத்தக்கது.

**"உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்**
**படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ**
**கடாஅ யானைக் கலிமான் பேகன்" (புறம். 141: 10-12)**

இப்பாடலின் வழியாக, பாணன் ஒருவன் விலையுயர்ந்த அணிகலன்களுடன் பொன்னரி மலையுடன் விளங்கியதைக் கண்ட பாணர்கள் 'நீர் யார்' என்று வினவ, அதைக் கேட்ட அப்பாணன், வெற்றிவேலினை உடைய பேகனைக் காண்பதற்கு முன் உங்களைக் காட்டிலும் வறுமை நிலையில் இருந்தேன். மயிலுக்குத் தனது விலையுயர்ந்த போர்வையினை அளித்த பேகனை கண்ட

பின்பு அவன் அளவில்லாமல் கொடுத்ததால் இன்று அவ்வறுமை நிலை நீங்கி வளமை ஆகினோம் என்றான்.

மேலும் பேகன் கொடை மடம் உடையவன் ஆனால் படை மடம் உடையவன் அல்லன் என்று ஒரு புறப்பாடல் இவனின் பெருமையைக் காட்டுகின்றது.

**“வரையா மரபின் மாரிபோல**
**காடஅு யானைக் கழற்காற் பேகன்**
**கொடைமடம் படுதல் அல்லது**
**படைமடம் படான் பிறர் படை மயக்குறினே”   (புறம். 142: 3-6)**

இப்பாடலில் பேகனின் கொடைத்தன்மை காட்டப்பெற்றுள்ளது.

வான்மழையானது எவ்வாறு குறிப்பிட்ட இடத்தினை வரையறை செய்யாமல் அனைத்து இடங்களிலும் பெய்கின்றதோ, அதே போன்று மதமிக்க யானையையும், கழல் அணிந்த கால்களையும் உடையப் பேகன் இன்னாருக்கு இன்னது கொடுக்க வேண்டும் என்பதை எண்ணிக் கொண்டிராமல் கிடைத்ததை நினைத்த போதே கொடுக்கும் மடம் உடையவன். ஆராயாமல் அவன் தரும் கொடைகள் மடம் உடையனவாக விளங்கலாம். அதாவது அவன் தன்னிடம் வரும் இரவலர்களுக்குப் பரிசில் வழங்கும் பொழுது அறியாமை உடையவன் போல வாரி வாரி வழங்குவான் எனப் பரணர் பேகனின் கொடை தொடர்பான ஆளுமைப் பண்பு குறித்துக் கூறுகின்றார்.

**<u>அருள் உள்ளம்</u>**

பேகன் ஒருநாள் காலாற வெளியே உலாவரப் புறப்பட்ட பொழுது காட்டில் குளிர்ந்த காற்று மெல்ல வீசியது.அங்கே ஓர் அழகிய காட்சியினைக் கண்டான். மரங்கள் அடர்ந்த ஓர் இடத்தில் ஓர் அழகிய ஆண்மயில் தன் தோகையை விரித்து ஆடியது. மயில் தன் இயல்புப்படி ஆடினாலும் அதன் தோகை அசைத்ததால் மயில் குளிரால்  நடுங்குகிறது என்று அவன் எண்ணிவிட்டான்.

உடனே அருள் உள்ளம் கொண்டு, சட்டென்று தன்மேல் உள்ள விலை உயர்ந்த போர்வையை எடுத்து மயிலின் அருகே சென்று அதற்குப் போர்த்திவிட்டான்.

**“வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்**
**கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய**
**அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்**
**பெருங்கல் நாடன் பேகன்” (சிறுபாண். 84-87)**

என்று நல்லூர் நத்தத்தனார் பேகன் மயிலுக்குப்போர்வை தந்த அருள் உள்ளத்தின் ஆளுமைப் பண்பினை புலப்படுத்துகின்றார்.

**புலவர் சொல் கேட்கும் பண்பு**

பேகன் தனது அரண்மனையில் நடைபெற்ற விறலியின் நடனத்தைக் கண்டு கொண்டிருந்தபொழுது அவன் மனைவி கண்ணகி ஊடல் கொண்டதனால் அவளைப் பிரிந்து வாழ்ந்து வந்தான். இதனை மாற்றப் பலரும் முயன்றனர். பேகனின் அவைக்கு அடிக்கடி வரும் பரணரைத் தூதாக்கலாம் என்று கருதினர். அப்புலவரைத் தனியே அழைத்து நிகழ்ந்ததைக் கூறினார். எப்படியாவது கண்ணகியை மீண்டும் பேகனோடு வாழ வைக்கும்படி செய்ய வேண்டினர்.

பேகனைத் தனியே சந்தித்த கபிலர் மன்னா உங்கள் நாட்டின் வளத்தினை கண்டு வருகின்ற பொழுது ஒரு சிற்றூர் ஒரு வீட்டில்,

**“இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**
**முலையகம் நனைப்ப விம்மி**
**குழல் இணைவது போல் அழுதனள்” (புறம். 143: 13-15)**

என்ற நிலையில், குழல்கள் இரங்கி ஒலிப்பது போன்று ஒரு பெண் கண்ணீரை நிறுத்த மாட்டாதவளாக அழுது கொண்டிருந்தாள் எனக் குறிப்பாகக் கூறினார்.

அவர் கூறுவதனைக் கேட்ட பேகன் இன்னார் எனப் புரிந்து கொண்டான். அவர்பின் பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் போன்றோர் ஒருவர்பின் ஒருவராகக் குறிப்பால் கண்ணகியின் பிரிவுத்துயரினை குறிப்பிட பேகன் தனது தவற்றினை உணர்ந்து தானே சென்று பிரிந்து இருந்த மனைவியைத் தனது அரண்மனைக்கு அழைத்து வந்து அவளுடன் உடன் இருந்து தமிழ்ப் புலவர்களை வரவேற்று விருந்து உபசரித்து பரிசில் வழங்கி மகிழ்ச்சி கொண்டான் என்பதில் இருந்து மேயர்சு பிரிக்சு அவர்களின் வகைப்பாட்டின் படி ஒரு பிரச்சனையை நன்கு அலசிஆராயும் ஆளுமைப் பண்பினை பேகனிடம் காணலாம்.

<u>குமணன்</u>

குமணன் முதிரை மலைக்குத் தலைவனாக விளங்கியவன். தன்னிடம் வந்தோர் அனைவருக்கும் வரையாது வாரி வழங்கிப் புகழ்பெற்ற பெருவள்ளல் கடையெழு வள்ளல்கள் எழுவருக்குப் பின் அவ்வரிசையில் வந்த தலைக் கொடையாளி இம்மன்னன். குமணன் தனது தம்பி இளங்குமணனால் நாடு கைப்பற்றப்பட்டதால் காட்டில் தலைமறைவாக வாழ்ந்து வந்தான். அப்போது அவனை நாடிச்சென்ற புலவர் பெருந்தலைச் சாத்தனாரிடம் தான் நாடாண்ட காலத்தில் தன்னை நாடி வந்திருந்தால் தங்களின் தேவைக்கு அதிகமான பொருட்களை பரிசிலாக வழங்கி மகிழ்ந்திருப்பேன். இன்றோ நான் காட்டிடத்து தலைமறைவாக வாழ்ந்து வருவதால் தங்களுக்கு பரிசிலாக அளிக்க என்னைத் தவிர வேறொன்றும் இல்லை என்றான்.

மேலும், தன்னை நாடி வந்த புலவன் தன்பால் பரிசில் பெறாமல் வெறுங்கையுடன் செல்வதை விரும்பாத மன்னன் தனது வாளினை புலவரின் கையினில் தந்தான். தனது தலையினை கொண்டு வருவோருக்குத் தனது தம்பி பரிசில் வழங்குவதாக அறிவித்து இருப்பதனால் இவ்வாளினைக் கொண்டு தனது தலையை வெட்டி எடுத்துச் சென்று என் தம்பி இளங்குமணனிடம் கொடுத்து, அப்பரிசிலை பெற்றுக் கொள்க என்றான். குமணனின் இவ்வுரையினை செவிமடுத்த புலவராகிய பெருந்தலைச்சாத்தனார்

குமணனையும் அவன் தம்பியாகிய இளங்குமணனையும் ஒன்றுபடுத்தி மகிழ்ந்தார். குமணனை பெருஞ்சித்திரனாரும் புகழ்ந்து பாடியுள்ளார்.

**வீரம்**

கடையெழு வள்ளல்கள் எழுவரும் மறைந்த பின்பு குமணவள்ளலை நாடி பரிசில் பெறச்சென்ற பெருஞ்சித்திரனார் அவர்கள் குமணனின் வீரம் பற்றிக் கூறுகையில்,

**“இசைமேந் தோன்றிய வண்மையொடு**
**பகை மேம்படுக நீ ஏந்திய வேலே” (புறம்.158: 28-29)**

என்று குறிப்பிடுகிறார்.

குமணவள்ளலே, உன்னுடைய கொடைப் புகழுக்கு நிகராக பகையினை வென்று உனது வேல் உயர்ந்து விளங்குகின்றது கொடையையும், வீரத்தையும் ஒப்பிட்டு இப்புறப்பாடல் குமணன் புகழ் பாடுகின்றது.

குமணன் பல போர்களில் தனது பகைவர்களை வென்ற வெற்றிவேலினை உடையவன் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் பல பதிவு செய்துள்ளன. மேலும்,

**“வாள்அமர் உழந்த நின் தானையும்” (புறம். 161:31)**

என்று போர்க்களத்தில் பகைவர்களுடன் வாள்போர் புரிதலில் வலிமையான வீரர்களை உடையவன் குமணன் என்று பெருஞ்சித்திரனார் கூறுவதனால் குமணன் தனது படைவீரர்களை வழிநடத்திச் செல்லும் ஆளுமைப் பண்பினைப் பெற்றிருந்தான் என்பதை உணரமுடிகின்றது.

**கொடை**

தன்னை நாடி வரும் புலவர்கள் அனைவருக்கும் மழைபோல் வாரி வழங்கும் பண்புடையவன் குமணவள்ளல் என்பதனை பெருஞ்சித்திரனார்,

**“வளமழை மாறிய என்றூழ்க் காலை**

**மன்பதை எல்லாம் சென்றுஉண கங்கைக்**

**கரை பொரு மலி நீர் நிறைந்து தோன்றியாங்கு**

**எமக்கும் பிறர்க்கும் செம்மலை ஆகலின்” (புறம். 161: 5-8)**

என்று பாடுகிறார்.

உலகில் உள்ள உயிர்கள் வளமாக வாள வாரி வழங்கும் மழை நீர் பெய்யாத கோடைக் காலங்களில் கூட உயிரினங்கள் நீர் அருந்துவதற்கு ஏற்ப கங்கையாறானது தனது இரு கரைகளையும் அடித்துச் செல்லும் வெள்ளத்தினைப் போன்று குமண வள்ளலாகிய நீ எங்களுக்கும் உன்னை நாடி வரும் பிறர்க்கும் தலைமையாக நின்று கொடையளித்து காக்கின்றாய். மேலும், பெருஞ்சித்திரனார் அவர்கள் தனது மனைவியை நோக்கி,

**“கடும்பின் கடும் பசிதீர யாழ நின்**

**நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்**

**இன்னோர்க்கு என்னாது என்னொடும் சூழாது**

**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**

**எல்லோர்க்கும் கொடுமதி – மனை கிழவோயே” (புறம். 163: 3-7)**

நமது பசித்துன்பம் நீங்க உனக்குப் பல நாட்கள் உணவுப் பொருட்களை அளித்து உதவிபுரிந்தவர்களுக்கும் மற்றும் இன்ன பண்பினை உடையவர்கள் என்று எண்ணாமல் என்னிடம் கேட்காமல் வாழ்வினை வளமுடன் வாழலாம் என்று எண்ணிப் பாதுகாக்க நினையாமலும் நீ குமண வள்ளல் அளித்த பரிசினை அனைவருக்கும் அளித்து மகிழ்வாயாக எனக் கூறுவதன் வாயிலாகக் குமணனின் அளவிடற்கரிய கொடைத்தன்மை உடையவன் என்பது புலனாகின்றது.

குமணன் தனது நாட்டினை இழந்து காட்டினில் தலைமறைவாக வாழ்ந்து வந்த காலத்திலும் தன்னை நாடிப் பாடிப் பரிசு பெற்றுச் செல்ல வந்த புலவன் பரிசு பெறாமல் வெறுங்கையுடன் செல்லுதல் கூடாது என எண்ணியவன் என்பதனை பெருந்தலைச் சாத்தனார்,

**“நாடு இழந்த தனினும் நனி இன்னாதுஎன**

**வள்தந் தனனே தலை எனக்கு ஈயத்**

**தன்னின் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின்**

**ஆடுமலி உவகையோடு வருவல்**

**ஓடாப் பூட்கை நின் கிழமையோற் கண்டே” (புறம். 165: 11-15)**

என்ற பாடலடிகளில் காட்டியுள்ளார்.

குமணவள்ளல் தான் நாட்டை இழந்து வாழ்வதனைக் காட்டிலும், தன்னை நாடிவந்த புலவர்க்கு பரிசில் அளிக்க முடியாத நிலையானது கொடுமையுடையது என்று எண்ணி, தன்னுடைய உடைவாளை உருவி புலவர் கைகளில் அளித்தான். அதனைக் கொண்டு தன் தலையை அரிந்து தன் தம்பி இளங்குமணனிடம் அளித்தால் அவன் ஆயிரம் பொற்காசுகள் வழங்குவான் என்று எண்ணி தனது தலையையே கொடையாக வழங்க எண்ணியவன் குமணவள்ளல் என்று அவனது கொடையுள்ளம் பற்றி அவர்குறிப்பிடுகின்றார்.

<u>விருந்தோம்பல் பண்பு</u>

குமணன் தனது அரசவைக்கு வருகைபுரியும் புலவர் பெருமக்களை விருந்தளிந்து மகிழ்ந்துள்ளான்.

**“வாடிய**

**நெறிகொள் வரிக்குடர் குளிப்பத் தண்ணெனக்**

**குய்கொள் கொழுந்துவை நெய்யுடை அடிசில்**

**மதிசேர் நாள் மீன் போல நவின்ற**

**சிறுபொன் நன்கலம் சுற்ற இரீஇக்**

**கேடு இன்றாக பாடுநர் கடும்பு என**

**பல் புக நுவலுநர் கூற வல் விரைந்து**

**உள்ளம் துரப்ப வந்தனென்” (புறம். 160: 5-12)**

ஒடுங்கிப்போன வரிகளை உடையக் குடலானது நிரையும் அளவிற்கு குளிந்ததும், தாளிப்பினை உடையதும், தசையும் நெய்யும் உடையதும் ஆகிய

உணவினைத் திங்களைச் சூழ்ந்து காணப்படும் விண்மீன்களினைப் போன்ற சிறிய அழகிய பொன் கலத்தினில் வைத்து உண்ணச் செய்தவன் குமண வள்ளல் என இம்மன்னனது விருந்தோம்பல் பண்பு காட்டப்பெற்றுள்ளது.

குமணன், பாடும் பாணர் சுற்றமானது வாழ்வினில் துன்பம் இல்லாது வாழவேண்டும் என்ற கருத்தினை உட்கொண்டு பெறுவதற்கு அரிய பொன் அணிகலன்களை வழங்கி மகிழ்ந்தவன்.

வள்ளல் தன்மை உடையவர்கள் வள்ளல்களான, எழினி, காரி, ஓரி, நள்ளி, பாரி, பேகன், ஆய் கடையெழு வள்ளல்களும் குமணன் உள்ளிட்ட ஆகியோர்களது பண்பின் வழியாக ஆளுமை பண்பினைச் சங்கப் புலவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்.

## தொகுப்புரை

வல்லமை செய்பவர்களை வள்ளல்கள் என்பர். இரவலனைப் புரக்கும் வள்ளல்கள் புலவர்களால் போற்றப்பட்டுள்ளனர். செயல்களால் புரவலர்களின் ஆளுமையும், படைப்பால் புலவர்களின் ஆளுமையும் இங்குவெளிப்பட்டு நிற்கின்றது.

புலவர்களால் பாடப்படும் புகழுடையவர்களாய் விளங்குவதையே வள்ளல்கள் பெரிதும் விரும்பி வாழ்ந்துள்ளனர். தமிழகத்தில் வள்ளல்கள் தலையெழு வள்ளல்கள், இடையெழு வள்ளல்கள், கடையெழு வள்ளல்கள் என மூன்று வகையினராக இருந்துள்ளனர் .

கடையெழு வள்ளல்களான அதியமான் நெடுமான் அஞ்சி (எழினி), ஆய் அண்டிரன், வல்வில்ஓரி, நள்ளி, பாரி, மலையமான் திருமுடிக்காரி பேகன் ஆகியோர் தம்மை நாடி வரும் புலவர் பெருமக்களுக்குப் பரிசில் வழங்குவதில் கொடை வள்ளலாக விளங்கியதோடு மட்டுமின்றி போர்க்களத்தில் தங்களின் பகைவர்களை தோற்கடித்து வெற்றியை தனதாக்கிக் கொள்ளும் வீரத்திலும் சிறந்து விளங்கியுள்ளனர். கடையெழு வள்ளல்களின் காலத்திற்குப் பின்னால் வாழ்ந்த குமணவள்ளல் தான் நாட்டினை இழந்து காட்டினில் வாழ்ந்து வந்த போதிலும் தன்னை நாடி வந்த புலவர் பரிசில் பெறாமல் வெறுங்கையுடன் செல்வதை விரும்பாமல் தனது தலையினையே கொடையாக அளிக்க முன்வந்துள்ள பண்பினையும், விருந்தோம்பல், புகழ், வீரம் முதலிய ஆளுமைப் பண்புகள் சங்க இலக்கியங்களில் பாடாண்திணைப்பாடல்களில் அமைந்துள்ள விதத்தினை இவ்வியல் நன்கு எடுத்துரைக்கின்றது.

# சான்றெண் விளக்கம்

51. ஆ. சிங்காரவேலு முதலியார்,அபிதான சிந்தாமணி பக். 652-54.
52. கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள், பரிமேலழகர் உரை, ப. 67
53. மேலது, ப. 68
54. மேலது, ப. 69
55. மது. ச. விமலானந்தம், அருமையும் பெருமையும், ப. 239
56. மேலது, ப. 239
57. மேலது, ப. 239
58. மேலது, ப. 239
59. அறிஞர் ச.வே. சுப்ரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3, ப. 97
60. மேலது, ப. 238
61. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை, ப. 163
62. அறிஞர். ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3, ப. 97.
63. கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள், பரிமேலழகர் உரை, ப. 67
64. அ. நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை, ப. 296
65. கௌமாரீஸ்வரி (ப.ஆ) திருக்குறள், பரிமேலழகர் உரை, ப. 68
66. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் - எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3, ப. 187
67. மேலது, ப. 285
68. பெ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை, ப. 563
69. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3, ப. 251
70. அ. நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை, ப. 125
71. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை, பக்.188-189
72. மேலது, ப. 351
73. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3, ப.107
74. மேலது, ப. 361
75. முனைவர். கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 704

76. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை, ப. 175

77. அறிஞர் ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி – 3, ப. 21.

78. மேலது, ப. 88

# இயல் - 4

## குறுநில மன்னர்களின் ஆளுமை

சங்க இலக்கியங்கள், சங்ககால மக்களின் அக வாழ்வினையும், புறவாழ்வினையும் எடுத்துரைக்கும் இலக்கியமாகத் திகழ்கின்றன. சங்க இலக்கியங்கள் புறவாழ்வு தொடர்பான நிகழ்வுகளைப் பாடும்போது பாடலுக்கு உரிய பாட்டுடைத் தலைவனின் பெயர், ஊர், மரபு, அவர்கள் புரிந்த போர்குறித்த செய்திகள், அவர்கள் கடைப்பிடித்து வாழ்ந்த அறநெறிகள், அவர்களின் கொடைத்தன்மைகள் போன்றவற்றை உட்படுத்திப் பாடுகின்றனர்.

பண்டைய தமிழகத்தைச் சேரர், சோழர், பாண்டியர் எனப்படும் முடியுடை மன்னர்களாகிய மூவேந்தர்கள் ஆண்டு வந்தனர். இதே கால கட்டங்களில் தமிழகத்தின் சிற்சில பகுதிகளில் சிறுசிறு குறுநில மன்னர்களும் ஆட்சிபுரிந்துள்ளனர் என்பதும் அறியத்தக்கதாக உள்ளது.

இச்செய்திகளை அறிவிக்கும் ஆவணங்களாகத் தமிழ்ப் புற இலக்கியங்கள் அமைகின்றன. புறநானூறும், பதிற்றுப்பத்தும் சங்க காலத் தமிழகத்தின் வரலாற்று ஆவணங்களாகக் கொள்ளத்தக்கனவாகும்.

புற இலக்கியங்களில் காட்டப்பெற்றுள்ள, குறிப்பாக பாடாண் திணை வகைப்பட்ட பாடல்களில் குறுநில மன்னர்களின் வாழ்வு, கொடை, வீரம் அவற்றின் வழி வெளிப்படும் ஆளுமைப்பண்புகள் ஆகியவற்றைத் தொகுத்து ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### குறுநில மன்னர்கள்

சிறு சிறு பகுதிகளைத் தனது ஆளுகைக்கு உட்படுத்தி அதனை ஆண்ட மன்னர்கள் குறுநில மன்னர்கள் ஆவர். சங்க புறநூல்களில் உள்ள பாடாண்திணைப்பாடல்களின் வழி இருபத்து ஐந்து குறுநில மன்னர்களைப் பற்றி அறியமுடிகின்றது. குறுநில மன்னர்களின் பெயர்கள் பின்வருமாறு அமைந்துள்ளது,

1. அவியன்,
2. அருவந்தையன்,
3. ஆதனுங்கன்,
4. இருங்கோவேள்,
5. இளவிச்சிக்கோ,
6. இளங்கண்டீரக்கோ,
7. இளவெளிமான்,
8. ஏறைக்கோன்
9. நல்லியக்கோடன்,
10. நல்லியாதன்,
11. கடிய நெடுவேட்டுவன்,
12. கரும்பனூர்கிழான்,
13. கொண்கானங்கிழான்,
14. பண்ணன்,
15. பழையன்,
16. பெருஞ்சாத்தன்,
17. பிட்டங்கொற்றன்,
18. பொறையாற்றுகிழான்,
19. காரியாதி,
20. நாஞ்சில் வள்ளுவன்,
21. நன்னன் சேய் நன்னன்,
22. பொகுட்டெழினி,
23. மூவன்,
24. வாட்டாற்றெழினியாதன்,
25. தாமான் தோன்றிக்கோன்,
26. வில்லியாதன்

போன்ற குறுநில மன்னர்கள் இருந்ததாக சங்கப் புறநூல்களில் உள்ள பாடாண்திணைப் பாடல்கள் காட்டுகின்றன.

குறுநில மன்னர்களின் இயல்பும், வேறுபாடுகளும்

குறுநில மன்னர்கள் என்ற பகுப்பு, பேரரசர், சிற்றரசர், ஊர்க்காவலர் இவர்களில் இருந்து வேறுபட்டு அமைகின்றது. இவர்கள் ஒரு மலையை மையமாக வைத்து நூற்றுக்கும் மேற்பட்ட ஊர்களை ஆண்டு வந்தவர்களாக இருக்க இயலும். குறுநில மன்னர்கள் பற்றிய ஆய்வளார்களின் கருத்துகள் இதன் பின் தொகுத்து ஆராயப்பெறுகின்றன.

"குறிப்பிட்ட சில சிறு நிலப்பகுதிகளைத் தன் ஆளுகைக்கு உட்படுத்தி, தன்னிடம் வரும் பரிசிலர்களுக்குப் பொன்னும், பொருளும் கொடுத்து உதவி தன் பகுதிக்குட்பட்ட மக்களைக் கண்ணும் கருத்துமாகக் காத்துதவியர்கள் குறுநில மன்னர்கள் ஆவர்"[79] என்ற குறிப்பு குறுநில மன்னர்க்கான வரையறையாக அமைகின்றது.

சீறூர் மன்னர்கள், முதுகுடி மன்னர்களை விட மேம்பட்டவர்களாக விளங்கி உள்ளனர். இவர்களது அடையாளப் பெயர்கள் பல ஊர்களைக் கொண்டு தனிநாடு பெற்று இவர்கள் வாழ்ந்தார்கள் என்பதைக் காட்டுவதாக உள்ளது. இம்மன்னர்கள் சீறூர் மன்னரைப் போலவோ அல்லது மருதநிலத்துப் பழமையான மூதூரை ஆண்ட முதுகுடி மன்னரைப் போலல்லாமல் பல ஊர்களைக் கொண்ட ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியினை ஆட்சி புரிந்தவர்கள் என்பது இங்கு எண்ணத்தக்கது.

‘‘தமிழகத்தில் முடிமன்னர்களான மூவேந்தர்கள் சங்க காலத்தில் ஆட்சி புரிந்து வந்தனர். இம்மூவேந்தர் தவிர பலகுறுநில மன்னர்கள் நாட்டின் ஆட்சிப் பகுதியினை பகிர்ந்து கொண்டனர். சிற்றரசர்கள் ஒவ்வொரு சமயம் முடிமன்னர்களின் அடி சாராது சுதந்திரமாகவும் ஆட்சி புரிந்தனர். ஆயினும் கொள்கையளவிலேனும் அவர்கள் மூவரில் ஒரு மன்னர்க்குக் கீழ்ப்படிந்தவராகக் கருதப்படுவார்கள். இத்தகைய சிற்றரசர்களின் தொகை

[79].இரா.ஜெகதீசன், (ப.ஆ) அகநானூறுஆய்வுக்கோவை, தொகுதி-3.

நூற்றிருபது என்று ஸ்மித் கணக்கிடுகிறார்"[80] என்ற குறிப்பு சிற்றரசர்களின் தொகையையும் அவர்களின் இயல்பினையும் காட்டுவதாக உள்ளது.

வேளிர், மழவர், ஆவியர் என்பன போன்ற பல்வேறு குடிகளின் வழித்தோன்றல்களாகத் தமிழகத்தின் பல்வேறு நிலப்பகுதிகளைத் தனது ஆளுகைக்கு உட்படுத்தி அரசாண்ட குறுநில மன்னர்கள் பெரும்பாலும் மலையும் மலையினைச் சார்ந்தும் அமைந்த நிலப்பகுதியினை ஆண்டவர்களாய் அமைந்திருந்தனர்.

மேலும், பழங்காலத்தில் பல நூற்றுக்கணக்கான சிற்றரசர்கள் ஆட்சி புரிந்து வந்துள்ளமையால் அவர்களுடைய ஆட்சியின் பிரதேசப் பரப்பு அளவில் மிகவும் குன்றியதாகவே அமைந்திருக்க வேண்டும் என எண்ணத் தோன்றுகிறது.

அவ்வாறு "சிறு பகுதிகளை ஆண்ட சில குறுநில மன்னர்களும் ஒருவகை முடியணிந்தனர் அது குறுமுடியாகும்."[81] குறுநில மன்னர்கள் முடியணிந்திருந்த போதும் குறுகிய நிலப்பகுதியினை ஆட்சிபுரிந்த காரணத்தினால் புலவர் பெருமக்கள் அவர்களை வேந்தர் என்னும் சொல்லால் குறிப்பிடவில்லை. இம்மன்னர்களை இறைவர் என்றும், பெருந்தகை என்றும், குருசில் என்றும் அழைக்கப்பட்டனர்.

குறுநில மன்னர்கள் இனக்குழு மக்கள் தலைவராக விளங்கி உள்ளனர். இதனை அவர்கள் ''மறவர் பெருமகன், கோவலர் வீரன், புன்புலத்து வேலோன் ஆகவும் இருந்துள்ளனர். மேலும் கலைஞர்களை வேறுபாடு இன்றி தம்முடன் ஒன்றாக உடனமர்த்தி பகிர்ந்துண்டு மகிழ்வதைக் காணலாம்''[82] என்ற குறிப்பின்வழி பெறமுடிகின்றது.

''குறுநில மன்னர்களில் சிலர் தம்மை 'வேள்' என்ற பெயரால் குறித்துக் கொண்டனர். அதன் அடிப்படையில் எடுத்துக் கொள்வோமானால் பாரிவேள்,

---

[80]. பெ.மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்.

[81]. ந. சுப்பிரமணியன், சமூகப் பண்பாட்டு தமிழகவரலாறு.

[82]. கா. சுப்பிரமணியன் - சங்க காலச் சமுதாயம் ஆய்வுக் கட்டுரைகள்.

ஆய்வேள் என்னும் பெயர்கள் ஆராயத் தக்கனவாக உள்ளன. "வேள் என்பதற்கு மண் என்பது பொருளாகும். மட்பாண்டம் செய்வோர் கூடச் சங்க இலக்கியப் பாடல்களில் 'வேட்கோவர்' என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். ஆகவே மண்ணுரிமை பூண்டவர் என்ற முறையிலும், அவர்கள் ஆட்சிபுரிந்த நிலத்தின் ஆதிகுடிகள் என்ற முறையிலும், தம்மை மன்னர் என்றும், வேள் என்றும் குறித்துக் கொண்டனர்."[83] என்ற குறிப்பும் குறுநில மன்னர்களின் இயல்பு, மரபுகளைக் காட்டுவதாக உள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களில் வேளிர்களும் குறுநில மன்னர்கள் போல கூறப்பட்டிருந்தாலும் வேளிர்களுக்கும், குறுநில மன்னர்களுக்கும் இடையில் சில வேறுபாடுகள் காணப்படுவதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். அந்த வகையில் வ.குருநாதன் "வேளிரெல்லோரும் குறுநில மன்னராயினும், குறுநில மன்னரெல்லோரும் வேளிராகார். எனவே வேளிரைக் குறுநில மன்னரினும் மேம்பட்ட சிறப்பினை உடையவர்களாகக் காணலாம்."[84] என்று வேறுபடுத்திக் காணுகின்றார்.

வேளிரென்போர் குறுநில மன்னர்கள் என்றாலும் அவர்களைக் குறித்த செய்திகள் சங்கஇலக்கியப் பாடல்களில் முழுமையாகவோ, அதிகமாகவோ காணப்படவில்லை. வேளிர் குறித்த ஒன்றிரண்டு குறிப்புகள் மட்டுமே கிடைக்கின்றன.

இந்நிலையில் வேளிரைப் பற்றிய பல்வேறு கருத்துக்கள் அறிஞர்களிடையே நிலவுகின்றன. வேளிர்கள் வடக்கிலிருந்து வந்தவர்கள் என்றும், யாதவர்கள் என்றும் பல்வேறு கருத்துக்கள் அறிஞர்களால் கூறப்படுகின்றன. ஆயினும் அவர்கள் இம்மண்ணோடு தொடர்புடைய ஆட்சிப் பொறுப்பில் இருந்துள்ளனர் என்பது பெறத்தக்க கருத்தாகும்.

வேளிர்கள் வடக்கிலிருந்து வந்தவர்கள் என்ற கருத்தானது பல காரணங்களினால் வன்மையற்றதாகவே காணப்படுகின்றன. இவர்கள்

---

[83]. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்கஇலக்கியத்தில்சமூகஅமைப்புகள்.

[84] . வ. குருநாதன், சங்ககாலஅரசவரலாறு .

தொன்று தொட்டு வாழ்ந்தவர்கள் என்பதை 'தொன் முதிர்வேளிர்' என அகநானூறு கூறுகின்றது. மேலும், 'எவ்வி தொல்குடி' என்று புறநானூறு அவர்களின் தொன்மையை விளக்குகின்றது.

**குறுநில மன்னர்களின் கொடைப்பண்பு**

இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைக் கொண்டிருந்த சீறூர் மன்னர்கள் மெல்ல பல்லூர் உடமையாளர்களாக மாறினர். குறிப்பிட்ட நில எல்லைகளை அடிப்படையாகக் கொண்ட அரசின் தலைவர்களாய் குறுநில மன்னர்கள் வளர்ந்தனர். குறுநில மன்னர்கள் சீறூர் மன்னர்களைப் போல் மக்களோடு மக்களாக இணைந்து வாழும் குழுத்தலைவர்களாக வாழாமல், அவர்களிடம் இருந்து மேம்பட்டுத் தனித்த அடையாளங்களுடனும், தமக்கென சில அதிகாரங்களும் கொண்ட உடைமைப் பண்புகளுடனும் அவர்கள் விளங்கினர். இவர்கள் தங்களிடம் உள்ளதைப் புலவர்களுக்கு பகிர்ந்து அள்ளிக் கொடுத்து உபசரிக்கும் குணமுடையோராகவும் விளங்கி உள்ளனர்.

குறுநில மன்னர்கள் வள்ளல்களாக வாழ்ந்துள்ளனர் என்பதை சங்கப் பாடல்களின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

**அவியன்**

''களிமலி கள்ளின் நல்தேர் அவியன்''[85] என்று அவியனை காவிரி பூம்பட்டினத்து செங்கண்ணணார் புகழ்ந்து கூறி உள்ளார். கான்கெழு நாடன், கருந்தேர் அவியன் என புறநானூற்று பாடாந்திணையில் மாறோக்கத்து நப்பசலையர் இம்மன்னனைக் குறிப்பிடுகின்றார். ஆகவே இம்மன்னனை காடு சூழ் நாட்டுப் பகுதியைச் சார்ந்தவன் என்று எண்ணமுடிகின்றது.

மாறோக்கம் என்பது கொற்கை கடற்கரைப் பகுதியைச் சார்ந்த ஒரு பகுதி ஆகும். 'சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனும், மலையமான் திருமுடிக்காரியும் அவியனின் காலப்பகுதியைச் சார்ந்தவர்கள் ஆவர். அவியனைப் போன்றே அவனது மனைவியும் சிறந்த புகழுடன் விளங்கியவள்

---

[85] . முனைவர்.இரா. சாரங்கபாணி, ( ப.ஆ)சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தொகுதி -1.

என்பதை 'கற்புடை மடந்தை தற்புறம் புல்ல', என்று நப்பசலையர் புல்ல என்று புறநானூற்றில் இவனைப் போற்றிப்பாடுவதனால் அறிந்து கொள்ள முடிகின்றது. இம்மன்னனைப் பற்றி புறநானூற்றுப் பாடாண்திணைப் பாடல் ஒன்றில் செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

<u>விருந்தோம்பல் பண்பு</u>

அவியன் என்னும் குறுநில மன்னன் தன்னை நாடிவரும் புலவர்களிடம் காட்டும் விருந்தோம்பும் பண்பு குறித்து மாறோக்கத்து நப்பசலையார் பின்வருமாறு பாடுகிறார்.

**"ஊன் புலந்து**
**அருங்கடி வியல்நகர்க் குறுகல் வேண்டிக்**
**கூம்புவிடு மென்பிணி அவிழ்த்த ஆம்பல்**
**தேம்பாய் உள்ள தம்கமழ் மடர்உள**
**பாம்புஉரி அன்ன வடிவின"          (புறம்.383: 5-9)**

இப்பாடலின் பொருள் பின்வருமாறு.

தன்னை மிகுதியாக வாட்டமடையச் செய்த துயர்நிலை நீங்க, இரவலர்க்கு மதுவினை அளித்தவன் இவன் ஆவான். அம்மதுவினையும், மணம் கமழும் நிலையில் குவளையில் தந்து இன்புற்றவன் இவன் ஆவான்.

இதன்பின், பாம்பின் தோலினை உரித்தால் ஏற்படும் வடிவினை போன்ற, மூங்கிலின் உட்புறத்தில் இருந்து பெயர்த்தெடுக்கப்படும் வெண்மையான தோல் போன்று நெய்யப்பட்ட ஆடையை வழங்கினான்.

இவ்வாடை இழைகளின் வரிசையான காண்பவர் கண்களுக்குப் புலப்படாதவாறு மென்மையான பூவால் நெய்யப்பட்டது போன்றமைந்திருந்தது.

இவ்வாறு தன்னை நாடிவந்த இரவலர்க்கு வயிறு நிறைய உணவும், உடல் நிறைய ஆடைகளும், மனம் நிறைய பொருளும் கொடுக்கும் இயல்பினன்

என்பதால் அவியனின் கொடையுள்ளம் குறித்த ஆளுமைப் பண்பினை நன்கு அறிய முடிகின்றது.

**தன்நிலை மாறாத தன்மை**

வானில் வரும் கோள்களானது தனது நிலையில் இருந்து மாறிச் செயல்பட்டால் உலகினில் வளம் குன்றும் என்பது உலக வழக்கு ஆகும். அவ்வாறு கோள்கள் தனது நிலையில் இருந்து மாறி செயல்பட்டாலும் இவனின் கொடுக்கும் பண்பு மாறாது என்பதை

**"அறான் எவன் பரிகோ வெள்ளியது நிலையே" (புறம். 383: 23)**

என்ற புறப்பாடல் அடி காட்டுகின்றது.

அவியன் என்னும் மன்னனானவன் தன்னை நாடி வரும் பரிசிலர்களுக்கு பரிசில் அளிக்கும் அறநிலையில் இருந்து மாறிச் செயல்பட மாட்டான் என்று நப்பசலையார் குறிப்பிடுவதால் அவியம் அறிவுப் பூர்வமாகவும் நியாயமாகவும் செயல்படும் ஆளுமைப் பண்புடையவன் என்பது அறியலாகின்றது.

**அதியமான் மகன் பொகுட்டெழினி**

பொகுட்டெழினி என்பான் கொடைப் பண்பினையும் வெற்றியையும் தன்னகத்தே கொண்டு திகழும் சிறப்புக்களை உடையவன். இம்மன்னனை 'நெடியோய்! திங்கள் திங்கள் நாள்நிறை மதியத்து அனைய! இருள் யாவணதோ நின் நிழல் வாழ்வோர்க்கே என்று போற்றுகின்றார் ஔவைப்பிராட்டி. இவனது போர் வீரம் பற்றி இவனது தந்தையான அதியமான் நெடுமான் அஞ்சியினை போற்றிப் பாடிய ஔவையார் அவர்களே பாடியுள்ளார். இதனால் சேரனுக்கும் அதியமானிற்கும் நடந்த போரில் ஏற்பட்ட தகடூரின் அழிவிற்குப் பின்னர், இவன் மீண்டும் தன் நாட்டினை புகழுடன் செப்பனிட்டு ஆண்டு வந்தான் என்பது புலனாகின்றது. இவனைப் பற்றிய செய்தி புறநானூற்றுப் பாடாண்திணையில் ஒரு பாடலில் காணப்படுகின்றது. மேலும் அரிசில்கிழார் என்ற புலவரும் பொகுட்டெழினியை போற்றிப் பாடியுள்ளார்.

**விருந்தோம்பல் பண்பு**

அதியமான் மகன் பொகுட்டெழினி என்னும் மன்னனானவன் தனது அவைக்கு வருகை புரிந்த ஔவையாரைப் புரந்தநிலை பின்வருமாறு.

**"ஊர்உண் கேணிப் பகட்டு இலைப் பசி**
**வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை**
**நுண்நூல் கலிங்கம் உடீஇ உண் எனத்**
**தேட்கடுப்பு அன்ன நாட்படு தேறல்**
**கோள்மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ**
**ஊண்முறை ஈத்தல் அன்றியும் கோள்முறை**
**விருந்துஇறை நல்கி யானே"          (புறம். 392: 13-19)**

என்ற பாடலின் வழி ஔவையார் அவனின் கொடைத்தன்மையைப் பாடுகிறார். அதியமான் மகன் பொகுட்டெழினி, ஊரில் உள்ள மக்கள் நீர் உண்பதற்காக உள்ள கேணியிற் படர்ந்து காணப்படும் இலையை உடைய பாசியினது வேரினைப் போன்ற கிழிந்த உடையைக் களையச் செய்து, பெரிய கரையினை உடைய மென்மையான நூலினால் நெய்யப்பட்ட உடையினைத் தந்து தன்னை உடுக்கச் செய்தான். பின் உண்ணுங்கள் என்று தேனினது கடுப்பு போல் நாட்பட்டு புளிப்புத் தன்மை கொண்ட கள்ளினை, கோள்களாகிய விண்மீன் போன்று ஒளிவிடும் பொன்னால் செய்யப்பட்ட வள்ளத்திற் ஊற்றி, உண்ணும் முறைப்படி அளிக்காமல், கொள்ளும் முறையில் விருந்தாக எம்மை இருத்தி உண்ணச் செய்தான் என்று அவனது விருந்தோம்பல் பண்பினை ஔவையார் கூறுவதனால் பொகுட்டெழினியிடம் சரியாக நன்முறையில் எல்லாவற்றையும் ஏற்பாடு செய்யும் ஆளுமைப் பண்பு வெளிப்படுகிறது.

**வீரம்**

பொகுட்டெழினி என்பவன் தன்னுடன் பகை கொண்டு போர் புரியும் பகைவரின் நாட்டினை கைப்பற்றி தனதாக்கிக் கொள்பவன் என்பதை,

**"வெள்வாய்க் கழுதைப் புல்இனம் பூட்டி**
**வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்**

**வைகல் உழவ! வாழிய பெரிது!" (புறம்.392: 9-11)**

என்னும் ஔவையார் பாடல் காட்டுகிறது. நெற்பயிர்கள் விளைந்த வயல்வெளியில் வெண்மையான வாயினை உடைய கழுதைகளை ஏறில் பூட்டி, அந்நிலத்தினை உழுது வரகும், கொள்ளும் விதைக்கச் செய்யும் தன்மையினை உடையவன் என்று ஔவையார் பொகுட்டெழினியின் வீரம் குறித்து கூறுவதனைக் காணமுடிகின்றது.

**<u>அம்பர்கிழான் அருவந்தையன்</u>**

அருவந்தையன் என்பான் அம்பர் என்ற ஊரினன். இவன் வேளாண் குடியில் தோன்றியவன். இவன் சோழநாட்டினைச் சார்ந்த குறுநிலத் தலைவன். இவன் பெரிய நிலப்பரப்பு பகுதிக்கு உரியவனவாகவும், இவன் தன்னிடம் வந்து இரந்து நிற்போரின் தேவைகளுக்கும் அதிகமான பொருட்களை வரையாது வழங்கி மகிழும் புகழுடையவனாகவும் திகழ்ந்து விளங்கியவன். இக்குறுநிலத் தலைவனைப் புகழ்ந்து பாடியவர் கல்லாடனார் பாடியுள்ளார் என்பதால் அம்பர்கிழான் அருவந்தையன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தினைச் சார்ந்தவன் என்று கொள்ள முடிகின்றது புறநானூறு பாடாண்திணையில் இக்குறுநில மன்னனைப் பற்றிய ஒரு பாடல் இடம் பெறுகின்றது.

**<u>கொடைத்தன்மை</u>**

அம்பர்கிழான் அருவந்தையன் எனும் குறுநில மன்னன் தன்னை நாடிவந்த இரவலர்களின் வறுமை நிலையினை நீக்கிய தன்மையினை,

**"வறன்யான் நீங்கல் வேண்டி என்அரை**
**நீல்நிறச் சிதாஅர் களைந்து**
**வெளியது உடீஇ என்பசி களைந்தோனே" (புறம். 385: 5-7)**

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன. இப்பாடலடிகளின் பொருள் பின்வருமாறு. நான் என்னுடைய வறுமை நிலையிலிருந்து நீங்குதலை விரும்பிய அம்பர்கிழான் அருவந்தையன், என்னுடைய இடையில்

உடுத்தியிருந்த அழுக்குப் படிந்தும், எனது வியர்வைப் பட்டதனால் நீலநிறமுடையதாகவும் இருந்த கந்தைத் துணியினை என்னிடம் இருந்து நீக்கி வெள்ளிய பட்டாலான மெல்லிய இலைகளால் நெய்யப்பட்ட ஆடையினை தந்து என்னை உடுத்தச் செய்து, என்னுடைய பசியாகிய துன்பத்தினைப் போக்கினான் என்று இரவலன் வழி கல்லாடனார் காட்டுவதில் இருந்து அம்பர்கிழான் அருவந்தையன் கொடைத்தன்மை என்ற ஆளுமைப் பண்பு பெற்றிருத்தலை அறியமுடிகின்றது.

**ஆதனுங்கன்**

ஆதனுங்கன், வேங்கடமலைப் பகுதியில் ஒரு குறுநிலத் தலைவனாக திகழ்ந்தவன். இக்குறுநிலத் தலைவனைப் போற்றிப் பாடியவர் கள்ளில் ஆத்திரையனார் என்பவர் ஆவார். ஆதனுங்கன் சிறந்த அறிவாளனாக விளங்கியுள்ளான். புறநானூற்றுப் பாடாண்திணையில் இரண்டு பாடல்களில் இக்குறுநிலத் தலைவனான ஆதனுங்கன் பற்றி உரைக்கப்பட்டுள்ளது.

**நாட்டினை பாதுகாக்கும் தன்மை**

நிலவுலகில் சூரிய ஒளியானது நாள்தோறும் விழுந்து உலக உயிர்களை இருளில் இருந்து பாதுகாத்தலைப் போன்றும், மோரியர் வடநாட்டினை முழுதும் கைப்பற்றி தனது ஆளுகைக்கு உட்படுத்தி ஆண்டதனைப் போன்றும் ஆதனுங்கன் ஆட்சி புரிந்தான் என்பதை,

**"வென்வேல்**
**விண்பொரு நெடுங் குடைக் கொடித்தேர் மோரியர்**
**திண் கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த**
**உலக இடைகழி அறை வாய் நிலை இய**
**மலர்வாய் மண்டிலத்து அன்ன நாளும்**
**பலர் புரவு எதிர்ந்த அறத்துறை நின்னே" (புறம். 175: 5-10)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

வெற்றி பொருந்திய வேலினையும், வானைத்தை தொடும் அளவிற்கு உயர்ந்து விளங்கும் குடையினையும், கொடியணிந்த தேரினையும் உடைய மோரியர் நிலவுலகம் முழுதும் தன்கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்து ஆண்டனர். மோரியர் என்பவர்கள் வட நாட்டினில் வாழ்ந்த சக்கரவாள சக்கரவர்த்திகளான விச்சாதரும், நாகரும் ஆவர். அம்மோரியரது, தேரின் ஆரக்கால் சூழ்ந்த சக்கரம் செல்வதற்காக வெட்டி வழி ஏற்படுத்தப்பட்ட வெள்ளிமலைக்கு அடுத்து, நிலைத்த தன்மை கொண்டதாக விளங்கும் பரந்து விரிந்த இடத்தினை கொண்ட ஆதித்த மண்டிலத்தை (சூரிய மண்டிலம்) ஒப்பவன் நீ. அச்சூரிய மண்டிலத்தில் தோன்றும் சூரிய ஒளியானது நாள்தோறும் தோன்றி உலக உயிர்களை இருளில் இருந்து காப்பது போன்று ஆதனுங்கன் ஆகிய நீயும் நாள்தோறும் இரவு பகல் என்று பாராமல் உனது நாட்டிலுள்ள அனைவரையும் பாதுகாக்கும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டு, ஒரு தன்மையதாக விளங்கும் அறத்துறையாக ஆகியவன் நீ என்று கள்ளில் ஆத்திரையனார் கூறுவதன் மூலம் ஆதனுங்கன் தனது நாட்டு மக்களினை பாதுகாக்கும் தன்மையினையினைக் கொண்டு ஆதனுங்கனின் நாட்டு நிர்வாகம் தொடர்பான ஆளுமைப் பண்பினை அறியமுடிகின்றது.

**கருணை உள்ளம்**

வேங்கட நிலப்பகுதியினை ஆண்டு வந்த ஆதனுங்கன் தன்னிடம் வருகைபுரியும் புலவர், பாணார், விறலியர்களுக்கு உதவிபுரிவதோடு மட்டுமல்லாமல் அஃறினை உயிர்களுக்கும் உதவி புரியும் கருணை உள்ளம் கொண்டவன் என்பதை,

**"புன்தலை மடப்பிடி இனைய கன்றுதந்து**
**குன்றக நல்ஊர் மன்றத்துப் பிணிக்கும்**
**கல்இழி அருவி வேங்கடம் கிழவோன்**
**செல்வுழி எழாஅ நல்ஏர் முதியன்" (புறம். 389: 9-12)**

என்ற பாடல் இதனைச் சுட்டுகிறது.

சிவந்த தலையினை உடைய பெண்யானையானது தனது கன்றினை பிரிந்து வருந்தியதைக் கண்ட ஆதனுங்கன், பிரிந்து சென்ற கன்றினை பிடித்து ஊர் மன்றத்தில் கட்டிவைத்து பின் அதை அதன் தாய் யானையுடன் சேர்த்து வைத்து மகிழ்ச்சி அடைந்தான். போர்க்களத்தில் ஆதனுங்கனின் பகைவர் அவனுடன் எதிர்த்துப் போரிடமுடியாமல் புறங்கொடுத்துச் செல்லும்போது, அவர்களைப் பின்தொடர்ந்து சென்று போர்புரியும் தன்மை அற்றவன் என்பதில் இருந்து ஆதனுங்கன் அஃறினை உயிர்களிடத்தும், பகைவர்களிடமும் கருணை உள்ளத்துடன் நடக்கும் ஆளுமைப் பண்பு உடையோனாகத் திகழ்கின்றான்.

**இருங்கோவேள்**

பழமையான வேளிர் குடியினைச் சேர்ந்த குறுநில மன்னர்களுள் ஒருவன் இருங்கோவேள். 'புலிகடிமால்' என்னும் பெயராலும் இருங்கோவேள் அழைக்கப்படுகின்றான். வேள்பாரியின் மறைவிற்குப் பின்னர், அவன் மகளிரைக் கபிலர் இம்மன்னனிடம் அழைத்துச் சென்று அப்பெண்களை மணந்து வேள்பாரியின் மக்களுக்கு வாழ்வளித்து உதவி புரியுமாறு வேண்ட, அவ்வேண்டுகோளினை ஏற்க மறுத்தவன் இருங்கோவேள். இவன் சிற்றரையம், பேரரையம் என்னும் கோட்டைகளை தன்னகத்தே கொண்டவன். காரிகாற் பெருவளத்தானால் போர்களத்தில் தோற்கடிக்கப்பட்டவர்களுள் இக்குறுநில மன்னனும் ஒருவன் ஆவான். தலையாங்கானத்துப் பெரும் போரில் நெடுஞ்செழியனோடு போர்புரிந்து புறமுதுகிட்டு தோற்றோடியவர்களுள் இவனும் ஒருவன் ஆவான். இக்குறுநில மன்னனை எவ்வி என்னும் பரம்பரை மரபினைச் சார்ந்தவன் எனவும், இம்மன்னன் மரபினைச் சார்ந்தவர்களே பிற்கால ஹொய்சாள மன்னர்கள் எனவும் கருதப்படலாகின்றது. இருங்கோவேள் தொடர்பான இரண்டு பாடல்கள் புறநானூற்றுப் பாடாண் திணையில் இடம் பெற்றுள்ளன.

**வீரம்**

வடபகுதியில் தவமுனிவர்களுடைய யாக குண்டத்தில் உதித்த செம்பாற் கொண்டு உருவாக்கப்பட்டது, போன்ற நீண்ட துவராபதி என்கிற நாட்டை

ஆட்சி புரிந்து, தன்னிடம் வரும் இரவலர்களுக்கு வரையாது வழங்கும் கொடைப்பண்பினை உடைய நாற்பத்தொன்பது தலைமுறைகளைக் கொண்ட வேளிர்களுள் ஒருவன் இருங்கோவேள் என்பதைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"வான் கவித்து**
**இருங்கடல் உடுத்த இவ்வையகத்து அருந்திறல்**
**பொன்படு மால்வரை கிழவ! வென்வேல்**
**உடலுநர் உட்கும் தானை**
**கெடல் அருங்குரைய நாடு கிழவாயே!" (புறம். 201; 16-20)**

வானத்தினால் கவிழ்க்கப்பட்டு, பெருங்கடலினால் சூழப்பட்டதாக விளங்கும் இவ்வுலகில் உனது பகைவர் அணுகுவதற்கு அரிதாக விளங்கும் பொன் விளையும் மலைக்குத் தலைவனாக விளங்குபவனே! போர்க்களத்தில் வெற்றியினை உனதாக்கும் வேலினையும் உனது பகைவர்கள் கண்டவுடன் அச்சம் கொள்ளும் படையினை தன்னகத்தே கொண்ட கேடில்லாத நாட்டிற்குத் தலைவனே என்று கபிலர் கூறுவதன் வாயிலாக இருங்கோவேளின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை காணமுடிகின்றது.

**<u>இளங்கண்டீரக்கோ</u>**

கண்டீரக்கோப்பெருநள்ளி என்னும் வள்ளலின் இளையவன் இளங்கண்டீரக்கோ ஆவான். இக்குறுநில மன்னனின் உற்ற நண்பனாக இளவிச்சிக்கோ என்பவன் விளங்கினான். பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் கண்டீரக்கோவின் குடிச் சிறப்பினைப் பற்றி பாராட்டியுள்ளார். இளங்கண்டீரக்கோ பற்றிய குறிப்பு புறநானூற்றுப் பாடாண்திணையில் ஒரு பாடலில் இடம் பெறுகின்றது.

**<u>நாடாளும் திறம்</u>**

இளங்கண்டீரக்கோ என்னும் குறுநில மன்னன் தனது ஆட்சிக் காலத்தில் தனது நாட்டினை வளங்கள் நிறைந்து விளங்கும் நாடாகக் கண்டோர், கேட்டோர் வியந்து எண்ணுமளவிற்கு ஆட்சிபுரிந்து வந்தான் என்பதனை,

**"விண்தோய் சிமைய விறல் வரைக் கவாஅன்**
**கிழவன் சேட்புலம் படரின் இழை அணிந்து**
**புன்தலை மடப்பிடி பரிசிலாக**
**பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்"      (புறம்.151: 2-5)**

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

தலைவி ஒருத்தி இளங்கண்டீரக்கோவின் நாட்டிற்குப் பொருள் தேடச் சென்ற தன் தலைவனின் பிரிவினை முன்வைத்து இவ்வேந்தனின் நாட்டுவளத்தை மேற்காண் பாடலில் பாடியுள்ள நிலையில் பரணர் இப்பாடலை படைத்துள்ளார்.

வானளவு உயர்ந்து விளங்கும் உச்சியினை உடைய மலை நாட்டிற்கு தன்னுடைய தலைவன் பொருள் தேடச் சென்றிருக்கிறார். அந்நாடானது கைகளில் அணிகலன்கள் அணிந்த மகளிர் தமது இல்லங்களுக்கு வருகை புரியும் பாடுநர்களுக்கு கொடையாக தம் தகுதிக்கு ஏற்றார்போல் பிடியானைகளை அளித்து மகிழ்ச்சி கொள்ளும் நாடு என்ற நிலையில் வளம் பெற்றதாகும். இதனைத் தலைவி வாயிலாக வன்பரணர் கூறுவதிலிருந்து இளங்கண்டீரக்கோவின் நாடாளும் திறத்தினையும், அம்மன்னனின் மக்கள் கொண்டிருந்த ஈகை குணத்தினையும் அறிய முடிகின்றது.

**<u>இளவிச்சிக்கோ</u>**

இளவிச்சிக்கோ விச்சிக்கோவின் இளவல் ஆவான். இக்குறுநில மன்னன் இளங்கண்டீரக்கோவின் நண்பனாக விளங்கியுள்ளான். இம்மன்னனும் இளங்கண்டீரக்கோவும் ஒருங்கே இருந்த போது அங்கே சென்ற வன்பரணர் இளங்கண்டீரக்கோவை மட்டும் கட்டித் தழுவினார். இளவிச்சிக்கோவினை தழுவாமைக்கான காரணமாக வண்பரணர் இளவிச்சிச்கோவாகிய நீ எம்போல் பாடி வருவோர்க்குக் கதவை அடைத்து மறுக்கும் தன்மை கொண்ட நன்னன் மரபில் தோன்றியோன். ஆகையாலே, என்போன்ற புலவர்கள் உனது மலையான விச்சிமலையை புகழ்ந்துபாடுதலை ஒழித்தனர் என்றும் கூறியதாகவும், இதன் காரணமாக அவனை விடுத்ததாகவும்

அறியப்படுகின்றது. இம்மன்னனைப் பற்றிய இரண்டு பாடல்கள் புறநானூற்றுப் பாடாண்திணையில் இடம்பெற்றுள்ளன.

**வீரம்**

விச்சிக்கோ போர்க்களத்தில் தனது பகைவர்களுடன் போர் புரிகின்ற பொழுது தன்னுடைய வாளின் ஆற்றலினால், அவர்களை தனக்கு பணியவைக்கும் வலிமை உடையவன். என்பதைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"நிணம் தின்று செருக்கிய நெருப்புத்தலை நெடுவேல்**
**களம் கொண்டு கனலும் கடுங்கண் யானை**
**விளங்கு மணிக் கொடும்பூண்" (புறம்.200: 6-8)**

போர்க்களத்தில் பகைவர்களின் குருதிபடிவதினால் நெருப்பு போன்ற தலையினை உடைய வேலினையும், பகைவருடைய சினம் கொண்ட யானைகளைப் பகைவரை வென்று தனதாகக் கொள்ளும் ஆற்றலுடையவனாகவும் விச்சிக்கோ விளங்குவதாகக் கபிலர் அவர்கள் இப்பாடலின்வழி எடுத்துரைப்பதனால் விச்சிக்கோவின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

**இளவெளிமான்**

இளவெளிமான் என்ற குறுநில மன்னன் வெளிமான் என்ற மன்னின் இளவல் ஆவான். இம்மன்னனிடம் பரிசில் வேண்டி பெருஞ்சித்திரனார் செல்ல இள வெளிமான் புலவர்க்கு அவரது தகுதியறிந்து பரிசில் வழங்காது கடமையென பரிசில் வழங்க அதனைப் பெறாது அவரால் அவமதித்து பாடப்பெற்ற பழியினைப் பெற்றுள்ளான். இம்மன்னன் பற்றி புறநானூற்றுப் பாடாண்திணையில் ஒரு பாடலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**"மீளி முன்பின் ஆளிபோல**
**உள்ளம் உள் அவிந்து அடங்காது" (புறம். 207; 8-9)**

என்ற பாடலடிகள் தரும் பொருள் பின்வருமாறு.

போர்க்களத்தில் இளவெளிமான் என்போன் தனது பகைவர்களிடம் வலிமை வாய்ந்த சிங்கம் தனது உணவிற்காக வேட்டையாடும் திறம் போன்று நடந்து கொள்பவன் என்பது மேற்பாடலடிகள் வழியாகப் பெறலாகும் பொருளாகும்.

**ஏறைக்கோன்**

குறவர் குடியில் தோன்றி மேற்குத்தொடர்ச்சி மலைப் பகுதியில் அமைந்துள்ள ஏறை என்ற மலைப் பகுதியினை ஆண்டு வந்த குறுநில மன்னன் ஏறைக்கோன். இம்மன்னன் சிறந்த போர் வீரனாகவும் விளங்கியுள்ளான். இக்குறுநில மன்னன் மூவேந்தருள் ஒருவருக்கு உட்பட்டு ஆட்சி புரிந்து வந்துள்ளான் என்பது புலனாகின்றது.

ஏறைக்கோன் 'பெருங்கல் நாடன்' எனவும் சிறப்பிக்கப்படுகின்றான். குறமகள் இளவெயினி என்ற பெண்பாற்புலவர் ஏறைக்கோன் என்னும் குறுநில மன்னனது வீரத்தினைப் பாராட்டிப் பாடியுள்ளார்.

**குணநலன்**

குறமகள் இளவெயினி ஏறைக்கோன் பற்றி பாடியுள்ள புறநானூற்று பாடாண்திணையில் அமைந்த நான்கு பாடல்களில் இக்குறுநில மன்னனது பண்புகளைப் (குணநலன்) பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**"தமர் தற் தப்பின் அது நோன்றல்லும்**
**பிறர் கையறவு தான் நாணுதலும்**
**படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்**
**வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும் (புறம்.157; 1-4)**

என்ற பாடலடிகள் இம்மன்னனின் சிறப்பினைக் காட்டுவனவாகும்.

ஏறைக்கோன் என்னும் குறுநிலத் தலைவன் தமக்கு வேண்டிய சுற்றத்தாரால் பிழை ஏதேனும் ஏற்பட்டாலும், அதனை பொறுத்துக் கொண்டு அப்பிழையினை சரிசெய்ய முயலுவான். இவன், பிறர் வறுமை நிலையினால் துன்பமடைதலைக் கண்டால். அதனைத் தான் முன்பே கண்டு அவர்களின்

வறுமை நிலையினை ஒழிக்காதது தனது குற்றம் என எண்ணிக் கொண்டு நாணும் தன்மை உடையவன். இவன் தனது பகைவருடன் போர்புரியும் போர்க்களத்தினில் புறமுதுகிடாத ஆண்மைத் தன்மை கொண்டவன். அறிவு, ஆண்மை, பொருள், படைத்திறனால் சிறந்து விளங்குவதனால் பிற வேந்தர்களின் அவையிடத்து பெருமிதத்துடன் நடவாமல் தோற்றமளிப்பவன் ஏறைக்கோன் என இவனது பண்புகளைச் சிறப்பித்துக் குறமகள் இளவெயினி பாடியுள்ளதால் ஏறைக்கோன் தன் மனத்திற்கு உகந்தவற்றைச் செய்யும் ஆளுமை பண்புடையவன் என்பது புலனாகின்றது.

## ஒய்மான் நல்லியக்கோடன்

ஏழு நரம்புகள் கொண்ட யாழை மீட்டிப் பாடும் சிறுபாணன் என்னும் இசைக்கலைஞன் ஓவியர் குடியில் தோன்றி ஒய்மா நாட்டினை ஆண்டு வந்த நல்லியக் கோடன் என்னும் அரசன் பால் சென்று பரிசில் பெற்றுச் செல்லுமாறு ஆற்றுப்படுத்துவதாக அமைந்த நூல் சிறுபாணாற்றுப்படை ஆகும். இச்சிறுபாணாற்றுப்படை என்னும் நூலினை இருநூற்று அறுபத்து ஒன்பது அடிகளால் இயற்றிய இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் அவர்கள் இதன் பாட்டுடைத் தலைவனான நல்லியக் கோடனின் ஆளுமைப் பண்புகளை இதனுள் எடுத்துரைத்துள்ளார்.

## விருந்தோம்பல் பண்பு

மாவிலங்கை என்ற தலைநகரில் அமர்ந்து கொண்டு ஒய்மா நாட்டினை ஆண்டு வந்தவன் நல்லியக் கோடன். இவன் தன் அரண்மனை வாயிலை அடைந்த பாணர்களை தானே எதிர் சென்று அழைத்து வந்து, பாணரின் வறுமை நிலையினை மற்றவர்கள் அறியுமாறு திகழும் அவர்கள் உடுத்திய கந்தல் ஆடையினை நீக்கி செல்வச் சிறப்பினை உடையோர் அணியும் மூங்கிலின் உள்தோலை உரித்தது போன்ற தூய்மையான ஆடையினை உடுக்கச்செய்து பாணனின் மனத்தை மகிழ்விப்பான். மேலும், பாணன் வெகுதொலைவில் இருந்து தன்னுடைய நாட்டிற்கு வருகை புரிந்த காரணத்தினால் பாணனின் உடற்களைப்பு நீங்குவதற்காக ஒருவன் உடலில்

பாம்பானது தீண்டுவதால் நஞ்சேறி மயங்குதல் போன்று களிப்பு தரும் நல்ல கள்ளினை பாணர்களுக்குப் பருக கொடுத்து அவர்களின் உடற்களைப்பினை நீங்கச் செய்வான். இவன் பஞ்ச பாண்டவர்களில் ஒருவனான அர்ச்சுனனின் அண்ணன் ஆகிய வீமன் எழுதிச் சென்ற சமையல் நூலில் காட்டியுள்ள விதிகளின் படி சமைத்த பல்வேறு வகையான சுவைபொருந்திய உணவினை வயிறார வழங்குவான் என்பதை,

**"காம்பு சொலித்தன்ன அறுவை உடீஇ**

**……………………………………..**

**ஆன விருப்பின் தான்நின்று ஊட்டி"** **(சிறுபாண். 236 -245)**

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

இளம் கதிரவனைப் போன்று ஒளிவீசித் திகழ்கின்ற பொன்னால் செய்யப்பெற்ற உணவுப் பாத்திரத்தில் இட்டு, பாணர்கள் விரும்பும் உணவினை அளித்து, அவர்கள் மீது உள்ள விருப்பத்தின் காரணமாக நல்லியக்கோடனே பாணர்களின் முன்னின்று பாணர்களை உணவினை உண்ணுமாறு செய்வான் என்பது இவனின் விருந்து போற்றும் நடைமுறையாகும்.

**அரசவையில் நல்லியக்கோடனின் குணநலன்**

நல்லியக்கோடன் அறிஞர், மறவர், மகளிர் பரிசிலர் எனப் பல்லோராலும் புகழ்ந்து பாராட்டப்பட்டமைக்கு காரணமாக அமைவது இம்மன்னனிடம் அமைந்த குணநலன்களே ஆகும். நல்லியக்கோடன் பால் விருப்பமுடையவர்களாய், அனைத்துக் காலங்களிலும் இம்மன்னனுடன் நெருங்கி வாழ்கின்ற சான்றோர்கள்,

**"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**

**செய்நன்றி கொன்ற மகற்கு"** **(குறள்; 110)**

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப நல்லியக் கோடனின் செய்நன்றி அறிதற் சிறப்பையும், உலக இயல்பிற்கு மாறான தவறான செயல்களைப் புரியும் சிற்றினத்தாரோடு சேராமல் உள்ள சிறப்பினையும், தனது அவைக்கு வருகை

புரியும் அனைவரிடத்தும் இன்முகத்துடன் விளங்கும் சிறப்பினையும் பெற்றிருந்தான்.

மேலும் தனது அரசவைக்கு வருகை புரியும் பரிசிலர்கள் அறியாது தவறானவற்றை கூறுகின்ற பொழுது கூட நல்லியக்கோடன் அத்தவற்றினை எடுத்துக் காட்டாமல் அறிந்தும் அறியாதவன் போன்று அவர்கள் கூறுவதனை விருப்பமுடன் கேட்டுக் கொள்வான். இவன் நல்ல அறிஞர்களிடம் அவர்கள் கூறுவதன் நுணுக்கங்களையும் அறிந்து கொள்ளும் அறிவுடையவனாகத் திகழ்வதனால் நல்லியக்கோடனிடம் ஆழ்ந்த யோசனை செய்து தீர்மானமான முடிவினை எடுக்கும் ஆளுமைப் பண்பு வெளிப்படுவதனை காணலாம்.

**<u>கொடைப்பண்பு</u>**

தமிழ்நாட்டில் இறைவனைப் போற்றுதல், இரவலர்களைப் பாதுகாத்தல், புலவர்களைப் பேணுதல், அஃறிணை உயிர்களிடத்து இரக்கத்துடன் விளங்கிய கடையேழு வள்ளல்களாகிய பேகன், பாரி, காரி, ஆய், அதிகமான், நள்ளி, ஓரி என்னும் எழுவர் பூண்ட கொடையாகிய பாரத்தினை இவ்வுலகம் விளங்கும்படி தான் ஒருவனே மேற்கொண்டு தாங்கிய வலிமை மிகுந்த முயற்சியை உடையவன் நல்லியக்கோடன் ஆவான். இம்மன்னனின் அரண்மனை வாயிலானது பொருநர், புலவர், அருமறை அந்தணர் முதலியோர் உள்ளே வருவதற்காக எப்பொழுதும் அடைக்கப்படாமல் திறந்தே காணப்படக் கூடியதாக விளங்கும் நல்லியக்கோடன் தன் நாட்டிற்குத் தன்னை விரும்பி வருகை புரிந்த பரிசிலர், பாணர் போன்றோர்களை தனது கண்களால் பார்த்தவுடனே அவர்களது நிலையினை நன்கு உணர்ந்து பின்னாட்களில் அவர்களுக்குத் துன்பம் ஏற்படா வண்ணம் பொருட்களை வழங்கி வறுமை என்னும் கொடிய நோயினை தீர்த்தவன் ஆவான். மேலும், தான் பகை அரசர்களுடன் போர்புரிந்து அவர்களிடம் இருந்து திறையாகப் பெற்ற பொருட்களுடன் பல்வேறு பொருட்களையும் பாணர்களுக்கு பரிசிலாக வழங்கக் கூடியவன். நல்லியக்கோடன் நல்ல வேலைப்பாடுடைய தேர், தன்னுடைய ஓட்டத்தின் வேகத்தினால் குதிரையினையே பின்னடையச்

செய்யும் வெள்ளைஎருது, குதிரை, பல அணிகலன்கள் முதலானவைகளை பரிசில்களை பாணனுக்கு வழங்கி தன்னிடம் வந்த 'அன்றே செல்க' என்று, பரிசில் வழங்கக் காலம் நீடிக்காத பண்புடையவன்.

**வீரம்**

நல்லியக் கோடனின் அரண்மனை வாயிலானது பொருநர், புலவர், அந்தணர் முதலானோர் வருகைக்காகவே எந்நேரமும் திறந்து காணப்படுமே தவிர, இம்மன்னனின் பகைவர்கள் உள்ளே நுழைவதற்கு மிக அரிய வாயிலாகக் காணப்படும் என்று காட்டுவதன் மூலம் நல்லியக்கோடனின் வீரத்தின் தன்மையினை அறியமுடிகின்றது. மேலும், நல்லியக் கோடனின் தலைமைச் சிறப்பு பற்றிக் கூறும் நல்லூர் நத்தத்தனார்,

**"………. வடுஇல் வாய்வாள்**
**உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்" (சிறுபாண். 121 -122)**

என்று குறிப்பிடுகிறார்.

இம்மன்னன் தனது பகைவர்கள் அவர்களின் பின்புறம் நின்று தாக்காமல் போர் அறத்திற்கு ஏற்ப அவர்களின் முன்தோன்றி பகைவரின் மார்பிலும் முகத்திலும் வாளால் வெட்டி அவர்களை வீழ்த்தி வெற்றி பெறும் புலிபோன்ற அஞ்சாமை பண்புடையவன் என்று நல்லியக்கோடனின் வீரம் தொடர்பான ஆளுமைப் பண்பினை வெளிப்படுத்துகின்றார்.

**ஒய்மான் நல்லியாதன்**

ஒய்மான் நல்லியாதன் என்பவன் நல்லியக்கோடன் குலத்தினில் தோன்றி அவனுக்கு முன்பு ஒய்மான் நாட்டினை ஆட்சி புரிந்தவனாக கருதப்படுகின்றான். இம்மன்னனைப் பற்றிய செய்திகள் புறநானூற்று பாடாண்திணைப் பாடல் ஒன்றில் இடம் பெறுகின்றன.

**விருந்தோம்பல் பண்பு**

ஒய்மான் நல்லியாதன் என்பவன் தன்னை நாடி தனது அரண்மனைக்கு வருகைபுரியும் இரவலர்களை இன்முகத்துடன் சென்று வரவேற்கும் பண்புடையவன் என்பதைப் பின்வரும் இலக்கிய அடிகள் காட்டுகின்றன.

**"அரவு வெகுண்டு அன்ன தேறலொடு சூடுதருபு**
**நிரயத்து அன்னஎன் வறன்களைந்து அன்றே**
**இரவி னானே ஈத்தோன்" (புறம்.376: 14-16)**

இரவலர்கள் வெகுதொலைவில் இருந்து தனது நாட்டிற்கு வருகை புரிந்த காரணத்தினால் அவர்களுக்கு ஏற்பட்ட உடற்களைப்பினை நீக்குதற்பொருட்டு பாம்பு சீறினாற் போன்ற பல நாட்களின் களிப்பு மிகுதியாக உள்ள கள்ளினையும் சூடான இறைச்சியையும் தந்து அவர்களை உண்ணச் செய்வான். மனிதர்களுக்கு நரகவேதனை போன்ற துன்பத்தினை தரவல்ல வறுமை நிலையினை, இரவலரின் புறத்தோற்றத்தினால் அறிந்து கொண்டு, அவர்களைக் கண்ட இரவுப்பொழுதினிலே அவர்களுக்கு வேண்டப்படும் பொருட்கள் அனைத்தையும் உடனே வழங்கி மகிழும் இயல்புடையவன் என நன்னாகனார் கூறிச் செல்வதால் ஒய்மான் நல்லியாதனிடம் இரக்க சுபாவம் குறித்த ஆளுமைப் பண்பினை அறியலாம்.

**கொடைப்பண்பு**

ஒய்மான் நல்லியாதன் என்னும் குறுநிலத் தலைவனானவன் தன்னை நாடிவரும் பொருநனின் முகத்தினை கண்ட அளவில் பரிசில் வழங்கி மகிழக் கூடியவன் என்பதனை நன்னாகனார்,

**"இமைத்தோர் விழித்த மரத்திரை ஞெரேரென**
**குணக்குஎழு திங்கள் கனைஇருள் அகற்ற**
**பண்டு அறிவாரா உருவொடு என் அரைத்**
**தொன்றுபடு துளையொடு பரு இழைபோகி**
**நைந்து கரை பறைந்த என்உடையும் நோக்கி**
**வருந்தினன் அளியன் இவன்" (புறம். 376: 7-12)**

என்று பாடுகிறார்.

ஒருவன் தனது கண்களை மூடி விழிக்கும் நேரத்திற்கும் விரைவாக, வானில் கிழக்குப்புறம் உதிக்கும் சந்திரனானது பூமியில் சூழ்ந்துள்ள இருளினை அகற்றுவது போன்று இம்மன்னனைக் கண்டதும், வறுமை நில்லாது நீங்கும். வறுமையுடன் நான் முன்னர் இருந்த தோற்றத்தினை காண இயலாதவாறு, என் இடையில் இருந்த பழமையானதும், துளைகளுடன் விளங்கக்கூடியதும், பாசிபடர்ந்த கிழிந்த கரைகளை உடையதுமான எனது ஆடையினைப் பார்த்தவுடன் இவன் நமது நாட்டிற்கு புதியவன், பரிசில் அளிக்கத் தகுதியானவன் என்று கருதி உடனே பரிசில் அளிக்கும் கொடைத்தன்மை உடையவன் நல்லியாதன் என நன்னாகனார் கூறுவதனால் ஒய்மான் நல்லியாதனின் கொடை தொடர்பான ஆளுமைப் பண்பு தெற்றென வெளிப்படுகின்றது.

**ஒய்மான் வில்லியாதன்**

ஒய்மான் நாட்டினை ஆட்சிபுரிந்த மன்னர்களில் ஒய்மான் வில்லியாதன் என்பவனும் ஒருவன் ஆவான். இம்மன்னனும் மாவிலங்கை என்ற நகரினை தலைநகராக கொண்டு ஆட்சிபுரிந்துள்ளான் என்று அறியமுடிகின்றது. புன்னாட்டுக்கு வடக்கிலுள்ள அருவா நாடும், அருவா வடதலை நாடும் ஆகிய பகுதியே மாவிலங்கை எனவும் கூறுவர். இம்மன்னன் பற்றிய செய்திகள் புறநானூற்றுப் பாடாண்திணைப் பாடல் ஒன்றில் காணலாகின்றது.

**விருந்தோம்பல் பண்புநலன்**

ஒய்மான் வில்லியாதன் என்னும் குறுநில மன்னனானவன், தனது அவைக்கு வருகை புரியும் பொருநர்களுக்கு குறுகிய கால்களைக் கொண்ட ஆண் பன்றியின் துண்டங்களுள், நல்ல சதைப்பற்றுள்ள இறைச்சித் துண்டங்களை தேர்ந்தெடுத்து அருகில் உள்ளோரை தன்பக்கம் வரச்செய்யக்கூடிய நற்மணமுடைய நெய்யினை உருக்கித் தேர்ந்தெடுத்த இறைச்சித் துண்டங்களை அதில் இட்டுப் பொரித்து எடுத்து, விடியற்காலை வேளையில் உணவாக அளித்து பொருநர்களின் பசியினைப் போக்கக்

கூடியவன் என்று விடியற்காலை வேளையில் வந்து பாடும் மரபினை உடைய பொருநன் எனக்குக் கூறினான் என நன்னாகனார் குறிப்பிடுவதிலிருந்து ஒய்மான் வில்லியாதனின் விருந்தோம்பல் பண்பு புலனாகின்றது.

**கரும்பனூர் கிழான்**

கரும்பனூர் கிழான் என்போன் ஒய்மான் நல்லியக்கோடன் காலத்தினைச் சார்ந்தவன். இக்குறுநில மன்னனை 'ஒலிவெள் அருவி வேங்கட நாடன்' என்று புறநானூற்றில் நன்னாகனார் குறிக்கின்றார். இக்கரும்பனூர் வேங்கநாட்டின் ஒரு மலைப்பகுதியாக விளங்கி உள்ளதை நன்னாகனார் கூற்றால் அறிய முடிகின்றது. மேலும், இம்மன்னனது நாட்டின் வளம் பற்றிக் குறிப்பிடுகின்ற பொழுது அது மருதநில வளத்தினையும் முல்லை நில வளத்தினையும் தன்னுள் கொண்டு திகழ்ந்தது கரும்பனூர் என்கின்றார்.

**விருந்தோம்பல் பண்பு**

வேங்கட மலைப்பகுதியில் ஒரு பகுதியினை ஆண்டு வந்தவன் கரும்பனூர் கிழான், தனது அவைக்கு வருகை புரிந்த புலவர்கள் வெகுதொலைவில் இருந்து தன் நாட்டிற்கு வருகை புரிந்திருக்கும் காரணத்தினால் அவர்களது உடற்களைப்பினைப் போக்குவதற்கும் முதலில் அவர்களை உணவு உண்ணச் செய்து அவர்களின் பசித்துன்பத்தினைப் போக்கக் கூடியவன். இம்மன்னன் அவைக்குச் சென்ற புலவர்கள்,

**"ஊனும் ஊனும் முனையின் இனிது என**
**பாலின் பெய்தவும் பாகின் கொண்டவும்**
**அளவுபு கலந்து மெல்லிது பருகி**
**விருந்துறுத்து ஆற்றி இருந்தனெம்" (புறம்.381: 1-4)**

என்ற நிலையில் வரவேற்கப்பட்டுள்ளனர்.

இறைச்சியினையும் சோற்றையும் உண்டு உண்டு தங்களுடைய பற்களானது மழுங்கியதனால் தூய்மையான வெண்மை நிறமுடைய பாலினிற் கலந்து செய்யப்பட்டதும், தித்திப்பான வெல்லத்தினை பாகாக உருக்கி

அதனால் செய்யப்பட்டதும் ஆகிய உணவுப் பொருட்களினை உண்போர் மிக இனியவை என எண்ணி உண்ணுமளவிற்கு விருந்தினர்களுக்கு வழங்கி அவர்களது பசியினை நீக்கக் கூடியவன் என்று காட்டுவதில் இருந்து இம்மன்னனின் விருந்தோம்பல் பண்பினை அறியமுடிகின்றது.

<u>நல்உள்ளம்</u>

கரும்பனூர் கிழான் என்னும் குறுநிலத் தலைவனானவன் தன்னிடம் வந்து பரிசில் பெற்று தனது அன்பிற்கு உரியோராய் விளங்கிய பாணர்கள் பரிசில் வழங்க மனம் இன்றி நாட்களினை கடத்தும் மன்னர்களின் அவைகளுக்குச் செல்லக் கூடாது என்னும் விருப்பம் உடையவன் என்பதை,

**"ஈயா மன்னர் புறங்கடைத் தோன்றி**
**சிதாஅர் வள்பின் சிதர்ப்புறத் தடாரி**
**ஊன்சுகிர் வலந்த தெண்கண் ஒற்றி**
**விரல்விசை தவிர்க்கும் அரலை இல் பாணியின்**
**இலம்பாடு அகற்றல் யாவது? புலம்பொடு**
**தெருமரல் உயக்கமும் தீர்க்குவெம்" (புறம்.381: 11-16)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

யாரும் பயன்படுத்த முடியாத வண்ணம் கொடிகள் படர்ந்த முட்புதரில் உள்ள மரத்தினில் குலை குலையாகப் பூத்து காய்த்த பழமானது நன்கு பழுத்துக் காணப்பட்டாலும் அதனை யாரும் உண்டு பயன் பெற இயலாது. அதுபோன்று உலகினில் மழை பெய்தாற் போன்ற பரந்த செல்வத்தினை தன்னகத்தே கொண்ட மன்னர்கள் தம்மிடம் வரும் பாணர்களுக்கு பொருள் வழங்க மனம் இன்றி இருக்கும் பொழுது தடாரிப் பறையினை இசைத்துப் பாடும் பாணர்களின் வறுமை நிலையினை எங்ஙனம் போக்க முடியும். எனவே, பாணர்களைச் சூழ்ந்துள்ள வறுமைத் துன்பத்தினை யான் போக்குவேன் எனக்கூறும் நல்உள்ளம் கொண்டவன் கரும்பனூர்கிழான் என நன்னாகனார் குறிப்பிடுவதனால் கரும்பனூர் கிழானிடம் மேயர்சு பிரிக்சு குறிப்பிடும் இளகிய மனம் தொடர்பான ஆளுமைப் பண்பினை காண முடிகின்றது.

**கடிய நெடுவேட்டுவன்**

கடிய நெடுவேட்டுவன் என்ற குறுநில நில மன்னன் வேலினைத் தன்னகத்தே கொண்டதாய் தோன்றும் வேடர்களின் தலைவனாகவும், தமிழ்மொழியினால் ஏற்படும் இன்பத்தினைப் பருகுவதில் ஆர்வம் மிக்கவனாகவும், தன்னிடம் வருவோர்க்கு வேண்டுவன வழங்கி அதனால் மகிழ்ச்சி கொள்ளும் பெருங்கொடையாளியாகவும் விளங்கியவன். இவன் தன்னுடைய பகைவர்களை அழிக்கும் பெருவலிமை உடையவனாகவும், கோடை என்னும் மலைப்பகுதிக்குத் தலைவனாகவும் திகழ்ந்தவன் என்பதை,

**"வெள்வீ வேலிக் கோடைப் பொருந" (புறம்.205:6)**

என பெருந்தலைச் சாத்தனார் கூறுவதனால் அறியமுடிகின்றது. இப்புலவர் குமணன், இளவிச்சிக்கோ, மூவன் முதலியோரையும் பாடியுள்ளதால் இக்குறுநில மன்னனையும் அவர்களது காலத்தினைச் சார்ந்தவனாக எண்ணமுடிகின்றது. மேலும், பெருந்தலைச் சாத்தனார் தனது அகநானூற்றுப் பாடலில்,

**"குழியில் கொண்ட மராஅ யானை**
**மொழியின் உணர்த்தும் சிறுவரை அல்லது**
**வரைநிலை இன்றி இரவலர்க்கு ஈயும்**
**வள்வாய் அம்பின் கோடைப் பொருநன் "[86] (அகம்.13: 7-11)**

என்று இவன் தன்மையைப் பாடுகிறார்.

பாண்டிய மன்னனின் படைத்தலைவனும், போர்வீரனும் ஆகிய கடிய நெடுவேட்டுவன் என்பவன் யானைகளைப் பிடிப்பதற்காக வெட்டிய குழிகளில் விழுந்து பிடிபட்ட யானைகளைப் பிடித்து யானைகளுக்கு உரிய மொழிகளினாலேயே அவற்றைப் பழக்கி தன்னிடம் வருகின்றவர்களுக்கெல்லாம் (இரவலர்களுக்கு) வரையாது வாரி வழங்கும் தன்மையுடையவன் என மேற்பாடல் காட்டுகின்றது.

---

[86]. ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி -3

**கொடைப்பண்பு**

கடிய நெடுவேட்டுவன் என்பவன் தன்னை நாடிவரும் பரிசிலர்களுக்கு அவர்களின் தேவைக்கும் அதிகமான பொருட்களை பரிசிலாக வழங்கக் கூடியவன் என்பதை பெருந்தலைச் சாத்தனார்,

**"ஆர்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்**
**கடல்வயின் குழீஇய அண்ணல் அம் கொண்மூ**
**நீரின்று பெயரா வாங்குத் தேரொடு**
**ஒளிறுமருப்பு ஏந்திய செம்மற்**
**களிறு இன்று பெயரல பரிசிலர் கடும்பே" (புறம்.205: 10-14)**

என்று பாடுகிறார்.

இடியானது மிகுந்த ஓசையினை எழுப்பிக் கொண்டு புதிய மழைத்துளிகளைப் பூமியில் தூவுவதற்காகக் கூட்டாகத் திரண்டு கடலின்கண் படியும் தலைமை மிக்க முகில் கூட்டங்கள் (மேகக்கூட்டங்கள்) நீரினைக் கொள்ளாமல் மீண்டு செல்லாது. அதுபோன்றே கடியநெடுவேட்டுவனிடம் வரும் பரிசிலர்களும் தேருடன் விளங்கக்கூடிய கோடு உயர்ந்த தலைமைமிக்க யானைகளைப் பரிசிலாக அடையாமல் செல்லமாட்டார்கள் எனக் கடிய நெடுவேட்டுவனின் கொடைத்திறன் எடுத்துரைக்கப்பெறுகிறது.

**கொண்கானங்கிழான்**

கொண்கான நாட்டின் தலைவனாக விளங்கியவன் கொண்கானங்கிழான். இம்மன்னன் வேளாண் மரபினன். இவனது பண்பு, கொடை நலத்தினைச் சிறப்பித்து மோசிகீரனார் போற்றிப் பாடியுள்ளார். புறநானூற்றுப் பாடாண் திணையில் மூன்று பாடல்களில் கொண்கானங்கிழான் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன.

**வீரம்**

ஓங்கி உயர்ந்த மலையில் இருந்து விழும் குளிர்ந்த அருவியுடன் விளங்கும் கொண்கான நாட்டினை ஆண்டு வந்த கொண்கானங்கிழான் என்பவன் போர்க்களத்தில் தனது பகைவருடன் போரிடும் பொழுது,

**"வெல்போர்**
**எறி படைக்கு ஓடா ஆண்மை" (புறம்.154: 9-10)**

என்ற நிலையில் போர் புரிந்துள்ளான்.

இவன் பகைவரின் ஆற்றலை எதிர்த்து போரிடமுடியாமல் தோற்று ஓடுபவர்கள் போன்று அல்லாமல் தன்னால் முடிந்தவரைப் பகைவருடன் எதிர்த்து போரிடும் புறங்காட்டாத ஆண்மை உடையவன். மேலும், இவனது கொண்கானங் நாடானது (கொண்பெருங்கானம்) இம்மன்னனிடம் போர்க்களத்தில் தோற்ற மன்னர்கள்,

**"நிறை அருந் தானை வேந்தரைத்**
**திறை கொண்டு பெயர்க்கும் செம்மலும் உடைத்தே" (புறம்.156: 5-6)**

என்ற நிலையில், கொண்கானங்கிழானுக்கு திறை செலுத்தி செல்லக் கூடிய சிற்றரசர்களால் சூழப்பட்டிருக்கும் என மோசிகீரனார் கொண்கானங்கிழானின் வீரத்தின் தன்மையினை குறிப்பிடுகின்றார்.

**கொடையுள்ளம்**

கொண்கானங்கிழானின் கொண்கானம் (கொண்பெருங்கானம்) என்னும் மலைநாடானது வளங்கள் நிறைந்த வண்மை, வலிமை ஆகிய இரண்டு நன்மைகளையும் தன்னகத்தே கொண்டதாக விளங்கியதால், இக்குறுநில மன்னனானவன் தன்னிடம் வரும் பாணர் கூட்டத்தின் வறுமை நிலையினை போக்கக் கூடியவன் என்பதை,

**"பாழ்ஊர் நெருஞ்சிப் பசலை வான்பூ**
**ஏர்தரு சுடரின் எதிர்கொண்டாஅங்கு**

**இலம்படு புலவர் மண்டை விளங்கு புகழ்க்**
**கொண் பெருங் கானத்துக் கிழவன்"        (புறம்.155: 4-7)**

என்ற நிலையில் இப்புலவர் காட்டியுள்ளார்.

பாழூரில் பொன்போன்ற நிறமுடைய நெருஞ்சிப் பூவானது எழுகதிரவனைக் கண்டதும் மலருவது போன்று வறுமையின் பிடியில் வாடும் யாழ்ப் பாணர்களது வறுமை நிலையானது கொண்கானங் கிழானது முகத்தினை கண்டதும் மறைந்து விடும் என்று மோசிகீரனார் கூறுவதனால் தம்மிடம் வருகை புரியும் பாணர்களின் தேவைக்கும் அதிகமான பொருட்களை கொடையாக வழங்கக் கூடியவன் என்பது அறியலாகின்றது.

**<u>சிறுகுடி கிழான் பண்ணன்</u>**

சிறுகுடி கிழான் பண்ணன் காவிரியின் வடகரையில் உள்ள சிறுகுடி என்னும் ஊரின் சிற்றரசன் ஆவான். இவ்வரசனது ஊரினில் நெல்வயலும் தோட்டமும் நிறைந்து காணப்பட்டதால் பண்ணன் என அழைக்கப்பட்டதாக எண்ணத் தூண்டுகிறது.

**<u>நல்உள்ளம்</u>**

சிறுகுடிகிழான் பண்ணன் என்போன் தன்னிடம் வரும் பாணர்களின் வறுமை நிலையினை அறிந்து பறவைகளின் பசியினைப் போக்கும் பழுத்த மரத்தினைப் போன்று உண்ண உணவு அளிக்கக் கூடியவன் என்பதை அறிந்த சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்,

**"பசிப்பிணி மருத்துவன் இல்லம்**
**அணித்தோ?சேய்த்தோ?"        (புறம். 173; 11-12)**

என்று வினவுகிறான்.

பாணர்களின் பசி என்னும் கொடிய நோயினை போக்கக் கூடிய மருத்துவனான பண்ணன் என்போன் இல்லம் அருகில் உள்ளதா? அல்லது தொலைவில் உள்ளதா? எனப் பாணர் வினாவுவது போன்று

வினவுகின்றமையில் இவனின் கொடைச் சிறப்பு மன்னர்களால் அறியப்பெற்றுள்ளது என்பதை உணரமுடிகின்றது.

**"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய" (புறம்.173:1)**

என்ற நிலையில் தன்னுடைய வாழ்நாளினையும் பண்ணன் சேர்த்து வாழ வேண்டும் என மூவேந்தர்களில் ஒருவனான சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் ஒரு சிற்றரசனுக்காக கூறுவதனால் பண்ணனின் நற்பண்புகள் சிறப்பானவை என்பதை ஊகித்து அறியமுடிகின்றது. மேலும் சிறுகுடிகிழான் பண்ணன் தனக்கென வாழாது பிறர்க்கு உரியவனாக வாழக்கூடியவன் என்று மாற்றூர் கிழார் மகனார் கொற்றங்கொற்றனார் புகழ்ந்து பாடியுள்ளார்.

**"தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளன்**
**பண்ணன் சிறுகுடி படப்பை"[87] (அகம்.54; 13-14)**

என்ற பாடலடிகள் இதனை உணர்த்துகின்றன.

உலகினில் உள்ள எல்லாம் தனக்கே வேண்டும் என்னும் குறிக்கோளுடன் வாழ்தலன்றித் தன் முயற்சியினால் வரும் பயன் அனைத்தும் பிறருக்குப் பயன்படுமாறு இருத்தல் வேண்டும் என்னும் குறிக்கோளுடன் பிறர்க்கு உரிமை உடையவனாய்த் திகழ்கின்றவன் பண்ணன் என அகநானூற்றுப் பாடல் பண்ணனின் நல்உள்ளத்தினை வெளிப்படுத்துகின்றது.

**"வென்வேல்**
**இலைநிறம் பெயர ஓச்சி மாற்றோர்**
**மலைமருள் யானை மண்டுஅமர் ஒழித்த**
**கழற்கால் பண்ணன்"[88] (அகம்.177: 13-16)**

என்று இம்மன்னனது வீரத்தினை பற்றிக் கூறும் செல்லூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் பண்ணன் என்னும் குறுநில மன்னன் போர்க்களத்தில் தன்னுடைய பகைவருடைய யானையின் மீது தனது வேலினை வீசுவதனால்

---

[87]. ச.வே.சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும்,தொகுதி-3
[88]. மேலது

வேலின் முனை இரத்தத்தால் சிவக்கும்படி செய்து யானையைக் கொன்று பகைவரின் கோட்டையைப் பிடித்து வாகை சூடுவான் என்று இவன் வீரப்புகழ் பாடுகிறார்.

**<u>சோனாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன்</u>**

சோனாட்டுப் பிடவூர்கிழான் மகன் 'பெருஞ்சாத்தன்' என்று இவன் கூறப்படுவதிலிருந்து 'இளஞ்சாத்தன்' என இவனது இளவல் ஒருவனும் இருந்திருக்கக்கூடும் என எண்ண முடிகின்றது. மதுரை நக்கீரர் பிடவூர் அறப்பெயர்ச் சாத்தன் என்று இவனை அழைக்கின்றார். நல்ல விளைநிலங்களை தன்னகத்தே கொண்டு திகழும் ஊரான பிடவூர் என்பது இவனின் தலைநகர் ஆகும்.

**<u>விருந்தோம்பல் பண்பு</u>**

சோனாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பவன் தன்னைத் தேடி வரும் புலவர்களைப் போற்றிப் பேணிய சிறப்பு பெரிதும் வியப்பிற்கு உரியது என்பதை,

**"……………. தன்மனைப்**
**பொன்போல் மடந்தையைக் காட்டி இவனை**
**என்போல் போற்று என்றோனே" (புறம்.395: 29-31)**

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

இவன் தன் வீட்டினில் திருமகள் போன்று விளங்கும் தன் மனைவியிடம் தன் மனைவிக்கு வருகை புரிந்த புலவனை அறிமுகம் செய்து இவனையும் நீ என்னைப் போன்றே பேணுக என்று கூறினான் என நக்கீரர் இவன் பண்பினைப் பாடியுள்ளார்.

**"பெருஞ்செய் நெல்லின் கொக்கு உதிர் நிமிரல்**
**பசுங்கண் கருனைச் சூட்டொடு மாந்தி" (புறம். 395: 36-37)**

என்ற வழி, பரந்து விரிந்த இந்நிலவுலகுக்கு மழையின்று வெம்மையுற்று வாடினாலும், பெரிய வயல்வெளியில் விளைந்து கொக்கின் நகம் போன்று

காட்சிளிக்கும் உணவினை, பொரித்தகரிச் சூட்டிறைச்சியுடன் உண்ணச் செய்து, தம்முடைய ஆட்சிப் பகுதியில் கிடைக்கும் பொருள் என்றும் கிடைக்காத பொருள் என்றும் பார்க்காமல் வருவோர்க்கு வாரி வழங்கக்கூடியவன் என இவனது விருந்தோம்பல் பண்பினை நக்கீரனார் சிறப்பிக்கின்றார்.

**தாமான் தோன்றிக்கோன்**

தாமான் தோன்றிக்கோன் என்பவன் தோன்றி என்னும் மலைக்குத் தலைவனாக விளங்கியவன். தாமான் தோன்றி என்பது தாவும் மான்கள் தோன்றக்கூடிய மலை என்றும் இந்தமலைப் பகுதியில் தோன்றிய அருவியானது இழுமென இழிதரும் அருவி மலையில் இருந்து கொட்டாமல் வழிந்தோடும் சிறப்புடையது என்றும் ஐயவூர் முடவனார் இவன் நாடு பற்றிய குறிப்புகளைத் தருகின்றார்.

இம்மன்னன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் காலத்தினைச் சார்ந்தவன் ஆவான். இவனைப் பற்றி புறநானூற்றுப் பாடாண் திணையில் ஒரு பாடலில் கூறப்பட்டுள்ளது.

**கொடைத்திறம்**

புலவர் ஐயூர் முடவனார் சோழன் குளமுற்றத்துத் துஞ்கிய கிள்ளினவளவனை தவிர வேறு எந்த மன்னனிடமும் பரிசில் பெறேன் என்று உறுதிபூண்டு வாழ்ந்து வந்தவர். ஒருமுறை அவர் பயணம் செய்த வண்டியின் காளை இறந்துபட அதை அறிந்த தோன்றிக்கோன்,

**"கடுந்தேர் அள்ளற்கு அசாவா நோன் சுவற்**
**பகடே அத்தை யான்வேண்டி வந்தது என**
**ஒன்றுயான் பெட்டா அளவை அன்றே**
**ஆன்று விட்டனன் அத்தை விசும்பின்**
**மீன்பூத்து அன்ன உருவப் பல்நிரை**
**ஊர்தியொடு நல்கியோனே"          (புறம். 399: 27-32)**

என்ற நிலையில், செல்லும் வண்டியானது சேற்றில் படிந்தாலும் அதனை பொருட்படுத்தாது தளராமல் இழுத்துச் செல்லும் நல்ல திமிலை உடைய காளைகளை நான் வேண்டி வந்தேன் என்று புலவர் கேட்பதற்கு முன்பே ஐயூர் முடவனாருக்கு வேண்டுவன கொடுத்தல் வேண்டும் என்ற எண்ணம் கொண்டு வானில் ஒளி வீசித் தோன்றும் மீன்கள் போன்ற அழகிய தோற்றமுடைய ஆநிரைகளை, வலிமை வாய்ந்த ஊர்தியுடன் வழங்கி மகிழ்ந்தான் என்று தாமான் தோன்றிக்கோனின் கொடைத் திறனைப் புகழ்கின்றார் ஐயூர்முடவனார்.

**<u>நாஞ்சில் வள்ளுவன்</u>**

நாஞ்சில் வள்ளுவன் என்னும் குறுநில மன்னன் நாஞ்சில் மலைப்பகுதியினை ஆட்சிபுரிந்து வந்தவன் ஆவான். இம்மன்னன் சேரனுக்குத் துணைவலியாக திகழ்ந்தவன். இவன் தன் கொடைச்சிறப்பினால் புகழ்பெற்றவன். நாஞ்சிப் வள்ளுவன் ஔவையார், ஒருசிறைப் பெரியனார், மருதனிளநாகனார், கருவூர்க்கதப்பிள்ளை போன்ற புலவர் பெருமக்களால் புகழ்ந்து பாடப்பெற்றுள்ளான்.

**"உயர்சிமைய உழாஅ நாஞ்சில் பொருந" (புறம்.139 : 8)**

என்று மருதன் இளநாகனார் கூறுவதனால் ஓங்கி உயர்ந்த உச்சியினை உடையப் புலவர்களால் உழப்படாத நாஞ்சில் (கலப்பை) மலை வளத்தாற் பெரிதும் சிறப்புடைய நாட்டினை தனதாக கொண்டு ஆண்டு வந்தவன் என்பது புலனாகின்றது.

**<u>கொடைத்திறம்</u>**

நாஞ்சில் வள்ளுவன் என்போன் தன்னை நாடிவரும் புலவர் பெருமக்களுக்கு அவர்களது தேவைக்கும் அதிகமான பொருட்களை பரிசிலாக வழங்கக் கூடியவன் என்பதனை,

**"அரிசி வேண்டினேமாகத் தான்பிற**
**வரிசை அறிதலின் தன்னும் தூக்கி**
**இருங்கடறு வளைஇய குன்றத்து அன்னது ஓர்**
**பெருங்களிறு நல்கியோனே" (புறம். 140: 5-8)**

என்ற பாடலடிகளில் காட்டுகின்றார்.

வறுமையின் பிடியினால் தோட்டப்பகுதியில் பறித்து எடுத்த கீரைக்கு இடுபொருளாகச் சில அரிசியை வேண்டி நாஞ்சில் வள்ளுவனிடம் சென்றோம். அவன் பரிசிலர்களுக்கு வழங்கும் முறைமையை அறிந்தவன், ஆகையால் எங்களது வறுமை நிலையினைப் பாராமல் தன்னுடைய மேம்பாடு கருதி, மலைபோன்றத் தோற்றமுடைய யானையினை அளித்து மகிழ்ந்தான் என அவனது கொடைத்திறனைக் காட்டுகிறார் ஔவையார்.

**<u>இருவேறு பண்புநலன்</u>**

நாஞ்சில் வள்ளுவன் தன்னுடைய பகைவர்களுக்கு ஒருதன்மையிலும், தன் குடிமக்களுக்கும் நண்பர்களுக்கும் ஒருதன்மையிலும் விளங்கக் கூடியவன் என்பதை கதப்பிள்ளை ,

**"துப்புஎதிர் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்**
**நட்பு எதிர்ந் தோர்க்கே அங்கை அண்மையன்" (புறம்.380: 10-11)**

என்று பாடுகிறார். போர்க்களத்தினில் தனது வலிமையினை காட்டி நாஞ்சில் வள்ளுவனுடன் போர் புரிய வந்தவர்களுக்கு தனது போர் வலிமையினால் எட்டாத தொலைவினாகவும், நட்புடன் தன்னை நாடிவரும் அன்பர்களுக்கு அங்கத்தில் உள்ள உள்ளங்கையினை போன்ற நெருக்கமுடையவனாகவும் திகழ்பவன் என இவனது இருவேறு பண்புநலன்களை இப்புலவர் பாடியுள்ளார்.

**<u>பிட்டங்கொற்றன்</u>**

பிட்டங்கொற்றன் என்னும் குறுநில மன்னன் மழவர் குடியினில் தோன்றி தருமபுரி மாவட்டத்திலுள்ள குதிரை மலையினை தனக்குரியதாக ஆண்டு வந்தவன். இவன் சேரர் படைமுதல்வர்களுள் ஒருவனுமாக விளங்கியவன்.

இவன் கொடையாண்மை படையாண்மை பண்புகளுள் சிறந்து திகழ்ந்தவன். இம்மன்னனைப் பற்றி புறநானூற்றுப் பாடாண்திணையில் மூன்று பாடல்களில் பாடப் பெற்றுள்ளது.

## வீரம்

பிட்டங்கொற்றன் தன் பகைவருடன் போர்க்களத்தினில் போர்புரியும் போது பகைப்படையினர் வேல் முதலியவற்றைக் கொண்டு தாக்கும் பொழுது தனது படையினர்க்கு முன்நின்று விரைந்து வரும் ஆற்றின் வெள்ளப் போக்கினை மலையானது குறுக்கே அமைந்து தடுப்பது போன்று தனது படையினை காத்து நிற்பதனையும்,

**"அவர்படை**
**எடுத்து எறி தானை முன்னரை எனாஅ**
**அவர்படை வரூஉம் காலை நும்படைக்**
**கூழை தாங்கிய அகல் யாற்றுக்**
**குன்று விலங்கு சிறையின் நின்றனை (புறம்.169: 1-5)**

படைக்கலப் பயிற்சி பெறுவோர் உடனே தனது இலக்கை அடைதல் எவ்வளவு கடினமான செயலோ அதனைப்போன்றது, பிட்டங்கொற்றனின் பகைவர்கள் அவனை வெல்வது, அவ்வளவு எளிதன்று என கண்ணனார் இவனின் வீரத்தின் தன்மையினை கூறுகின்றார்.

## இருவேறு பண்புகள்

பிட்டங்கொற்றன் என்னும் குறுநிலத் தலைவன், தன்னை நாடிவரும் பரிசிலர்களுக்கு மென்மையானவனாகவும், தனது பகைவர்களுக்கு வலியனாகவும் விளங்கும் பண்பினை கண்டு வியந்த உறையூர் மருத்துவன் தாமோதரனார்,

**"சிறுகண் யானை வெண்கோடு பயந்த**
**ஒளிதிகழ் முத்தம் விறலியர்க்கு ஈத்து**
**நார் பிழிக் கொண்ட வெங்கட் தேறல்**

**பண் அமை நல்யாழ்ப் பாண் கடும்பு அருத்தி**
**நசைவர்க்கு மென்மை அல்லது பகைவர்க்கு**
**இரும்புபயன் படுக்கும் கருங்கைக் கொல்லன்**
**விசைத்து எறி கூடமொடு பொரூஉம்**
**உலைக் கல் அன்ன வல்லாளன்னே" (புறம்.170: 10-17)**

என்று பாடுகிறார்.

சிறிய கண்களை உடைய யானையின் தந்தத்தின் முதிர்ச்சியின் காரணமாக ஒளிவிட்டுத் திகழக்கூடிய முத்து தோன்றும். இவ்வாறு தோன்றும் முத்தினை தன்னை நாடிவரும் விறலியர்களுக்கு பிட்டங்கொற்றன் அளிப்பான். பிட்டங்கொற்றன் யாழுடன் வெகுதொலைவில் இருந்து வருகைபுரியும் பாணர்களுக்கு தங்களது உடற்களைப்பு நீங்கத் தெளிந்த கள்ளினை வழங்கி உண்ணச்செய்து மகிழ்வான். இவ்வாறு பிட்டங்கொற்றன் தன்னை நாடிவரும் பரிசிலர்களிடத்தினில் மென்மையாக பழகக் கூடியவன். இவன் தன் பகைவர்களிடத்தில் இரும்பை உலைக்களத்தில் காய்ச்சி அடிக்கும் உலைக்கல் போன்று வலிமையுடையவனாக திகழ்கின்றான் என இவனது இருவேறு பண்புகளை ஒப்பிட்டுக் கூறுகின்றார்.

## <u>கொடைத்திறம்</u>

பிட்டங்கொற்றன் தன்னிடம் வரும் பரிசிலர்களுக்கு முதல்முறை வருபவர், சிலநாட்கள் சென்று மீண்டும் வருபவர் என்று கருதி அவர்களுக்கு முன்பே பரிசில் வழங்கியுள்ளோம் எனக் கருதாது நாள்தோறும் வருகை புரிந்தாலும் அவர்களது வறிய உண்கலத்தினை நிரப்பக்கூடியவன் என்பதைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்**
**களம்மலி நெல்லின் குப்பை வேண்டினும்**
**அருங்கலம் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை**
**பிறர்க்கும் அன்ன அறத் தகையன்னே" (புறம்.171: 8-11)**

இதன் வழியாக, இவன் நல்ல இனமாகிய காளைகளினை அவை அடைக்கப்படும் தொழுவில் உள்ள அனைத்துக் காளைகளுடன் கேட்டாலும், நெற்களத்தில் குவிந்து காணப்படும் நெல்லின் மொத்த குவியலையும் வேண்டினாலும், பெறுவதற்கு அரிதான அணிகலன்களைக் களிற்றுடன் கேட்டாலும், பரிசிலர் கேட்கும் வண்ணமே வழங்கி மகிழும் கொடைப்பண்பினை தன்னகத்தே கொண்டவன் என காரிக்கண்ணனார் கூறிச் செல்வதனால் பிட்டங்கொற்றனினி வீரம் குறித்த ஆளுமைப் பண்பு வெளிப்படுகின்றது.

<u>**பொறையாற்று கிழான்**</u>

பொறையாற்று கிழான் என்போன் தஞ்சைப் பகுதியில் உள்ள பொறையாற்றூரில் வாழ்ந்த ஒரு குறுநிலத் தலைவன் ஆவான். இம்மன்னனை கல்லாடனார் புகழ்ந்து பாடியுள்ளார்.

<u>**பண்புநலன்**</u>

மலைபோன்று ஓங்கி உயர்ந்து காணப்படும் நெற்குவியலை, தன்னகத்தே கொண்டதாய் விளங்கும் வேங்டமலையாகிய வடக்கு நிலம் வறுமை அடைந்த காரணத்தினால், பொறையாற்று கிழானை நாடி வருகை புரிந்த பாணர் சுற்றத்தினை, தனது நாட்டில் இருந்து அனுப்ப மனம் இன்றி நெடுநாள் அவர்களை தன்னுடனே இருக்கசெய்து அவர்களுக்கு வேண்டுவன வழங்கி மகிழ்ந்த பண்புடையவன் என கல்லாடனார் பொறையாற்று கிழானின் உயர்ந்த பண்புநலன் குறித்து எடுத்தியம்புகின்றார்.

**"வடபுலம் பசித்தென**
**ஈங்குவந்து இறுத்த என் இரும்பேர் ஒக்கல்**
**தீர்கை விடுக்கும் பண்புஇல முதுகுடி" (புறம்.391: 7-9)**

என்பது மேற்குறித்த கருத்திற்கான இலக்கியச் சான்று ஆகும்.

**மல்லிகிழான் காரியாதி**

குடநாட்டினைச் சார்ந்த ஒரு பகுதியினை பெரும்புகழுடன் ஆண்டு வந்த தலைவன் மல்லிகிழான் காரியாதி. இக்குறுநில மன்னனை பற்றி ஆவூர் மூலங்கிழார் பாடியுள்ளார். இவன் பாண்டியன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் காலத்தினைச் சார்ந்தவனாக கருதப்படுகின்றான்.

**வீரம்**

மல்லிகிழான் காரியாதியின் அரண்மனைக்கு அவனை நாடிச் செல்லும் புலவர் பாணர், விறலி முதலான பரிசிலர்களே எளிதில் செல்ல முடியும் என்பதைப் பின்வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

**"அமர்எனின்**
**திங்களும் நுழையா எந்திரப் படுபுழை" (புறம்.177: 4-5)**

என்றவழி, இம்மன்னனுடன் போர் புரிவதற்காக வருகைதரும் பகைவர்களின் நிழலும் நுழையாதபடி பொறிகள் பல பொருத்தப்பட்ட இட்டிவாயிலை தன்னகத்தே கொண்டது மல்லிகிழான் காரியாதியின் அரண் என்று கூறுவதனால் காரியாதியின் வீரம் எத்தகையது என்பது புலப்படுகின்றது.

**விருந்தோம்பல்**

மல்லிகிழான் காரியாதி என்னும் குறுநில மன்னன் தமது அரண்மனைக்கு வருகை புரியும் பரிசிலர்களை வாயில் சென்று வரவேற்று, குடநாட்டினைச் சார்ந்த வேடுவர்கள் காட்டில் வேட்டையாடிக் கொண்டு வந்து தந்த முள்ளம்பன்றியின் பசிய கொழுமையான தசைத் துண்டுப்பகுதிகள் கலந்த உணவுத் திரளினை தம்மிடம் வருவோர் அனைவருக்கும் விருந்தாக உண்ணக் கொடுத்து மகிழ்வான் என ஆவூர்மூலங்கிழார். பின்வரும் பாடலடிகளில் கூறுவதன் வாயிலாக இம்மன்னனின் விருந்தோம்பல் பண்பு பற்றி அறியமுடிகின்றது. இதனை,

**"குடநாட்டு**
**எயினர் தந்த எய்ம் மான் எறிதசைப்**
**பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் அமலை**
**வருநர்க்கு வரையாது தருவனர்" (புறம்.177: 12-15)**

என்ற பதிவு குறிக்கத்தக்கது.

<u>**மூவன்**</u>

சேரநாட்டினில் மேற்குக் கடற்கரையின் ஓரத்தில் அமைந்த நெய்தல் நாட்டினில் நெல் வளம் மிக்க நல்ல வளமான வயற் பகுதியினை ஆண்டு வந்தவன் மூவன் என்னும் குறுநிலமன்னன். இவன் போரினை பெரிதும் விரும்பும் பண்ணுடையவனாக விளங்கியுள்ளான். பரிசில் விரைந்து வழங்காமல் காலம் தாழ்தியமையால் இருந்தலைச் சாத்தனார் என்னும் புலவரால் இகழ்ந்து பாடப் பெற்றவன். எனினும்,

**"வாள் மேம்படுந" (புறம்.209 : 12)**

என்ற பாடலடிகளின் வழியாக, வாள் போரினில் மேம்பட்டு விளங்கக் கூடியவனே எனக் கூறுவதால் இவன் வீரம் புலனாகின்றது. மேலும், சாத்தனார் 'செருவெஞ்சோய்' எனவும் 'நின் நசைதர வந்து என்றும் சிறப்பிப்பதால் பரிசில் வழங்க சிறிது காலம் தாழ்த்தினாலும் புலவரைத் தக்கவாறு போற்றி பரிசில் வழங்கிஅனுப்பினான் என்றே கொள்ள முடிகின்றது.

<u>**வாட்டாற்றெழினியாதன்**</u>

வாட்டாற்றெழினியாதன் என்பான் "தெளிந்த கள்ளினை உண்டு களிப்பேறி குறவை ஆடுகின்ற சேரநாட்டினைச் சார்ந்த நீர் வளம் சிறந்த வாட்டார் என்னும் ஊருக்குரியவன். இவன் ஊக்கம் இல்லாதவருக்கு வலிய சென்று துணை செய்பவன்''[89] என்ற பண்பினைப் பெற்றவன். இவனைப் பற்றி மாங்குடி கிழார் ஒரு பாடல் பாடியுள்ளார்.

---

[89]. முனைவர் அ. மா. பரிமணம் (ப.ஆ), சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி. 6.

விருந்தோம்பல் பண்பு

வாட்டாற்றெழினியாதன் தனது நாட்டிற்கு வருகை தந்த பொருநர்கள் வெகுதொலைவினில் இருந்து வருகை புரிந்த காரணத்தினால்,

**"கொழுந்தடிய சூடு என்கோ**
**வளநனையின் மட்டு என்கோ**
**குறுமுயலின் நிணம் பெய் தந்த**
**நறுநெய்ய மறந்து கூட்டு முதல்**
**முகந்து கொள்ளும் உணவு என்கோ**
**அன்னவை பல பல" (புறம். 396: 15-21)**

என்ற நிலையில், உண்பதற்காக இறைச்சியின் தசைப்பகுதி நிறைந்த துண்டங்களை சூட்டுடன் பரிமாறியும் உடற்களைப்பு நீங்க பூந்தேறலான கள்ளினை வழங்கியும், சிறுமுயலின் தசைப்பகுதியினை மணமுள்ள நெய்யினால் வறுத்து அதனுடன் உணவினை பொன் தட்டுகளில் இட்டும் பிற பல உணவு வகைகளையும் வழங்கி மகிழ்ந்தான் என இவனின் விருந்தோம்பல் பண்பு குறித்து மாங்குடி கிழார் கூறுகின்ற காரணத்தினால் வாட்டாற்றெழினியாதன் நடைமுறைக்கு உகந்த வகையில் செயல்படும் ஆளுமைப் பண்பு குறித்து அறியலாகின்றது.

கொடைப்பண்பு

வாட்டாற்று பகுதியினை ஆண்டு வந்த எழினியாதன் தம்மிடம் நாள்தோறும் வருகை புரியும் இரவலர்க்கு,

**"யாமும் பிறரும் வாழ்த்த நாளும்**
**நிரைசால் நன்கலன் நல்கி" (புறம்.396: 29-30)**

என்ற நிலையில் களிற்றுடன் நல்ல பொன் கலன்களையும் வழங்கக்கூடியவன் என எழினியாதனின் கொடைப்பண்பினை எடுத்தோதுகின்றார் மாங்குடிகிழார்.

**நன்னன் சேய் நன்னன்**

சங்க காலத்தில் நன்னன் என்னும் பெயரில் கொண்கான நன்னன் வேள்மான், செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னன் என்று இருகுறுநில மன்னர்கள் இரண்டு வெவ்வேறு பகுதிகளை ஆண்டுள்ளனர் என்பதை சங்கப் பாடல்கள் வாயிலாக அறியமுடிகின்றது. இவர்களில் தொண்டை நாட்டில் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மா என்னும் பகுதியினை ஆட்சிபுரிந்து வந்தவன் நன்னன் சேய் நன்னன் ஆவான். ''தந்தை பெயரே மகனுக்கும் அமையும் அக்கால மரபு வழி இவன் தந்தை பெயரே இவனுக்கும் அமைந்தது. இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கூத்தரை இவனிடத்தே ஆற்றுப்படுத்தி, இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப்படையைப் பாடியுள்ளார்".[90] என்ற கருத்து இங்கு நோக்கத்தக்கது.

**வீரம்**

நன்னன் சேய் நன்னன் என்னும் குறுநிலத் தலைவன் தன்னுடன் பகைகொண்டு போர்புரியும் பகைவரின் உடல்களில் உள்ள தலைகளை தனியாக வெட்டியதனால் அவர்களுடைய குறையுடலினை பருந்துகள் சூழ்ந்து திரியுமாறு செய்த ஒளிபொருந்திய வாளினை உடையவன் என்றும், அசுரர்களை வென்ற முருகனைப் போன்ற ஆற்றலினை உடையவன் வீரம் குறித்து நன்னன் சேய் நன்னன் என்றும் பின்வருமாறு இவனது வீரச் சிறப்பினைப் பெருங்கௌசிகனார் எடுத்தியம்புகின்றார்.

**"பொருந்தாத் தெவ்வர் இருந்தலை துமிய**
**பருந்துபடக் கடக்கும் ஒள்வாள்" (மலை. 488 - 489)**

என்பது இவனின் வீரம் காட்டும் பகுதியாகும்.

---

[90]. முனைவர்.சி. சுப்பிரமணியன்( ப.ஆ), சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி - 4.

<u>கொடையுள்ளம்</u>

**"……… புகழுநர்க்கு**
**அரசு முழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு**
**தூத்துளி பொழிந்த பொய்யா வானின்**
**வீயாது சுரக்கும் அவன் நாள் மகிழ் இருக்கையும்" (மலை. 73-76)**

என்ற சான்றின் வழி, நன்னன் சேய் நன்னன் தனது பகைவர்களை போரினில் புறமுதுகிட்டு ஒடுமாறு செய்து அவர்களிடம் இருந்து திறையாகப் பெற்ற பொருள்களினை முழுமையாக தன்னிடம் வருகை புரியும் இரவலர்களுக்குக் கொடுத்த பின்பும் அமைதி கொள்ளாத உள்ளத்துடன், மழைத்துளியினை மிகுதியாகத் தரும் மேகம், மீண்டும் பொழிதல் போன்று தன்னிடம் பொருள் பெற்றுச் சென்றோர் மீண்டு வந்தாலும் அவர்களது தேவைக்கு அதிகமான பொருட்களை வழங்கி மகிழ, அவர்களது வரவினை எதிர்நோக்கி தனது அரியணையில் வீற்றிருக்கக் கூடிய கொடையுள்ளம் உடையவன் என இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் காட்டுகின்றார்.

இவ்வாறு பாடாண் திணைப் பாடல்கள் வழியாகவும் அவற்றிற்குத் துணை செய்யும் மற்ற சங்க இலக்கியப் பாடல்கள் வழியாகவும் குறுநில மன்னர்தம் ஆளுமைப் பண்புகளை அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

சங்க காலத்தில் குறுநில மன்னர்கள் சூடி இருந்த முடியானது குறுமுடி என்று அழைக்கப்பட்டதையும், தான் குறுகிய நிலப்பகுதினை மட்டும் வரையறை செய்து கொண்டு ஆட்சியின் கீழ் உட்படுத்தி ஆண்டுவந்தாலும் தம்மை நாடி வரும் இரவலர்களுக்கு அவர்களது தேவைக்கும் அதிகமா பொருட்களை வழங்கி மகிழும் உள்ளத்தினையும் தன்னை அடைந்தவர்களது, பசித்துன்பமானது கதிரவன் தோன்றியவுடன் மறையும் இருள் போன்று குறுநில மன்னர்களின் அவைக்கு இரவலர்கள் சென்றவுடன் மறைந்து விடுதலை காண முடிகின்றது.

புலவர்கள் தங்களது வறுமை குறித்த மன நிலையில் இருந்து விலகி இயல்பான மன நிலைக்குக் கொண்டு வருவதற்காக அவர்களது அழுக்கடைந்து பாசி படர்ந்து காணப்படும் ஆடையினை நீக்கி மூங்கிலின் தோலை உரித்தாற் போன்ற மென்மையான விலைமதிப்பு மிக்க ஆடையினை உடுக்கச் செய்து, பாம்பு சீறினாற் போன்ற பல நாட்களின் களிப்பு மிகுதியாக உள்ள கள்ளினை அருந்தச்செய்து, அப்புலவர்களின் உடற்களைப்பினை நீக்கி மன்னனும் அவர்களுடன் உடனமர்ந்து உணவுண்டு மகிழும் விருந்தோம்பல் பண்பினை மேற்க்கொண்டுள்ளனர்.

அஃறிணை உயிர்களிடத்தும் கருணை உள்ளத்துடன் இருந்த தன்மை குறித்தும் மற்றும் உலக இயல்பிற்கு மாறான தவறான காரியங்களில் ஈடுபடும் இழிவான குணங்களை உடையவர்களுடன் சேராமலும், தனது அவைக்கு வருகை புரிந்த பரிசிலர் அறியாது புரிந்த தவற்றினை அறிந்திருந்த போதும் ஏதும் அறியாதவன் போன்று அவர்கள் கூறும் கருத்தை விருப்புடன் கேட்டுக்கொள்ளும் இயல்பினையும் தன்னகத்தே கொண்டுள்ளனர். தன்னை எதிர்த்த பகைவர் தன்னை விட அளவிற் பெரிய படையை உடைய பெருவேந்தராக இருந்தாலும் அவருடன் தன்னால் இயன்ற வரை போரிடும் வீரத்தினை உடையவர்களாக விளங்கிய தன்மை முதலிய ஆளுமைப் பண்புகள்

எங்கனம் பாடாண்திணைப் பாடல்களில் குறுநில மன்னர்களிடம் அமைந்துள்ளன என்பதை விளக்கும் வண்ணம் இவ்வியல் அமைந்துள்ளது.

## சான்றெண் விளக்கம்

79. இரா. ஜெகதீசன், (ப.ஆ) அகநானூறு ஆய்வுக்கோவை,
தொகுதி-3. ப.1640

80. பெ. மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு
உருவாக்கமும், ப.157

81. ந. சுப்பிரமணியன், சமூகப்பண்பாட்டு தமிழக வரலாறு, ப.194

82. கா. சுப்பிரமணியன் - சங்ககாலச்சமுதாயம்,
ஆய்வுக்கட்டுரைகள், பக். 54-55

83. கு. வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில்
சமூக அமைப்புகள், ப. 82

84. வ. குருநாதன், சங்ககால அரச வரலாறு, ப. 393

85. முனைவர் இரா.சாரங்கபாணி, சங்க இலக்கிய
பொருட்களஞ்சியம், தொகுதி .1. ப. 101

86. ச.வே. சுப்பிரமணியன், சங்க இலக்கியம் எட்டுத்தொகை,
மூலமும் தெளிவுரையும், தொகுதி - 3, பக். 35-36

87. மேலது, ப. 81

88. மேலது, ப. 214

89. முனைவர் அ.மா. பரிமணம் (ப.ஆ) - சங்க இலக்கியப்
பொருட்களஞ்சியம், தொகுதி - 6, ப. 469

90. முனைவர் சி. சுப்பிரமணியன் (ப.ஆ) - சங்க இலக்கியப்
பொருட்களஞ்சியம், தொகுதி - 4, ப. 70

## முடிவுரை

“சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை” என்ற தலைப்பில் அமைந்து இவ்வாய்வேட்டின் வழியாகக் கண்டறியப்பெற்ற முடிவுகள் பின்வருமாறு.

சங்க இலக்கியங்கள் வரலாற்றுப் பதிவுகளாகவும், பண்டைய தமிழரின் வாழ்வினை எடுத்துக் காட்டும் சமுதாய ஆவணங்களாகவும், தமிழர்தம் படைப்பாற்றலை விளக்கும் இலக்கிய வளங்களாகவும் விளங்குகின்றன. குறிப்பாக புறநானூறு, பதிற்றுப்பத்து, ஆற்றுப்படை நூல்கள் சமுதாயத்தின் உண்மைக்கு மிக நெருக்கமான தகவல்களைப் பெற்று அன்றைய கால வாழ்நிலையை அறிந்து கொள்ள உதவுகின்றன.

புறப்பொருள் திணைகளுள் ஒன்றாக விளங்கும் பாடாண் திணை என்பது குறிக்கத்தக்க திணையாகும். மன்னர்கள், மற்றோரின் வெற்றியை உண்மை நிலையில் பதிவு செய்யும் திணைகளில் முக்கியமானதாக அமைவது பாடாண் திணையாகும். இத்திணையில் அமைந்த பாடல்களில் இடம்பெற்றுள்ள செய்திகள், மன்னர்களின் பெயர்கள், மன்னர்களின் வீரம், கொடை முதலானவற்றைக் கொண்டு தமிழ்ச் சமுதாயத்தின் முந்தையகால நிலையை தெளிவு பட அறிந்து கொள்ள முடிகின்றது.

அரசனுடைய அழியாப் புகழையும், அஞ்சாத வலிமையையும், தனக்கென்று வைத்துக் கொள்ளாது பிறர்க்கு ஈயும் வள்ளல் தன்மையையும், யாவர்க்கும் அருள் செய்யும் அருளுடைமையையும் வெளிப்படுத்தி நிற்கும் நிலையில் பாடாண் திணைப் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. இப்பாடாண் திணை வாயிலாக பெரு வேந்தர்களின், வள்ளல்களின், குறுநில மன்னர்களின் வீரம், கொடை சார்ந்த ஆளுமைப் பண்புகள் வெளிப்பட்டு நிற்கின்றன. இவ்வகையில் சங்க காலத்தை ஆண்ட மன்னர்கள் ஆளுமைப் பண்புகள் மிக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்ற முடிவைப் பெறமுடிகின்றது.

ஒரு தனிமனிதனுடைய எண்ணங்கள், செயல்படும்முறைகள், நடத்தைகள், அவன் பிறருடன் பழகும் முறைகள், மனப்பான்மைகள், அவனுடைய வாழ்க்கைத் தத்துவங்கள், அறிவாற்றல், உணர்ச்சிகள் ஆகிய அனைத்தும் சேர்ந்த தொகுப்பே ஆளுமை ஆகும்.

ஆளுமைப் பண்பு என்பது தற்காலத்தில் கோட்பாட்டு அளவில் வளர்ந்து மிகப் பெரும் துறையாக விளங்குகின்றது. வளர்ந்து வரும் இத்துறையின் கொள்கைகள், கோட்பாடுகள் அடிப்படையில் பாடாண் திணைப் பாடல்களை நோக்குகையில் பண்டைய கால மன்னர்களின் ஆளுமைப் பண்புகள் சீரிய முறையில் அமைந்திருந்தன என்று அறிய முடிகின்றது.

பாடாண்திணைப் பாடல்களில் காணலாகும் மன்னர்கள் தங்களது பகைவர்களிடமும், தம்மை நாடி வரும் இரவலர்களிடமும் நடந்து கொள்ளும் முறையின் வாயிலாக மன்னர்களின் ஆளுமைப் பண்புகள் வெளிப்பட்டு நிற்கின்றன.

மனிதர்களின் ஆளுமைப் பண்புகளை வகைப்படுத்தும் நிலையில் புலனுணர்வினால் செயல்படக் கூடியவர்கள், சுயசிந்தனையுடன் செயல்படக் கூடியவர்கள், உள்ளுணர்வில் செயல்படக் கூடியவர்கள், உணர்ச்சியுடன் செயல்படக் கூடியவர்கள் என நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ள முடிகின்றது. இந்நான்கு நிலைப்பாடுகளில் சங்க கால மன்னர்கள் பெரும்பாலும் உள்ளுணர்வினால் செயல்படத் தக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை இவ்வாய்வின் முடிவாகப் பெறமுடிகின்றது.

சங்க இலக்கியப் புறநூல்களில் அமைந்துள்ள பாடாண்திணைப் பாடல்களில் சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. பழந்தமிழ்ப் புலவர்களும் பழந்தமிழ் இலக்கியங்களைத் தொகுத்தோரும் மூவேந்தர்க்கும் (சேரன், சோழன், பாண்டியன்) சரிநிகர் சமானமான இடத்தை வழங்கியுள்ளனர். தொல்காப்பியரின் காலத்திற்கு முன்பே மூவேந்தர் ஆட்சி அமைப்பு நிலைபெற்று விட்டது என்பதும் இங்குப் பெறத்தக்க முடிவாகும்.

சங்க இலக்கியப் பாடாண் திணையில் மூவேந்தர்களில் சேர வேந்தர்களாக உதியஞ்சேரலாதன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணிநார்முடிச் சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை, ஒள்வாட்கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, பாலைபாடிய பெருங்கடுங்கோ, கோக்கோதை மார்பன், குடக்கோச் சேரல் இரும்பொறை, திருக்குட்டுவன், வஞ்சன் முதலான மன்னர்களும் சோழ வேந்தர்களாக சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி, நலங்கிள்ளி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், கோப்பெருஞ்சோழன், உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி, கரிகால் பெருவளத்தான் முதலான மன்னர்கள் குறித்தும் பாண்டிய வேந்தர்களான கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி, பல்யாக சாலைமுதுகுடுமிப் பெருவழுதி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், அறிவுடை நம்பி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் முதலான மன்னர்கள் குறித்தும் செய்திகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. மன்னர்களின் வீரத்தின் ஆளுமைப் பண்பினையும், தனது வீரர்களை வழிநடத்திச் செல்லும் தலைமைப் பண்பினையும், நாட்டினை நல்ல முறையினில் ஆளும் ஆட்சிச் சிறப்பினையும், தனக்கு இயற்கை வளத்தினாலும், பகைவருடன் போர் புரிந்தும் பெற்ற செல்வங்களை தன்னை நாடிவரும் அனைவருக்கும் கொடுத்து உதவும் கொடைத் தன்மை தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்பட்டு நிற்கின்றது.

மூவேந்தர்களும் தம்மை நாடிவரும் இரவலர்களை மகிழ்வுடன் வரவேற்று, வறுமை மனநிலையில் இருந்து இயல்பான மனநிலைக்கு இரவலர்களை கொண்டு வருவதற்காக இரவலர்களுக்கு புதிய ஆடையினையும், தேவைக்கு அதிகமான பொருட்களையும் கொடுத்து உதவும் கொடை தொடர்பான ஆளுமைப் பண்பினை காணமுடிகின்றது. சேரர், சோழர்,

பாண்டியர் என்னும் மூவேந்தர்களுள் சிலர் செய்யுள் இயற்றும் ஆளுமைப் பண்பினைப் பெற்றிருந்தனர். முடியுடை வேந்தர் மூவரும் புலவர்களிடமும், குறுநில மன்னர்களிடமும் நட்புடன் இருந்தமையினையும் அவர்களுக்கு இடர் ஏற்பட்டால் தனக்கு ஏற்பட்ட இடராக எண்ணி அதனை களைந்து மகிழ்வடையும் நட்புணர்வு தொடர்பான ஆளுமைப் பண்பினை அறியமுடிகின்றது.

பழந்தமிழகத்தில் சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, விரான் முதலானோரை முதல் ஏழு வள்ளல்கள் என்றும், அக்குரூரன், அந்திமான், கண்ணன், சந்தன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் ஆகியோரை இடையெழு வள்ளல்கள் என்றும், ஆய், எழினி, ஓரி, காரி, பாரி, நள்ளி, பேகன் ஆகியோரைக் கடையெழு வள்ளல்கள் எனவும் அழைப்பது மரபாக உள்ளது. சங்கப் புறநூல்களில் காணலாகும் பாடாண்திணைப் பாடல்களில் ஆய், எழினி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன் ஆகிய கடையெழு வள்ளல்களின் ஆளுமைப் பண்புகள் வெளிப்படுத்தப்பெற்றுள்ளன.

இவர்கள் தவிர, தன்னிடம் பொருள் வேண்டி வந்தோர்க்காக தனது தலையினை அரிந்து எடுத்துச் செல்ல தன்னுடைய உடைவாளினை எடுத்து வழங்கிய குமணன் போன்றோர் தம் சிறப்புகளும் பாடாண் திணைப் பாடல்களில் அமைந்துள்ளன.

இவ்வள்ளல்கள் உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாடு கருதாமல் அனைத்து உயிர்களுக்கும் கொடை அளிக்கும் இரக்க குணம் உடையவர்களாக விளங்கினர். இவர்களது வீரம், புகழ், தலைமைப்பண்பு முதலிய ஆளுமைப் பண்புகளை பாடாண் திணைப் பாடல்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

குறிப்பிட்ட சில சிறு நிலப்பகுதிகளைத் தன் ஆளுமைக்கு உட்படுத்தி பரிசிலர்க்குப் பொன்னும், பொருளும் கொடுத்து உதவி தனது பகுதிக்குட்பட்ட மக்களைக் கண்ணும் கருத்துமாகக் காத்துதவியர்கள் குறுநில மன்னர்கள் என்ற வகைப்பாட்டில் அமைகின்றனர். சங்க காலத்தில் பல குறுநில மன்னர்கள்

அரசாண்டுள்ளனர். இம்மன்னர்கள் பல ஊர்களைக் கொண்டதொரு குறிப்பிட்ட நிலப்பரப்பினை ஆண்டு வந்தனர் என்பது தெளிவாகின்றது.

சங்க இலக்கியப் புறநூல்களில் அமைந்துள்ள பாடண்திணையில் இடம்பெற்றுள்ள குறுநில வேந்தர்களான அவியன், அதியமான் மகன் பொகுட்டெழினி அம்பர் கிழான் அருவந்தையன், ஆதனுங்கன், இருங்கோவேள், இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோன், ஏறைக்கோன், ஒய்மான் வில்லியாதன், கடியநெடுவேட்டுவன், கரும்பனூர் கிழான், கொங்கானங்கிழான், சிறுகுடிகிழான் பண்ணன், சோனாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன், தாமான் தோன்றிக்கோன், நாஞ்சில் வள்ளுவன், நன்னன் சேய் நன்னன், பிட்டங்கொற்றன், பொறையாற்று கிழான், மல்லிகிழான் காரியாதி, மூவன், வாட்டாற்றெழினியாதன் முதலான குறுநில மன்னர்களது ஆட்சிச் சிறப்பு, கொடை, புகழ், வீரம், போர்ப்படையின் தலைமையேற்று அதனை வழிநடத்திச் செல்லும் தலைமைப்பண்பு போன்ற ஆளுமை குறித்த பதிவுகள் பாடாண் திணைப் பாடல்களின் வழி வெளிப்பட்டு நிற்கின்றன.

இவ்வகையில் மூவேந்தர்கள், கடையெழு வள்ளல்கள், குறுநில மன்னர்கள் என்ற வகைப்பாட்டினர் வீரம், கொடை, தலைமைப் பண்பு ஆகியவற்றினால் ஆளுமைப் பண்புகளைப் பெற்றிருந்த நிலையைப் பாடாண் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.

## துணைநூற் பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

1. சோமசுந்தரனார். பொ.வே - பத்துப்பாட்டு மூலமும் உரையும்,
முதற்பகுதி,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி.
மூன்றாம் பதிப்பு 1955.

2. சோமசுந்தரனார். பொ.வே - பத்துப்பாட்டு மூலமும் உரையும்,
இரண்டாம் பகுதி,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி.
நான்காம் பதிப்பு 1971.

3. துரைசாமிப்பிள்ளை, சு.ஔவை - புறநானூறு முதற்பகுதி,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
ஏழாம் பதிப்பு - 1971.

4. துரைசாமிப்பிள்ளை, சு.ஔவை - புறநானூறு இரண்டாம் பகுதி,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
ஏழாம் பதிப்பு - 1971.

5. சுப்பிரமணியன். ச.வே. - பத்துபாட்டு (முழுவதும்)
மாணிவாசர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2010.

6. ஆலிஸ் அ. (உ.ஆ) - பதிற்றுப் பத்து (மூலமும் உரையும்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு 2014.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1. மீனாட்சி சுந்தரம். அ - கற்றல் மற்றும் மனித வளர்ச்சி
உளவியல் காவ்யமாலா
பப்ளிஷர்ஸ், சின்னாளப்பட்டி,
முதற்பதிப்பு - 2009.

2. செங்கோல். சகோ. ம. - ஆளுமைத் திறனை மேம்படுத்தச்
சிறந்த ஆலோசனைகள்,
மணிமேகலைப் பிரசுரம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2001.

3. சுந்தரசீனிவாசன். எஸ். - ஆளுமை மேம்பாடு,
தாமரை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை.
மூன்றாம் பதிப்பு - 2013.

4. நாகராஜன். கி - கல்வி உளவியல்,
ஸ்ரீ ராம் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2017.

5. சிங்காரவேலு முதலியார் - ஆ. அபிதான சிந்தாமணி,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
பத்தாம் பதிப்பு - 2012

6. விசயராகவன். கோ. முனைவர் - தொல்காப்பியம் - பொருளதிகாரம் (உரைவளம்)
புறத்திணையியல் பகுதி 2,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு 2015.

7. மாதையன் பெ. - சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை.
நான்காவது பதிப்பு - 2012.

8. திருஞானசம்பந்தம் ச. முனைவர் - புறப்பொருள் வெண்பாமாலை (தெளிவுரை),
கதிர் பதிப்பகம்,
திருவையாறு,
முதற்பதிப்பு - 2012.

9. சுப்பு ரெட்டியார் ந. வித்துவான் - தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு 1974.

10. பாலசுப்பிரமணியன் கு.வெ. - சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,
எட்டாம் உலகத் தமிழ் மாநாடு,
பதிப்புச் சூழல் நிதி வெளியீடு,
முதற்பதிப்பு - 1994.

11. சுப்பிரமணியன், ச.வே. அறிஞர் - சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும்
தொகுதி 3,
மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
முதற்பதிப்பு - 2010.

12. சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ) - குறுந்தொகை,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக
வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு - 2007.

13. நாராயணசாமி ஐயர் அ. (உ.ஆ) - நற்றிணை,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக
வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு - 1952.

14. சதாசிவ பண்டாரத்தார் - பாண்டியர் வரலாறு,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,
திருநெல்வேலி.
ஏழாம் பதிப்பு - 1969.

15. துரைசாமிப்பிள்ளை, சு.ஔவை - சேரமன்னர் வரலாறு,
திருவளர் பதிப்பகம்,
தூத்துக்குடி,
நான்காம் பதிப்பு - 1968.

16. இராசமாணிக்கனார். மா. - சோழர் வரலாறு,
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை.
ஆறாம் பதிப்பு - 2016.

17. கோவிந்தன். கா. - சங்ககால அரசர் வரிசை
தொகுதி - க,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி.
முதற்பதிப்பு - 1955

18. கோவிந்தன் கா. - சங்ககால அரசர் வரிசை,
தொகுதி - உ,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி.
இரண்டாம் பதிப்பு - 1955.

19. இளம்பூரணார் (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2010.

20. குருநாதன். வ. - சங்ககால அரச வரலாறு,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சை.
முதற்பதிப்பு - 2001.

21. கௌமாரீஸ்வரி, (ப.ஆ) - திருக்குறள் பரிமேலழகர் உரை,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
எட்டாம் பதிப்பு - 2007.

22. விமலானந்தம், மது.ச. - அருமையும் பெருமையும்,
சேகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2007.

23. சுப்பிரமணியன். ந. - சமூகப் பண்பாட்டு தமிழக வரலாறு,
என்.எஸ் பப்ளிகேஷன்ஸ் வெளியீடு,
உடுமலை.
ஆறாவது பதிப்பு - 1994.

24. சோமசுந்தர பாரதியார். ச. நாவலர் - தொல்காப்பியர்
பொருட்படலப் புத்துரை
(புறத்திணையில்)
நாவலர் சோமசுந்தர பாரதியார்,
கல்வி அறப்பணிக்குழு,
பசுமலை, மதுரை.
இரண்டாம் பதிப்பு - 1965.

25. சுப்பிரமணியன. கா. - சங்ககாலச் சமுதாயம்,
(ஆய்வுக் கட்டுரைகள்),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
(பி)லிமிடெட், சென்னை.
முதற்பதிப்பு - 1982.

26. மாணிக்கவாசகம். ஞா - கலிங்கத்துப் பரணி விளக்க உரை,
உமா பதிப்பகம்,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு - 2010.

27. ஸ்ரீசந்திரன் . ஜெ - சிலப்பதிகாரம் மூலமும்
தெளிவுரையும்,
மைக்ரோ பிரிண்ட் (லி),
சென்னை,
எட்டாம் பதிப்பு - 2000.

## அகராதி

1. இராமகிருஷ்ணன். எஸ் (ப.ஆ) - க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, சென்னை. இரண்டாம் பதிப்பு - 2008

2. சண்முகம் பிள்ளை முத்து (ப.ஆ) - பெருஞ்சொல்லகராதி தொகுதி, இரண்டு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். முதற்பதிப்பு - 1989.

3. சாரங்கபாணி .இரா. முனைவர் (ப.ஆ) - சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி 6, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர். மூன்றாம் பதிப்பு - 2013.

4. சுப்பிரமணியன் சி. முனைவர் (ப.ஆ) - சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி 4, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர். இரண்டாம் பதிப்பு - 2013.

5. பரிமணம் .அ.மா முனைவர் (ப.ஆ) - சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி 6, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர். முதற்பதிப்பு - 2013.

# சங்க இலக்கியங்களில் பாடாண் திணை புலப்படுத்தும் ஆளுமை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர்(பி.எச்.டி) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ச. சதானந்தவேல்**

பதிவு எண்-1355/2016

நெறியாளர்

**முனைவர். கரு.முருகன்,**

தமிழ் உயராய்வு மையம், தமிழ்த்துறை,

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி.

தேவகோட்டை.





## அழகப்பா பல்கலைக்கழகம்

தேசிய தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA:3.64) தகுதி பெற்றது.

காரைக்குடி - 630 003

பிப்ரவரி - 2019

# முடிவுரை

''சங்க இலக்கியங்களில் பாடாண்திணை புலப்படுத்தும் ஆளுமை'' என்ற தலைப்பில் அமைந்து இவ்வாய்வேட்டின் வழியாகக் கண்டறியப்பெற்ற முடிவுகள் பின்வருமாறு.

சங்க இலக்கியங்கள் வரலாற்றுப் பதிவுகளாகவும், பண்டைய தமிழரின் வாழ்வினை எடுத்துக் காட்டும் சமுதாய ஆவணங்களாகவும், தமிழர்தம் படைப்பாற்றலை விளக்கும் இலக்கிய வளங்களாகவும் விளங்குகின்றன. குறிப்பாக புறநானூறு, பதிற்றுப்பத்து, ஆற்றுப்படை நூல்கள் சமுதாயத்தின் உண்மைக்கு மிக நெருக்கமான தகவல்களைப் பெற்று அன்றைய கால வாழ்நிலையை அறிந்து கொள்ள உதவுகின்றன.

புறப்பொருள் திணைகளுள் ஒன்றாக விளங்கும் பாடாண் திணை என்பது குறிக்கத்தக்க திணையாகும். மன்னர்கள், மற்றோரின் வெற்றியை உண்மை நிலையில் பதிவு செய்யும் திணைகளில் முக்கியமானதாக அமைவது பாடாண் திணையாகும். இத்திணையில் அமைந்த பாடல்களில் இடம்பெற்றுள்ள செய்திகள், மன்னர்களின் பெயர்கள், மன்னர்களின் வீரம், கொடை முதலானவற்றைக் கொண்டு தமிழ்ச் சமுதாயத்தின் முந்தையகால நிலையை தெளிவு பட அறிந்து கொள்ள முடிகின்றது.

அரசனுடைய அழியாப் புகழையும், அஞ்சாத வலிமையையும், தனக்கென்று வைத்துக் கொள்ளாது பிறர்க்கு ஈயும் வள்ளல் தன்மையையும், யாவர்க்கும் அருள் செய்யும் அருளுடைமையையும் வெளிப்படுத்தி நிற்கும் நிலையில் பாடாண் திணைப் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. இப்பாடாண் திணை வாயிலாக பெரு வேந்தர்களின், வள்ளல்களின், குறுநில மன்னர்களின் வீரம், கொடை சார்ந்த ஆளுமைப் பண்புகள் வெளிப்பட்டு நிற்கின்றன. இவ்வகையில் சங்க காலத்தை ஆண்ட மன்னர்கள் ஆளுமைப் பண்புகள் மிக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்ற முடிவைப் பெறமுடிகின்றது.

ஒரு தனிமனிதனுடைய எண்ணங்கள், செயல்படும்முறைகள், நடத்தைகள், அவன் பிறருடன் பழகும் முறைகள், மனப்பான்மைகள், அவனுடைய வாழ்க்கைத் தத்துவங்கள், அறிவாற்றல், உணர்ச்சிகள் ஆகிய அனைத்தும் சேர்ந்த தொகுப்பே ஆளுமை ஆகும்.

ஆளுமைப் பண்பு என்பது தற்காலத்தில் கோட்பாட்டு அளவில் வளர்ந்து மிகப் பெரும் துறையாக விளங்குகின்றது. வளர்ந்து வரும் இத்துறையின் கொள்கைகள், கோட்பாடுகள் அடிப்படையில் பாடாண் திணைப் பாடல்களை நோக்குகையில் பண்டைய கால மன்னர்களின் ஆளுமைப் பண்புகள் சீரிய முறையில் அமைந்திருந்தன என்று அறிய முடிகின்றது.

பாடாண்திணைப் பாடல்களில் காணலாகும் மன்னர்கள் தங்களது பகைவர்களிடமும், தம்மை நாடி வரும் இரவலர்களிடமும் நடந்து கொள்ளும் முறையின் வாயிலாக மன்னர்களின் ஆளுமைப் பண்புகள் வெளிப்பட்டு நிற்கின்றன.

மனிதர்களின் ஆளுமைப் பண்புகளை வகைப்படுத்தும் நிலையில் புலனுணர்வினால் செயல்படக் கூடியவர்கள், சுயசிந்தனையுடன் செயல்படக் கூடியவர்கள், உள்ளுணர்வில் செயல்படக் கூடியவர்கள், உணர்ச்சியுடன் செயல்படக் கூடியவர்கள் என நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ள முடிகின்றது. இந்நான்கு நிலைப்பாடுகளில் சங்க கால மன்னர்கள் பெரும்பாலும் உள்ளுணர்வினால் செயல்படத் தக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை இவ்வாய்வின் முடிவாகப் பெறமுடிகின்றது.

சங்க இலக்கியப் புறநூல்களில் அமைந்துள்ள பாடாண்திணைப் பாடல்களில் சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. பழந்தமிழ்ப் புலவர்களும் பழந்தமிழ் இலக்கியங்களைத் தொகுத்தோரும் மூவேந்தர்க்கும் (சேரன், சோழன், பாண்டியன்) சரிநிகர் சமானமான இடத்தை வழங்கியுள்ளனர். தொல்காப்பியரின் காலத்திற்கு முன்பே மூவேந்தர் ஆட்சி அமைப்பு நிலைபெற்று விட்டது என்பதும் இங்குப் பெறத்தக்க முடிவாகும்.

சங்க இலக்கியப் பாடாண் திணையில் மூவேந்தர்களில் சேர வேந்தர்களாக உதியஞ்சேரலாதன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணிநார்முடிச் சேரல், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை, ஒள்வாட்கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, பாலைபாடிய பெருங்கடுங்கோ, கோக்கோதை மார்பன், குடக்கோச் சேரல் இரும்பொறை, திருக்குட்டுவன், வஞ்சன் முதலான மன்னர்களும் சோழ வேந்தர்களாக சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி, நலங்கிள்ளி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், கோப்பெருஞ்சோழன், உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி, கரிகால் பெருவளத்தான் முதலான மன்னர்கள் குறித்தும் பாண்டிய வேந்தர்களான கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி, பல்யாக சாலைமுதுகுடுமிப் பெருவழுதி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், அறிவுடை நம்பி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் முதலான மன்னர்கள் குறித்தும் செய்திகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. மன்னர்களின் வீரத்தின் ஆளுமைப் பண்பினையும், தனது வீரர்களை வழிநடத்திச் செல்லும் தலைமைப் பண்பினையும், நாட்டினை நல்ல முறையினில் ஆளும் ஆட்சிச் சிறப்பினையும், தனக்கு இயற்கை வளத்தினாலும், பகைவருடன் போர் புரிந்தும் பெற்ற செல்வங்களை தன்னை நாடிவரும் அனைவருக்கும் கொடுத்து உதவும் கொடைத் தன்மை தொடர்பான ஆளுமைப் பண்பு வெளிப்பட்டு நிற்கின்றது.

மூவேந்தர்களும் தம்மை நாடிவரும் இரவலர்களை மகிழ்வுடன் வரவேற்று, வறுமை மனநிலையில் இருந்து இயல்பான மனநிலைக்கு இரவலர்களை கொண்டு வருவதற்காக இரவலர்களுக்கு புதிய ஆடையினையும், தேவைக்கு அதிகமான பொருட்களையும் கொடுத்து உதவும் கொடை தொடர்பான ஆளுமைப் பண்பினை காணமுடிகின்றது. சேரர், சோழர்,

பாண்டியர் என்னும் மூவேந்தர்களுள் சிலர் செய்யுள் இயற்றும் ஆளுமைப் பண்பினைப் பெற்றிருந்தனர். முடியுடை வேந்தர் மூவரும் புலவர்களிடமும், குறுநில மன்னர்களிடமும் நட்புடன் இருந்தமையினையும் அவர்களுக்கு இடர் ஏற்பட்டால் தனக்கு ஏற்பட்ட இடராக எண்ணி அதனை களைந்து மகிழ்வடையும் நட்புணர்வு தொடர்பான ஆளுமைப் பண்பினை அறியமுடிகின்றது.

பழந்தமிழகத்தில் சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, விரான் முதலானோரை முதல் ஏழு வள்ளல்கள் என்றும், அக்குரூரன், அந்திமான், கண்ணன், சந்தன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் ஆகியோரை இடையெழு வள்ளல்கள் என்றும், ஆய், எழினி, ஓரி, காரி, பாரி, நள்ளி, பேகன் ஆகியோரைக் கடையெழு வள்ளல்கள் எனவும் அழைப்பது மரபாக உள்ளது. சங்கப் புறநூல்களில் காணலாகும் பாடாண்திணைப் பாடல்களில் ஆய், எழினி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன் ஆகிய கடையெழு வள்ளல்களின் ஆளுமைப் பண்புகள் வெளிப்படுத்தப்பெற்றுள்ளன.

இவர்கள் தவிர, தன்னிடம் பொருள் வேண்டி வந்தோர்க்காக தனது தலையினை அரிந்து எடுத்துச் செல்ல தன்னுடைய உடைவாளினை எடுத்து வழங்கிய குமணன் போன்றோர் தம் சிறப்புகளும் பாடாண் திணைப் பாடல்களில் அமைந்துள்ளன.

இவ்வள்ளல்கள் உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாடு கருதாமல் அனைத்து உயிர்களுக்கும் கொடை அளிக்கும் இரக்க குணம் உடையவர்களாக விளங்கினர். இவர்களது வீரம், புகழ், தலைமைப்பண்பு முதலிய ஆளுமைப் பண்புகளை பாடாண் திணைப் பாடல்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

குறிப்பிட்ட சில சிறு நிலப்பகுதிகளைத் தன் ஆளுமைக்கு உட்படுத்தி பரிசிலர்க்குப் பொன்னும், பொருளும் கொடுத்து உதவி தனது பகுதிக்குட்பட்ட மக்களைக் கண்ணும் கருத்துமாகக் காத்துதவியர்கள் குறுநில மன்னர்கள் என்ற வகைப்பாட்டில் அமைகின்றனர். சங்க காலத்தில் பல குறுநில மன்னர்கள்

அரசாண்டுள்ளனர். இம்மன்னர்கள் பல ஊர்களைக் கொண்டதொரு குறிப்பிட்ட நிலப்பரப்பினை ஆண்டு வந்தனர் என்பது தெளிவாகின்றது.

சங்க இலக்கியப் புறநூல்களில் அமைந்துள்ள பாடண்திணையில் இடம்பெற்றுள்ள குறுநில வேந்தர்களான அவியன், அதியமான் மகன் பொகுட்டெழினி அம்பர் கிழான் அருவந்தையன், ஆதனுங்கன், இருங்கோவேள், இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோன், ஏறைக்கோன், ஒய்மான் வில்லியாதன், கடியநெடுவேட்டுவன், கரும்பனூர் கிழான், கொங்கானங்கிழான், சிறுகுடிகிழான் பண்ணன், சோனாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன், தாமான் தோன்றிக்கோன், நாஞ்சில் வள்ளுவன், நன்னன் சேய் நன்னன், பிட்டங்கொற்றன், பொறையாற்று கிழான், மல்லிகிழான் காரியாதி, மூவன், வாட்டாற்றெழினியாதன் முதலான குறுநில மன்னர்களது ஆட்சிச் சிறப்பு, கொடை, புகழ், வீரம், போர்ப்படையின் தலைமையேற்று அதனை வழிநடத்திச் செல்லும் தலைமைப்பண்பு போன்ற ஆளுமை குறித்த பதிவுகள் பாடாண் திணைப் பாடல்களின் வழி வெளிப்பட்டு நிற்கின்றன.

இவ்வகையில் மூவேந்தர்கள், கடையெழு வள்ளல்கள், குறுநில மன்னர்கள் என்ற வகைப்பாட்டினர் வீரம், கொடை, தலைமைப் பண்பு ஆகியவற்றினால் ஆளுமைப் பண்புகளைப் பெற்றிருந்த நிலையைப் பாடாண் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.